கணபதி துணை.

ராய பரம்பரைத் திருவாவடுதுறை யாதீனத்து

இலக்கணம் ஸ்ரீசிதம்பரநாதமுனிவர்

இயற்றிய

# நப்பாதிரிப் புலியூர்ப் புராணம்,

இஃது

திருப்பாதிரிப்புலியூர்ச் சந்நிதி வீதியிலுள்ள

திருக்கயிலாய பரம்பரைத் திருக்கோவலூராதீனப்

ரூகமெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகளால்

பரிசோதித்து

மேற்படி சுவாமிகளின் வேண்டுகோளின்படி

கூடலூர் டவுன்காலேஜ் தமிழ்ப்பண்டிதர்

ர-ா-ஸ்ரீ சிதம்பரம். மு. சாமிநாதையரவர்கள்

இயற்றித்தந்த வசனத்துடன்

சென்னை:

மதராசு ரிப்பன் அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

-ல மேடாவி

உ

கணபதி துணை.

# முகவுரை

பூவின்கிழத்திபுணர்திருமார்பனு
நாவின்கிழத்தியைக்குமந்தணனு
காவின்கிழத்திகவின்கொளிந்திரனுந்
தாவாவின்பத்தனிச்சுரர்பலரும்
மூவாஞானமுனிவரர்குழாமும்
பாவார்தமிழாற்பரசினாளருந்
தேவாதிதேவனுஞ்சிவக்கொழுந்தீச
னேவாவருள்பெற்றொருங்குடன்வாழு
மாவாழ்பாதிரிப்புலியூர்ப்புராணம்

வடமொழியி லுள்ளதெனறுந், தற்பரானந்தத் தனி
...சோதி, யுற்பவந் தொலைத்த வுறுவரோ டமர்ந்து, ...
...தெரிந்தாய்ந்த தீந்தமிழி, னிலக்கணப்பாவா விலையெ...
னவருந்த மடைந்திருந்த யான் திருக்காஞ்சித் தலபுரா...
...டித்துவரும்பொழுது அந்நூலாசிரியர் சரித்திரத்தா லவ...
... பன்...ருவருள் ஒருவராகிய திருக்கயிலாய பரம்பரை
...துறை யாதீனம் இலக்கணம் சிதம்பரநாத முனிவரா...
... டிருப்பதாகத் தெரிந்து அதைப் பார்க்கப் பேரவ...
...ல விடங்களில் விசாரித்தும் புத்தகங் கிடைக்கா...
...பவ. பின்பு திருவாவடுதுறை யாதீனத்தி லிரு...
...காலேஜ் தமிழ்ப்பண்டித ரவர்களாகி...
மே. ச... ...ாமையரவர்

# முகவுரை.

து. திருவிழாச்சருக்கத்தில் முதலில் நான்கு செய்யுட்களு மில்லா
து. இவையே யன்றி யதில் எழுவாய்க்குத் தக்க பயனிலையும்
னிலைக் கேற்ற எழுவாயுங் கிடைக்காத இடங்களும் உபமான
பமேய வித்தியாசங்களும் பலவாக இருந்தன. இன்னும் ஏட்டுப்
ரதி எழுதினோரால் நேர்ந்துள்ள பிழைகள் பலவுள. மெய், உயி
மெய் யெழுத்துகளின் வேறறி குறியாகிய புள்ளியும் இடையில
ல்லின விகற்பங்களு மில்லாதது. அதனைப் பரிசோதிக்கப புகுந்த
னே கல்வி கற்று வருந் தன்மையி னுள்ளேன். இந்நூலைப் பரி
சித்தற் கதிகாரியாவார் இலக்கிய விலக்கணத் தேர்ச்சியும் சைவ
ிர வுணர்ச்சியும் நிரம்பவுடையா ராதலின் எனக்கு மிந்நூலுக்
வெகுதூர மென்பது குன்றின்மே லேற்றிய விளக்குப்போல
ெற் றெனப் புலப்படுமாதலின் யான்விரித் தெழுத
வதில்லை. அப்படி யிருந்தும் இவ்வறபுதத் தலத்தின் பெருமை
லரு மறியச் செய்யவேண்டு மென்னுமவாவும், இவவரிய நூ
ருக்கவேண்டு மென்னு மாசையு மென்னைத் தூண்டினமை
சிற்றறிவுக் கெட்டிய அளவு பரிசோதித்து அச்சிட்டு
த லாயினேன்.

ணம் வடமொழியி லுள்ள புராணத்திற்குச் சிறிது
ல்லாதது. நாட்டுப்படலம் நகரப்படலமிரண்டும் பழை
களோ டொருங் கெண்ணததக்க கற்பனையையும், தமி
வகப்பொருள் புறப்பொருளிலக்கணங்களையுந் தழுவிய
றச் சரித்திரங்கள் பதினாறு சருக்கங்களாகப் பகுத்
ள்ளன. சரித்திரமுற்றும் வடமொழியி லுள்ள வண்ண
த்துள்ளதோடு பற்பல விடங்களிலும் அமமொழி
க்கப்பட்டு முள்ளன. இந்நூல் கல்விகற்கும் மா
ரா யுள்ளது. சிவநேசத்தை விருத்
மையையும்

சிவமயம்.

# சிறப்புப்பாயிரம்.

---

கூடலூர் டவுன் காலேஜ் தமிழ்ப்பண்டிதராகிய
சிதம்பரம். ம-ா-ா-ஸ்ரீ மு. சாமிநாதையரவர்க
இயற்றியது.

மாமேவு மலரொருபான் மணியொருபான் மற்றொ
இன் மேய,தேமேவு கனியொருபாற் குடமொருபாற் தே
செறிந்து மேவப், பூமேவு பலகால்கொண் டெழுந்து
-யெம் புராரி தம்மைத், தூமேவு பூசைபுரி செயல்கா
ாழுகும் பெண்ணை நாட்டில்.

தன்றாங்கு நறுங்கொன்றைத் தொடைதாங்கு
சிவனே யெங்குந், தான்றாங்கும் பரமனெனச்
ிர்த்துச் சாற்றன் மானக், கூன்றாங்கும் பிறைபூ
நிறைசிகரக் கோபுரங்கள், வான்றாங்கச் சுரர்நரை
வடபுலிசை மாமூதூரில்.

டிக்குச் சுரர்சித்த கந்திருவர் முனிவரர்க ளிமை
தொண்டர்குழாங் கொண்டுதவம் புரிந்தருளத் தொ
நீக்கிக், கண்டவர்பின் னிரயவழி காரு
ல்கி. விண்டவழும் பாடலத்தின் பூங்

# முகவுரை.

ஊயும் பாச மகற்றும் வழியையுந் தெளிவாகக் கூறுவது. தமிழ்ப் ·பருங் காப்பியங்கட்குள்ள வுறுப்புகள் குறைவின்றி யமையப்பெ ·ற் து. சமய குரவராகிய திருஞானசம்பந்த சுவாமிகளும் திருநாவுக் ரசு சுவாமிகளுந் திருவாய்மலர்ந்தருளிய திருநெறித் தமிழாகிய தவாரங்களினால் விதந்து கூறிய வருமைக் கதையினை யுடையது த்.துணைப்பெருஞ்சிறப்பினை யுடைய இந்நூலைத் திருத்துவதற்கு ·று பிரதி யின்மையால் கிடைத்த ஒரு பிரதியைக் கொண்டே ·ை சிற்றறிவிற் கெட்டியஅளவு திருத்தியிருக்கிறேன். இதிலுள்ள முகளை யெனக்கு எழுதித் தெரிவிக்குங் கல்விவல்ல சான்றோர் · மிக்க நன்றியுள்ளவனாக என்று மிருப்பேன்.

இப்புராணத்துள்ள சில சரித்திர முழுமை மயும் பலரும் எளிதில் துணரும் பொருட்டுப் பொழிப்புரை போன்ற ஒரு வசன ந தமிழாசிரியரும், யான் திருத்திய காலத்து திரம்ப ·வர்களும், கூடலூர் டவுன் காலேஜ் தமிழ்ப்பண்டித ம சிதம்பரம் மகா-ா-ா-ஸ்ரீ மு. சாமிநாலைதயரவர்கள ·இத்துடன் சேர்த் ·ச்சிட் டிருக்கிறேன. இம்மு ·றிக் கூட்டி முடித்த ·ஆண்டவைக் கொடியுயாத் ·வுளின திருவருளைச் சிந்திதுள்ளேன்.

இங்ஙனம்,

சிவசண்முகமெய்ஞ்ஞான சிவாசாரிய ·

---

உளங்காட்டு மன்புந்திரு நுதல்காட்டும் வெண்ணீறு மொளிறு மேனிக், கடங்காட்டுங் கண்மணியு நிலைகாட்டுந் துறவொழுக்கும் வின்பெற் றோங்கி, வளங்காட்டு மியற்றமிழைந் தியல்காட்டும் ஈலிவைத்தான் மலராண் மேய, தளங்காட்டு மலர்த்துறைசை முனி மன்சிதம் பரநாதன் றந்தான் மன்னோ. (ச)

அத்திருப்பா திரிப்புலியூர்ப் புராணமதை யரும்புலவர் நயக்கு மாற்றாற், பத்திகொடு பன்முறையு மினிதாராய்ந் தெழுதவோர் கைப் பழுது போக்கிச், சுத்தமதாப் பதிப்பித்து முற்றுவித்துத் தொடு கடல்சூழ் ஞாலந் தன்னிற், கொத்தார்ந்த புகழ்படைத்தா னியாவ னென வினவிடில்யாங் கூறுவாமால். (ரு)

தென்னவனு யரசுபுரி சிவபெருமான் றெரிந்ததமிழ்த் தெய்வ மும், பொன்னிவளம் பெருக்கச்சென்னி கோல்பெருக்கும் புகழ் மும் போந்தின் மாலை, மன்னவன்றன் வளநாடும் புலவர்கவில் பாருள்கொழிக்கும் வளஞ்சா றொண்டை, நன்னாடும் பொன்னாடு மன்னாடு நயக்குமுனைப் பாடி நாட்டில். (சு)

வினைதீர்த்துப் பவமொழிக்கும் வித்தகன்றன் றிணைநகரும் வினய மேய, கனைதுழாய் முகில்பூசை நனிபுரிந்து கரிசொழிந்த நக ரும் ஞானர், முனைவனூர் முப்புரத்தைச் சிரித்தெரித்த வியனகரும் முனைக்கு முன்னர்த், தனைநிகாக்குந் தம்பெருமான் பணிபுரிந்த தலை நகராம் புலிசை தன்னில். (எ)

நவலோ வெனநவில நனிமள்ள ரரிவாரி நாகங் காண, வாவலோ யர்குன்ற மெனவமைத்து வையகற்றி யதுல ராய, பால லோர் மணமுவப்பப் பண்டியினிற் பரிந்தளித்துப் பாடல்கொள்ளும், கோவலூர் ராமனைக் குருமணிகள் சிரமணியாக் குறிக்கப் பெற்றோன்

வஞ்சகஞ்செய் புலக்களிற்றின் வழிநடக்கு மனமடக்கி மாயை யெனனும், புஞ்சமலக் கட்டறுத்துப் புந்திபுரி செய்வலொழித்துப் போத மேவி,நஞ்சமணி மிடற்றிறைபி லிங்கமதை யங்கமதினலக்கப் பூண்டோர், தஞ்சமெனச் சரண்பணியப் பணித்தவரைத் தீனிபுரக் குந் தன்மை வாய்ந்தோன். (கூ

எழுத்துச்சொற் பொருள்யாப்பி னணியிட்டுக்கை யெழிலீசை யியல்பான் மேய, வழுத்துதுற வறத்தாலு மறத்தாலுந் திறந்தாலு வளர்ச்சி வாய்ந்த,விழுத்தகுநன் னடையாலு முடையாலுங் கொடை யாலும் விளங்கக் காட்டிப், பழுத்தறிவிற் பிறந்தபயன் பரித்துலகை பயனுயுற் பவித்த மேலோன். (ப

திருந்துதமிழ்த் தெய்வதநி னியலதனை முனிவர்கவ் றெய் நன்னூ,லருந்தவரா யீரடியான ... க நாற்பொருளையளந்து தந் மருந்தனைய மாமறைநூற் காப்பிய ... ற புராணநூன் மற்றெந்நூலு திருந்துமனத் தையமறத், தினங்கற்குஞ், சிறப்பதனிற் சிறந் தூயோன். (க

பவமகற்றும் பரப்பிரமஞ் சரவணவுற் பவனென்றே ப்ரதிட்டை செய்து, நவநவமா மணியாலு மலராலு நயந்துநனி நாளும் பூசை, தவம்புரிந்தில் லறந்துறந்து துறவறத்தி னியநெறிந்து தயங்கு மே மைச், சிவசண்முக மெய்ஞ்ஞான தேசிகமெய்த் திருநாமஞ் சிறந் ளானே. (கஉ

# சருக்க அகராதி.

மாதுரியபாகன்வளர்பாடலேசுரர்க்கு
மாதுரியபாகம்விளங்குதமிழ்—மாதுரிய
மென்றுதிருவாய்மலர்ந்தானெங்கோனறிருத்துறைசை
நன்றருளுமம்பலவாண ண.

வாலமதிசூடினன்பாதிரிப்புலியூர்வரலாற்றைவடசொல்லாலே
சீலமுனிவரர்கேட்பச்சூதமுனிசெப்பியமெய்த்திறந்தப்பாமே
ஞாலமதிற்றுறைசைவந்தசிதம்பரநாதமுனியாஞானராசன்
பாலலையிலமுதமெனச்செந்தமிழ்ப்புராவாயிரமாப்பகர்ந்தான்மன்றே

இவையேட்டுப்பிரதியிலுள்ளன. செய்தாரின்னாரென்று தெ
வில்லை.

உ

கணபதி துணை.

# திருப்பாதிரிப்புலியூர்ப்புராணம்

## காப்பு.

## வலம்புரிவிநாயகர்.

கருணைமதமுவட்டெடுப்பமுத்திவணத்திடைதிரிந்துகாளமேகத், தருணமதியுதயமெனுந்திலகநுதனித்திலப்பூணழகுசெய்ய, மருணனிசேர் *தெய்விகமுற்பவுதிகமான்மிகவிருத்தமாறத்தேவர், பொருணிறை பூசனையுவந்தவலம்புரிக்கைக்களிற்றிருதாள்போற்றி வாழ்வாம்.

### வேறு.

முன்னவாவியபழம்பொருள்யாவையுமுனிந்து
பின்னவாவியபெரும்பொருள்யாவையுநல்கும்
பொன்னவாஞ்சடைப்பாடலேச்சுரனருள்புதல்வன்
சொன்னவாறறிகளிற்றெழிற்றுணைமலர்ச்சரணே. (௨

---

* ஆதிதெய்விகம் என்பது காற்று, மழை, வெயில் முதலியவற்றா லுண்டாகுந் துன்பங்கள். ஆதிபௌதிகம் என்பது மனிதர், மிருகம், பிசாசு முதலியவைகளால் நேரிடுந் துன்பங்களாம். ஆதியான்மிகம் என்பது சரீரத்தைப்பற்றி வருந் தலைநோய் முதலியவையும் மனத்தைப்பற்றிக் காமக்குரோத முதலியவையுமாம். இது ஞானாமிர்தத்திற் கண்டது.

# பாயிரம்.

## கடவுள் வாழ்த்து.

### நடேசர்.

பூமேவுமயன் மாலுஞ்சிறுமறைவாத்தியமிபற்றப்புலித்தாளோனு
நாமேவுவியாகரணபாடியஞ்செய்பதஞ்சலியுநயந்துபோற்ற
வோமேவுபொருளகண்டசச்சிதாநந்தவெளியுருவமாகித்
தேமேவுமலர்மன்றுளுமைகாணநடம்புரிதாள்சென்னிசேர்ப்பாம். ()

### பாடலேசர்.

பூமேவுபாதிரிவின்படர்ந்தகன்றமணிக்கோயிற்பொலியமேவி
மாமேவுமாலயனுமூவிலைவேலம்மானும்வணங்கியேத்தத்
தாமேவுதொழிலைந்தும்பரையியற்றவனைத்துயிருந்தழைப்பவைகுங்
காமேவுபுகழ்ப்புலிசைப்பாடலேச்சுரன்பதத்தைக்கருதிவாழ்வாம். ()

### பெரியநாயகியம்மை.

உரையேறுசைவநெறிவளர்ந்தேறச்சம்மணரெலாமுட்கிமாழ்கிப்
புரையேறக்கண்டவர்களானந்தக்களிப்பேறப்புகழ்நாவேந்தை
கரையேறவிட்டபிராளொருபாகம்வளர்கருணைப்பிராட்டியான
தரையேறுபுகழ்ப்புலிசைப்பெரியநாயகிசரணந்தலைமேற்கொள்வாம்.

### அருந்தவநாயகி.

சொல்லாலும்வல்லாலுந்துணைத்திருமார்தெழுந்தடாந்தகுதை வென்ற, வல்லாலும்வல்லேனைவல்லானென்றிருசுடருமலர்க்கண்க் கொண்டே, யல்லாலும்படிபுதைத்தல்லாவிவவுலகுய்யத்தவத்தும் வெல்லு, நல்லாளைப்புலிசைநகராருந்தவநாயகியுமையைவாழ்வாம். ()

## தட்சிணாமூர்த்தி.

இருளவிலையாதிகளகலக்கடைக்கணளித்தறமாதியின்பாான்இ
ரொருமுழவேபுத்திமுத்தியாகவதிலொன்றைந்துமுணர்பத்தாகப்
பொருள்விரவப்பத்திலொன்றின்புணர்ப்பெழுத்தஞ்சக்கரத்திற்போ
தருபர்,தெருளவருள்பரமகுருதட்சிணாமூர்த்திபதஞ்சிந்திப்பாமால்.

## விநாயகர்.

நந்துமர்கரத்தோனயனகபிலனூளும்புரிபூசனையுவந்து
கொந்தாரளகச்சித்திபுத்திகொங்கைக்குடத்துளமுதருந்தி
யைந்தார்கரத்திற்கோடுகனிகலசம்பாசாங்குசமவிரச்
சிந்தாமணியையணிபுலிசைத்தெய்வக்களிற்றைறவணங்குவாம். (௮)

## முருகக்கடவுள்.

ஆரணமாகமமெனவைக்குஞ்செந்தமிழ்க்குங்குரவுபூண்டவருந்தேறக்
காரணமாமோரெழுத்தின்பொருள்விரித்துச்குருரமுங்கலங்கமாட்டி
வாரணமாதொடுவள்ளிநாயகிதன்மணிப்புயத்தின்மகிழ்ந்துவாழு
மேரணிவேற்புலிசைசக்கர்க்குமரவேள்ப்தமலர்களிறைஞ்சிவாழ்வாம்.

## வேறு. பாதிரிவிருட்சம்.

காதமூலம்பஞ்சசத்திமேனியாகநயந்துநால்
வேதந்தழைத்தாகமம்பூத்துவிமலபஞ்சாக்கரமணமாய்ச்
சோதியாண்டாகாரசுகோதயமாய்ச்சுத்தநறைவிரிக்கும்
போதவுருவாம்பாதிரியைப்புகழ்ந்துபோற்றிவணங்குவாம். (௧௦)

## வேறு. வயிரவக்கடவுள்.

அருணமலர்க்கோயிலிறையுச்சிமுடிக்கபாலத்தைத்தளிர்க்கையேந்தி,
யருணீர்ப்பலிக்கிமையோர்கடுங்கவலம்வந்துமாற்காவிநல்கி, மருண
ளிசெஞ்சூவிலேவேன்மணிநாக முடிக்கையிலைவயங்கவேந்திக், கரு
ணைமறம்பூண்டெழில்செய்கடைஞாழல்வயிரவரைக்கருதிவாழ்வாம்.

## திருநந்திதேவர்.

திருமறுமாலயன்முதலோர்மணிப்பிரம்பின்வழிபுரியத்தேவதேவன், கருணைவிழிகடைக்கணித்தபணிகள்புரிந்தத்துவிதக்கலப்பான்மும்மைப், பொருள்வினவிப்பெறுஞானபோதத்தைச் சனற்குமரர்போற்றநல்குங்,குருமணியைத்திருநந்திநாயகனைப்பரம்பரையிற்குறித்துவாழ்வாம்.

## தமிழாசிரியர். வேறு.

மலையினிற்கடலில்வானினிற் பெருமைமுனிவரர்வணமையயன்றறிய, வலைகடல்பருகிவிந்தியமடக்கியயிந்திரமகத்தியம்விளக்கித், துலையெனப்பூமிசமஞ்செய்தப் பொதிகைத்துணைவியோடினிதருளகொழிக்குந், தலைமைசால்கலசக்குறுமுனி துணைத்தாட்சரோருகநாளுமேத்தெடுப்பாம். (௧௩)

## திருஞான சம்பந்தமூர்த்திநாயனார். வேறு.

தாதுநிலையொன்றேழாமயிலையினிற்பண்ணினியுஞ்சமழ்ப்பவாக்கியேத்துமுதலுபமானவளவெவையும்பிரத்தியக்கத்தெய்தக்காட்டியோதுமுறைவேதமுமோதாதுணர்ந்தேமுத்தியுமீங்குதவியாண்ட நாதனெழிற்பூந்தராய்க்கவுணியநாயகன்பதங்கணயந்துவாழ்வாம்.

## திருநாவுக்கரசுநாயனார்.

இரையேறவிட்டகற்றூண்புணர்ப்பறச்சொற்றுணைப்பதிகந்திருந்தப்பாடி, விரையேறவிட்டநறையிதழிமுடியானருளால்வென்பிமேவ, *விரையேறவிட்டசமணறவுயிர்கள்பவக்கடனின்றென்றுமேறக்,கரையேறவிட்டபிரான்புகழ்விளைத்தநாவரசைக்கருதிவாழ்வாம்.

* விரை என்பது எதுகை நோக்கி முதற்குறைந்து விரையென நின்றது.

சுந்தரமூர்த்திநாயனார்.

புண்ணியப்பொலிந்தகைலைமால்வரையிற்காட்சியிற்புணரிருமடவார்
கண்ணவிவவுலகின்மெய்யுறுபோகநயக்குநாணனிதுனிதொலைய
வண்ணலைப்பலகாற்றூதினிலாடவவ்வருட்கலப்பினூல்வாய்ந்த
வெண்ணெயிலாண்டநாவலூர்நம்பிவிரைமலர்ச்சேவடிபணிவாம் (கசு)

திருவாதவூரர்.

'பேரருள்கெழிக்கும்பெருந்துறைவரைப்பிற்பிரனடிசென்னியிற்சூட்டி, யாருயிர்முதலாவனைத்துமீந்தெனையுமானந்தசுகோதயத்தழுத்தென்,, ஞேர்மொழிவினவஞானபோதத்தையுணர்த்தவப்பதிபசுபாசச்,சார்வரும்பொருளால்வாசகமளித்தவாதவூரடிகடாடொழுவாம். (கஎ)

சண்டேசுரநாயனு

வெண்மணலிலிங்கஞானநேத்திரத்தால்விதிமுறையாலயம்புரிந்து, கண்மணியானசிவபரம்பொருளைத்தாபனமுறையினுற்கற்பித், தெண்மலரான்பாலாதிபாற்பூசையியற்றுழிபிடர்செய்தாளிரண்டும், விண்மணிநிகர்க்கு மழுவினுற்றடிந்தவிறற் சண்டேசுரனையாம்பணிவாம். (கஅ)

திருக்கூட்டத்தார்.

மித்தையிவ்வுலகங்கானனீராக்கிவிரிபொருட்பரப்பெலாங்குவித்துத்
தத்துவதாத்துவிகங்களாற்குறித்துச்சாரிருமாயையினடக்கி
நித்தியவனைந்தானந்தவாரிதியினிலைதளராதவாறுவக்கு
மத்துவிதாத்தவித்தைவாழடியாரடிமலர்முடிமிசைப்புனைவாம்.(ககூ

சந்தானகுரவர்.

பன்னரும்பெருமைச்சைவசித்தாந்தபரம்பரைநந்தியால்விளங்கத்
தென்மொழிமுறையாற்போதமெய்ச்சித்திசிவப்பிரகாசமென்றின்ன
முன்வழிசார்பினுமாபதியார்க்குமுதன்மைசாலருணந்திதேவர்
பொன்னடிபரவும்வெண்ணெய்மெய்கண்டதேசிகர்பூங்கழல்புகழ்வாம்.

## திருப்பாதிரிப்புலியூர்ப்புராணம்.

### துறைசைத்தேசிகர்கள்.

சித்தாந்தசூத்திரபாடியம்புரிந்தசிவஞானச்செல்வர்தி,பத்தர்சூ
டாம்பணிதிருச்சிற்றம்பலதேசிகர்துறைசைப்பழமைமேய,மூத்தரா
ம்பலவாணக்குரவர்பணியுந்நமச்சிவாயமூர்த்தி,கோத்தார்ந்தமெய்
கண்டபரம்பரைவாழ்தேசிகர்தாள்குறித்துவாழ்வாம். (உக)

### மற்றையசிவநேசர்கள்.

ரசிவசோதிப்பிழம்பினவதரித்தவவடிவானபஞ்சசத்திக்
குருவமெனமலிந்தெழில்செய்பஞ்சசாதாக்கியங்களொன்றாய்மல்கப்
பொருவகல்காருண்ணியமேயிலிங்கவடிவாய்விளங்கும்புலிசைநாதன்
மருவுமருட்பணிபுரியுமடிநற்றொண்டரெனையாள்வல்லர்மாதோ. (உஉ)

வேதவேதாந்தாதியரும்பொருள்களெவற்றினையும்விளக்குமுண்மை
தரேயெனினுமரனடியார்பாலன்புநிலைநயவாராயி
னைதரேயிறைச்சிபுசித்தையபெரும்பாதகம்புரிவோரேவரேனும்
நாயகனடியார்க்கன்பினரேல்வர்மலர்த்தாள்புகழ்வாமாதோ. ()

### வாழ்த்து. வேறு.

திருவருட்புலிசையென்னுந்திருநகர்வாழ்கவாங்கு
மருவியவேதம்வேள்விமல்குமந்தணர்கள்வாழ்க
குருபரம்பரையும்வாழ்ககோவினம்வாழ்கவேந்தன்
பொருள்வளர்மேகம்வாழ்கவாழ்கவிப்புவியோரெல்லாம். (உச)

அற்புதப்புலிசைநாதனரும்பொருட்காதைசொல்வோர்
பொற்புறவெழுதுவோர்கள்புகழ்பவர்கேட்போர்பூமேல்
நற்பலபோகமைந்தர்பன்னியர்களிப்பவுண்டு
கற்பகநீழல்வாழ்ந்துகயிலைசென்றரன்றாள்சேர்வார். (உரு)

## அவையடக்கம், வேறு.

உன்னியபாயகனிமித்தகாரணமாய்ச்சகத்தியற்றக்குவமையாக,
மடமைசால்கடமுதல்வன்சபக்கமெனத் துணிந்துரைப்பர்வல்லோர்
நல்லோர், ' ரடிமையாயென்னையுங்கொள்பாடலேச்சரன்கதையாத
லாலே, விடைமைசாலெனதுதமிழிகழார்கள்புகழ்ந்துரைப்பரெவர்
க்குமேலோர். (உசு)

சிறுமகாரினர்தம்மிற்குழீஇப்புரியுமுண்டாட்டேச்சிற்றினோக்கிப்,
பெருமைசார்ந்தத்தொழிற்கே யுறுதியிருமுதுகுரவர்புணர்க்குமா
போல்,வெறுமைசார்மதியினேனியற்றுதமிழ்ப்பாடலையும்விழைந்து
மேலா, மறுமைசால்பொருள்புணர்த்தி யுரைப்பரிலக்கணப்புலமை
வழிவல்லோரே. (உஎ)

## நூல் வரலாறு.

தேவதேவருளுடையதிருநந்திநாயகன்பாற்சென்றுபோற்றிக்
காவலராலருச்சிக்குஞ்சனற்குமரற்கருளவவன்கருணைகூர்ந்து
யாவர்களுமபகர்ந்துய்யவேதவியாசனுக்குரைத்தவீரான்பானு
மேவரியபுராணத்திற்சவுனகாதியர்வியந்துவினவமேனாள். (உஅ)

சைவபுராணத்திலகுசதமருவுமுருத்திரப்பேர்சார்ந்தகோடி
மெய்வளர்சங்கிதையதனிலொருமூன்றுமுத்தரகாண்டத்துமேய
பைவளர்பாம்பணியணிந்தபாடலேச்சுரன்சரிதைப்பகுதியாவுந்
தெய்வ;முனிவரர்மகிழவமுதமழைபொழிவனபோற்றெரித்துமன்னோ

பொருவருமெண்வகைப்பத்திப்புரவுபூண்டுருத்திரசாதனப்பூணீறு
விரவுதிருமேனிமிசைப்பாற்கடலிற்றுவர்க்கொடியின்விரிகோடீரத்
துருமுதலாம்வியாசமுனிதொடுத்தமுறையுளங்கொண்டுசூலவுருத
னருள்விரவுசிவக்கொழுந்தினடிபரவியுலகுய்யவறைந்தான்மாதோ.

## பதிகம்.

திருவளர்பாதிரிப்புலியைசத்தலவிசிட்டந்தேவிவிழிபுதைத்தகாதை
யருண்மொழியாற்றலங்கடரிசித்தகதைபாடலமாவனஞ்சேர்காதை
மருவியவடவஞ்செய்தகதைபிரமசீலர்கதைமன்னுசித்த
வுருவொரோடகம்புரிந்தகதைகங்கைதவஞ்செய்ததுரைத்தகாதை.

அங்கிதவஞ்செய்தகதையருந்தவநாயகிக்கிறைவனருளுங்காதை
துங்கவருந்தவத்திறைவிபூசைவிதிதோன்றுபாடலத்தின்காதை
மங்கணர்சாபந்தீர்த்தகாதையுபமனியர்தவமருவுகாதை
புங்கவர்செய்புரச்சருக்கம்விழாச்சருக்கம்பதினாறுப்புகல்வாமன்றே

பாயிரம் முற்றிற்று.

ஆகச்செய்யுள் ௯௨.

---

## திருநாட்டுப்படலம்.

வள்ளல்யாவர்க்கும்வள்ளன்மைகொடுக்குமாற்குழுவும்
வெள்ளநோக்கிச்சென்றிரப்பவுண்ணணியேவெளுத்துப்
பள்ளவார்புனலுண்டுபின்கொடுத்திடப்படர்கா
லுள்ளமின்புறப்பசுமைவாய்ந்தொலித்துடன்மீண்ட.

வெள்ளநோக்குவெண்கந்தரம்விண்ணெறிப்படர்ந்து
தெள்ளுவெண்டிரையுண்டெறிரிந்தவாதெரிக்கின்
வெள்ளநீரருந்தத்தமிற்குழீயின்வேற்றவையோ
ருள்ளநெக்குறப்பசுமைவாய்ந்தொளிர்வதொத்திலகும்.

கந்தரக்குழாஞ்சலநிதிக்கிடருறக்கவர்கா
லுந்திசேருவர்நீர்முகச்சுழிவினையுணர்ந்து
சிந்துவெவ்வனன்முகத்தினூற்றடித்தெனச்சிதறி
யந்தரத்தெழுந்தாயிடைச்சொரிந்தனசிலவே.

அருளின்மேம்படுமுளத்தராம்பெரியவரறியா
மருளரீங்குசலத்தர்தீச்செய்கையைமதியார்
பொருள்கொண்டேவருமுய்வகைநாடுவோர்போன்று
தெருள்கொண்மேகமுந்தடித்திடித்திரைத்துச்சென்றனவே. (ச)

உய்யயாவர்க்குஞ்சிவனங்குறித்தவருவந்து
வெய்யராய்நிதிசேர்ந்துமற்றெதிர்மறைவிளையார்
மையறீர்கனக்குழுவுமாய்வடமணிவரன்று
மையுமுள்ளத்தோடமுதமேற்றிவணடைந்தனவே. (ரு)

படலமேகங்கள்கூடலிடைச்சுழிபடப்பருகு
மிடலின்வவவிபாறருங்கலந்தொடர்ந்துவிண்ணெழினு
மடல்குறித்துளங்கொண்டிடாதகற்றுமார்வத்தான்
மடலையயற்றவர்வருந்தினும்விழைவுறுவழக்கால். (சு)

சிற்றினத்தவராயினுந்தம்மெதிர்திளைத்தான்
முற்றுமேலராத்தெரிப்பதேபெரியவர்முயற்சி
செற்றநீக்கியகாரினமுவரையேதெளிக்கு
மற்றதன்றியேபாறயிர்மதுக்கடலடையா. (எ)

பிச்சையேற்றுணும்பெரியவர்க்கருத்திப்பின்னீந்த
மிச்சிலுண்ணேமேம்படும்விமலரின்விளங்கு
நச்சிவந்தினுங்கந்தரஞ்சொரிந்தநீர்நந்தார்
கொச்சைதீர்ந்துண்டுநித்திலங்கொழித்தவாறிதியே. (அ)

இந்திரன்றிருவாகனமேகமென்பதனூல்
வந்தகாலையில்வருணனேகுங்குமங்களபஞ்
சந்தரந்தருபச்சையுந்தொகுத்தணிந்தனைய
விந்திரத்தனிவில்லொடுசிறந்தகாரெழிலே. (கூ)

கிறையவுண்டுருண்முதிர்ந்தகாரினங்களர்நிலேநீர்ந்
திறைதரித்திலாந்தியங்கிரியின்வந்திறுத்த
பொலறயுயிர்ப்பவர்காலம்வந்துறிதெனுடிப்பொழுதுஞ்
சிறையுறப்பினுந்தரித்திடாநீர்மையிற்சிறக்கும். (௧0)

கார்க்குழாநந்திவலரயினைவட்டித்துக்கலந்து
போர்த்துமெய்யுறுபுணர்ச்சியிற்பொலிந்தனநோக்கி
ஞீர்க்குநாயகன்குறிஞ்சியாகிலமகட்கீந்த
வார்க்கொள்கொஙகையின்வண்ணமும்வனப்பும்வாய்ந்தனவே. (௧௧)

நந்திமால்வரைபுனிற்றிளங்கன்றெனநயந்து
வந்தகாரினமானெனமடிசுரந்தளித்தாங்
குந்தியோடுநீர்பாலெனவுவகைசெய்தொளிருங்
கந்தரந்திசைதிசைதொறுமமுதுகான்றனவே. (௧௨)

வீற்றுவீற்றுச்செல்கந்தரமமுதுண்டவியப்பா
லேற்றமானசந்தானமாகரணிபெற்றென்னப்
பாற்றிலாததோர்வடிவமாய்ப்பரந்தனசொரிந்த
தேற்றுமூலத்தின்செறிவினுவரற்றுச்சிறந்தே. (௧௩)

சொரிந்தகாரினஞ்சந்தனத்தொகுதியுஞ்சும்மை
விரிந்தவாவியுமேதினியெங்கணும்விளைவிற்
கரிந்தகானினுங்காவினுங்கண்ணகன்பரப்பு
மெரிந்ததாபத்துமிம்மெனச்சொரிந்திறுத்தனவே. (௧௪)

கொண்டல்வண்ணனிந்நிலகமள்கொழுநனுமுறையா
லண்டர்முல்லைநின்றேகியேகுறிஞ்சியிலணைவான்
விண்டுவோர்ந்தனத்துணைவிமேல்வீழ்ந்ததைநிகர்க்கு
மண்டுகோரிணங்குறிஞ்சியைப்புதையமண்ணியவே. (௧௫)

வெற்பினுச்சியிற்சொரிந்தனமேகங்கள்விரிந்த
கற்பகத்தளிர்ச்சாரலிற்சொரிந்தனகமழு
முற்பலத்தலர்வாவியிற்சொரிந்தனவும்ப
ரற்புதத்துறையிடங்களிற்சொரிந்தனவன்றே. (கசு)

சொரிந்தசோலையின்றிவலையுள்ளணைவுறுதுயர்ந்து
விரிந்தபூங்கொடிதைதபன்னசாலையின்விளைவார்
பொருந்தும்யோகிகள்புக்கரும்பூரணப்பொருளை
யருந்தியைம்புல்மாரினுமார்ந்திலாதவர்போல். (கஎ)

வேறு.

நந்திமால்வரையைக்கொண்டூவிரசதகிரியிற்செய்த
இந்திரசாலமானுந்திசைதிசையிறும்பூதெய்த
வந்தவெள்ளருவிவெற்பின்வயின்றொறுமிழியுந்தோற்றங்
கந்தரம்வெளுத்தமாயாகருவியுஞ்சிவமாமாபோல். (கஅ)

பன்மணிக்குவால்களெல்லாம்வரன்றியேபடரும்வெள்ளந்
தன்மனமயக்கால்வெவ்வேறறிவினாற்சார்தன்மையானு
முன்மருண்டொழுகுஞ்சிங்கமூதுகினிலருவியாற்றிற்
பின்மருண்டொழுகும்பல்பழிதபப்பிடிப்பான்போலும். (ககூ)

சந்தகிலிலவங்காதிசார்ந்தெழுகுமிக்குன்ற
மிந்திரன்மகட்குநாதனிருக்குமத்தாணியென்று
சந்தனங்களபந்தோய்ந்ததன்மையின்வயங்குமென்ப
வந்தரத்திழியுங்கங்கையனையவெள்ளருவிமாதோ. (உ0)

விண்ணகம்புதைத்தநந்திவரைமிசையிழிந்தவெள்ள
மண்ணகம்புதைப்பவந்ததோற்றத்தைமதித்துநோக்கிற்
பெண்ணையங்குடிலைனுமுன்புபிரான்றிருச்சடிலத்தேந்துங்
கண்ணகன்பெருநீர்க்கங்கைகவர்பெருங்காட்சித்தன்றே. (உக)

பலபலவாகமுலைப்படர்தருங்கலுழியெல்லா
நிலவரைப்பெண்ணையாற்றினிரங்கெழுந்துலவுந்தோற்ற
மலைவிலாவுருக்களொன்றுசாதியேயெனலாமன்றி
நலமிகுமவயவத்தோடவயவிநாட்டலாமால். (உஉ)

சந்தனத்தருவுங்கோங்குந்தண்ணறுவிறலின்கற்றைப்
பைந்துணர்த்தருவுஞ்சோதிமரத்தொடும்படரும்பெண்ணை
கந்தவேளிருக்கைசென்றுவடமுகக்கடவுள்போற்றிச்
சிந்துவைச்சாருந்தன்மைதெரித்தொளிபிறங்குமன்றே. (உந)

பொற்பிதிரனையபூவின்றாதுமேலாகப்போர்த்தாங்
கற்புதவுருவுமாகவணைதரும்பெண்ணையாறு
விற்பொலிமேருவெற்பின்றென்றிசைவிளங்குந்தெய்வ
நற்புகழ்படைத்தசாம்பூநதமெனவுரைக்கலாமால். (உச)

பலபலகுடிஞைவந்துபடர்தரும்பெண்ணையாற்றி
னிலனகழ்க்கோடுங்கால்களெண்ணிலநிரைத்தநீர்மை
நலமிகுதருமமெண்ணிலபேதத்தானயப்பவாங்கே
குலவியபோகமவ்வாறனந்தமாங்கொள்கைகாட்டும். (உரு)

குஞ்சரஞ்சிம்புள்சிங்கங்குலவரைமூலநின்று
பஞ்சரத்தோடுபட்சிசாலமும்பாதவத்தின்
மஞ்சரித்திரளுமற்றும்வரும்பெண்ணைநதியின்முன்பு
கஞ்சனேவிசுவரூபங்கற்பித்தானெனவியப்பார். (உசு)

எண்ணிலாநதிநதம்மென்றிருவகையவற்றுட்பூர்வ
கண்ணியநதிகள்பெண்ணாநவிறருமுலகவற்றுட்
புண்ணியப்போகமேலாவுதவியபுகழ்மைத்தாலோ
பெண்ணையென்றிதற்குநாமமிறைமையிற்பேசுமாறே. (உஎ)

ஐந்திணைதோறுஞ்சென்றப்பொருடரும்வியங்கோள்போல
வைந்திணைதோறுஞ்சென்றுவளர்தரும்பெண்ணையாறு
வைந்திணையெழுத்தினோர்சொல்லாகியமூலந்தானே
யைந்திணைப்பொருள்போலாங்காங்கப்பெயர்படைக்குமாதோ (௨௮)

ஐந்தொழினடாத்துமீசன்செயலுயிர்க்கருளுமாயை
நந்தலும்வினைக்குமீந்துமலந்தெறுநாளுமாங்கே
சிந்துபூந்துறை பால்வாய்ந்தபெண்ணைசேர்குறிஞ்சியாதிக்
கந்தியில்வளத்தைநல்கிப்பாலையையடக்குமாலோ. (௨௯)

முதற்பொருட்டோறுஞ்சென்றுகருப்பொருளனைத்துமுற்றும்
பதப்பொருடெரிவார்போல்வுரிப்பொருள்பழகித்தானு
மிதப்பொருளெழுவாய்முற்றிலெய்துசெந்தமிழ்போற்பெண்ணை
கதப்பொலிவகன்றுவாரிகோக்குற்றுக்கலந்ததன்றே. (௩௦)

திருமுனைப்பாடிநாடுவளத்தொடுசிறக்கப்பெண்ணை
வருபுனல்கால்கடோறுமண்டியாற்றுழிகடோறும்
பெருநிதிபிறங்கச்செய்யும்பெற்றியானிதிக்கோன்வைகு
மருமலியளகைதாழவானெனப்பிறங்குமன்றே. (௩௧)

செந்நெல்கன்னலின்முதலினுந்திருமுனைப்பாடிநாட்டின்
மன்னுநானிலத்தினைந்துதிணைவளம்வகுத்துக்கூற
வென்னளவைத்தன்றேனுமெதிரொலிபொருவநூலின்
சொன்னவாறுவமையாதியணிபெறத்தூக்கிச்சொல்வேன். (௩௨)

குறிஞ்சி.

வெற்புவிண்ணுலகின்மேற்போய்விளங்கவவ்வெற்பின்மீதி
லற்புதவகில்சந்தாதியடவியினுயர்ந்தவாங்கப்
பொற்புறுநீழன்மன்னும்பொலிவினாற்போலுமென்ப
கற்பகப்புதுப்பூந்தோவோரோக்கவினுமன்றே. (௩௩)

பருப்பதம்பரிதிப்புத்தேளுலகுறப்பாதவத்தி
னுருப்பொலிவிடபமிந்துமண்டலமுலவலாற்செங்
குருப்பொலிசுடரோன்மீக்கிழிருகரங்குவித்துச்செல்ல
விருட்படுங்குறிஞ்சிதன்பாலுரிப்பொருட்கிசையவன்றே. (கச)

செஞ்சுடர்க்கிரணங்கீழ்க்கட்சேறலாற்செறிந்தவிந்து
தஞ்சுடர்க்கதிர்கண்மீக்கட்சார்தலாற்கமழ்ந்தங்கும்
பைஞ்சுனைகுளூஉக்கட்கொக்கும்பருப்பதப்பண்பின்மேலா
விஞ்சியேவெப்பந்தட்பம்விரவியேவிளங்காநிற்கும். (கரு)

இருவகைப்புணர்ச்சியின்பமேவியகுறிஞ்சிவாழ்க்கைப்
பொருவரும்போகநோக்கியரம்பையாபுணர்ப்பாலொன்றே
மருவியதேவரெல்லாம்விழிதிமையாதுமாழ்கி
யருமையிற்குறிஞ்சிபுக்காங்காதரித்தமருவாரால். (கசு)

விற்பொலிபுருவச்செவ்வாய்விளங்கிழைக்குறமின்போக
மற்புதக்குறிஞ்சிவேட்டாங்கமர்ந்தனன்குமரவேள்பின
பற்பலமொழிவதென்னேபருப்பதமடவார்தங்கள்
கற்பினைநோக்கிவிண்ணிற்கரந்தனரரம்பைமாதர். (கஎ)

வரிக்கடைபேட்டினோடுமலர்மணங்கஞற்றியார்ந்து
விருப்பினின்மதுவுண்டின்பச்செவ்வழிவிளரிபாடும்
பொருப்பினிற்புணர்வோர்க்கேதம்புரியும்வேங்கையினைச்சாராப்
பருப்பதத்ததுசேர்பாரிசாதமும்பழித்தவன்றே. (கஅ)

ஊடலேயுணர்தலேனைப்புணர்தலென்றற்றமூன்றி
னூடியேபிரிவேயாதிநான்கவணெய்தாவாகிற்
கூடியபுணர்ப்பொன்றன்றிமற்றையகூடாவாலவ்
வீடெனவுரைக்குமின்பங்குறிஞ்சியார்விரும்பாவாறே. (க௯)

பைவிரித்தசையும்பாந்தட்பணத்தினைக்கவர்ந்துமஞ்ஞை
மெய்விரித்தெழிலிருந்தோற்றமிந்திரன்வேட்குநல்கக்
கைவிரித்தரத்தினத்தைக்கதிர்செயக்கொணர்ந்தாலொக்கும்
பொய்விரித்திருந்தமின்னேரிடைச்சியர்குன்றின்பொற்பே. (௪0)

இருவிசெய்நானம்வந்தவிளங்கிளிக்கூட்டலன்றி
யருவியங்குன்றமொக்குமதகளிறட்டார்த்துண்ண
வரியினமதற்குமமாப்பவரிக்கும்வள்ளன்மைபூண்டோர்
பெரியவர்சிறியரெனனப்பிரிக்கொணுவழக்காமன்றே. (௪க)

சந்தனமகில்கோங்கணேசேச்சரளமென்றினையவாதி
பைந்தருக்குலங்களோங்கறிக்கொடிபடியினுங்குன்றிற்
செந்தினையிறடியோடைவனமினைவசெறிந்துகுன்றர்
தந்திடவளரும்போகமுயன்றுறச்சாருமாறே. (௪௨)

அறையணிநல்லூர்கோவல்வீரட்டமாதியாக
விறையவனுமையாளோடுமினிதுறைகுறிஞ்சிதன்னின்
மறைமுதனுறையும்வெள்ளிவரையிமவானபொன்மேருக்
குறைவிடமென்னிலாங்கப்பெருமையாருரைக்கற்பாலார். (௪௩)

மாதவன்மோகினிப்பெண்ணுருவமாபவரப்புணர்ந்த
மேதகுமாணிகாதலிலிங்கமாம்விமலன்மேவும்
பூதரம்விளங்காநின்றகுறிஞ்சியின்பொற்புவாய்ப்ப
யூரதுவரைசெய்தேன்பொன்னுமியம்பொனுவளத்தவாமால். (௪௪)

## பாலை.

முல்லைநற்குறிஞ்சியென்னுமுதற்பொருட்பகுதியேமற்
றெல்லையொனறின்றிவேனிலண்பகலெரியுமஞ்சி
யல்லலுற்றழுங்கக்கன்னியவிரொளிகாட்டுங்கோட்ட
மல்கியபாலைமேன்மையறிந்தவாவகுத்துமன்றே (௪௫)

கரியமாலெழுந்துசென்றுகருங்கடல்குழியமண்டிப்
பரிபகூன்முதிர்ந்துபாலைச்செல்வுழித்திவலைபாய
வெரியெழுஞ்சுடரைப்போலுமின்னெனவிசைப்பருற்கை
பொரியெனத்தெறித்துவீழ்வவத்தழல்பொருதுமன்றே. (௪௬)

செஞ்சுடர்காலைமாலைச்செவவொளிபடைத்துவிண்ணின்
மஞ்சிவர்நாப்பணெய்திமருணிறத்தழலுந்தோற்றம்
பஞ்செனச்சூரல்பம்பிப்படர்தருமுருங்கைவாய்பூ
வெஞ்சமழற்பூத்தபோலும்பாலையினெரிசேர்ந்தன்றே. (௪௭)

## வேறு.

கறசமைந்திடக்கரும்றழல்பாலையிற்புறவு
ம்றசெயாடவரெயிற்றியர்பநத்தினைநோக்கிப
புற்செயங்குறுமபகன்றவெள்ளிடைப்புணர்ந்துறுவோர்
முற்செய்லீலையின்முகபலர்ந்துளங்கொளச்செயுமால். (௪௮)

வேறுரைப்பதென்பகவதியம்பிகைவிமலை
யாறுசெஞ்சடையணிபிராற்கினியவாமன்னை
தேறுநண்பகலொழிந்தியாமத்தவண்செல்வாள்
கூறுகூளியுமதலத்தடியுறுகொதிப்பால். (௪௯)

ஆலகாலமும்பாலையுமொக்குமற்றவற்று
ளாலவாருழம்குமரியைநீலியென்றியம்பப்
பாலைசெய்ததுமபரன்களத்திடைக்கறுத்த
போலுமாலமேலெதுபெரிதெண்ணுமின்புலவீர். (௫௦)

## முல்லை.

நாரணப்பிரான்வைகுபங்கடனந்தையாதி
யாரணத்தொறுமாயுதித்தடைதருமுல்லைக்
காரணத்தினைக்கருதியேகணணன்வந்துதித்துத்
தாரணிக்கெலாமிக்கதன்னிடமெனவிருந்தான். (௫௧)

அமுதவார்கலிவயிறுளைந்தின்றவானமுதை
யமுதருண்ணவீந்தனனஃதன்றியேயயன்மா
லமுதநல்கலின்வளந்தருமுல்லையானமுதை
யமுதர்பாற்கள்ளியுண்டனனந்நிலச்சுவையால். (௫௨)

கரந்துபாற்கடற்புத்தமுதுண்டவக்கவிஞற்
புரந்தரப்பெயர்முதலியோரண்டராய்ப்பொலிவா
ரரந்தைதீர்த்தருள்கவவியநாடொறுமயில்வோர்
வரந்தருமுல்லைக்கண்டராய்வாழ்வதும்வழக்கால் (௫௩)

குறிஞ்சிமுன்னதென்றுருவகைக்கோவருத்தனத்தை
யறஞ்செய்தன்கையாற்பரித்தொருமுல்லையான்புரந்தான்
மறஞ்செயும்பிரிவுற்றவரிருப்பதென்வழக்கைப்
புறம்பதாக்கியேபூமியோடுறைந்தனன்முகுந்தன் (௫௪)

கட்டிவிட்டசேத்தழுவியகாளையர்தழுவ
விட்டமுற்றுறுமென்பர்களிடைச்சியரிழுத்தி
னொட்டறக்கடைந்தெடுத்தமோருதவுமங்கையரைத்
தொட்டானன்னிலஞ்சுரருறுமெனவண்டர்சொல்வார். (௫௫)

பிரிவிரங்கலும்பேதுறுநீர்மையாற்பிரித்துப்
புரிவுமுன்றனுட்புணர்தலுமூடலும்போலா
தருவம்வாய்ப்புறவொத்தவணிருத்தலினன்றே
மருவுமுல்லையாரிடைச்சியரிடையராய்மலிவார். (௫௬)

முயலுமிந்துவினமுதுணப்புகுந்ததுமுல்லை
வியலுமானிறைதிருக்கரத்தெழிறருசுகன்பாற்
பயிலும்வாரணமித்திணையுதித்தபான்மையினா
லயிலனேற்றினிலுதித்துமால்கோப்புரந்தமர்ந்தன். (௫௭)

கரூழிநீருறுவருடத்திற்கனைபொருதோடி
யளூழிவற்றுநீர்ப்பசையறக்காயுமாய்தொடியார்
வெளூழிவண்பொருள்வீசலின்மோகித்துவிடுங்காற்
செளூழிக்காணினுமெண்ணுறுமடப்பத்தைத்தெரிக்கும். (ருஅ)

கொன்றைபூத்தொளிர்மேருவைநிகர்த்தலிற்குழக
னின்றநீர்மையைத்தெரிப்பக்காய்பசுங்கொடிநிகர்ந்தாங்
கொன்றணந்தமாய்விரியுமப்பனையுருவொப்ப
மன்றக்காணுனர்க்கற்புதவுருவமாய்வயங்கும். (ருகூ)

பன்னிறத்தனவரகொடுசாமைபற்பதங்க
டன்னையுண்பதுபருகுவதமுதமுந்தயிரும்
பொன்னைவென்றபேரொழிலினராய்ச்சியர்பொதுவ
ரென்னையோமலிபூவையினுருவமாயிருப்பார். (சூ0)

ஏறுகோட்புறைமுழக்கமும்வேய்ங்குழலிசையு
மாறுகாற்பறைவண்டினமுழக்கமுமாயர்
கூறுமார்ப்பொலிகுரவையின்முழக்கமுமல்லால்
வேறுமூவினத்தொலிகளுந்தனித்தனிவிரியும். (சூக)

மருதம்.

இன்னமுல்லையையுடுத்தயலெழில்பெறவிளங்குந்
தன்னையொப்பரும்பழனத்தின்வளமைசாற்றுதுமா
லன்னம்வைகியபங்கயவாவிநீருறுது
கன்னலட்டசாறொழுகியேசிறைதருங்கால்போல். (சூஉ)

வேறு.

சந்தனத்தருமமுற்றும்பரியெனநிறுத்திச்சாந்தப்
பைந்தழைபலாலத்திட்டவரவினைவிணைத்துப்பாங்கி
னுந்துமிழ்மணியுங்வேயின்முத்தமுஞ்சொரிந்துநர்ளுங்
கொந்துகொந்தாகக்காங்கள்ளாதுக்குவார்குடிகளுதோறும். (சூங)

காவின்வாய்கவருநீர்போய்க்கழனிகணிறைத்துவாவி
நீலமார்ந்தலருமோடைபொங்கர்வைப்பிடநிறைக்குஞ்
சூலவோருகரத்திட்டவோதனஞ்சாரநாடிப்
பாலவூமெழுபத்தீராயிரத்தினும்பரகுமாபோல். (௫௪)

நிலனும்பங்குரமும்பாய்ந்துநிலைபெறநிறுத்துநின்ற
சலமும்கண்ணோடியாக்குஞ்செய்வினைமாக்கடாமும்
பலநியமங்கொள்ளாராயினும்பயிரும்பூவுந்
தலமதிற்பிறவிபேதச்சார்புபோலனந்தமாமால். (௫௫)

வெண்ணிறங்கருமைசெம்மைபடைத்தசேமேதிகட்டி
மண்ணினையலத்திண்கோட்டால்வடுச்செய்துமாற்றுந்தோற்றங்
கண்ணகன்பரப்புவாய்ந்தககனத்தின்கருவிக்கொண்மூ
நண்ணியவுருவம்பன்மைச்சிறுவரிநலமுங்காட்டும். (௫௬)

உழுதுசாறெளிந்துகங்குனிறத்தவாயொத்தசெய்யிற்
புழுதில்வெண்முளையனந்தம்பரப்பநந்தீன்றமுத்தம்
வழுவறவிலங்குந்தோற்றம்வானிடையுடுவுஞ்சிற்றுக்
கழுமநீர்மயலும்போலக்கலந்தொளிர்காட்சித்தாமால். (௫௭)

வெண்ணிறந்திரிந்துபச்சைநிறத்தவாய்விளங்கும்பைங்கூழ்
மண்ணகம்புதையப்போர்த்தோர்மேனியாய்வயங்குந்தோற்ற
மண்ணறவொருபாலாகமுமையவள்கலந்தவாற்றான்
மண்மகண்மாறனுகமகிலமுங்கோடன்மானும். (௫௮)

அந்தரத்தரம்பைமாரையுவர்த்தகவிகைகயைவேட்ட
விந்திரற்கினியவாகவேத்திநாற்றெடுத்துநட்ட
சுந்தரக்கழனிமாதர்தொகையினைத்தோகைநோக்கித்
தந்தமக்கினமென்றெண்ணிச்சிறைவிரித்தவண்போற்சாரும். (௫௯)

களைகளைப்பருவம்வாயபபவுற்பலங்கமலநீலம்
வளவியாறுந்தேனூற்றிக்கமழ்ந்தவாசத்தவேனு
மிணையவைகூடப்பற்றியகற்றுவரின்பம்வீட்டின்
விளைவுறப்பரிவோர்போகமேவினுங்கடியுமாபோல். (எ0)

புல்லர்தஞ்சார்புபற்றிக்கயவராயுறினும்போந்து
நல்லர்சென்றவரைப்பற்றிநற்கரையேற்றுமாபோப்
வல்லனதனத்தானேஞ்சிற்றிடைமடவுழததிமார்க
ணல்லபங்கயநீலாதிநாடியேகளைக்கணுய்த்தார். (எக)

பங்கயங்குமுதநீலமணிச்சஞ்சைவலமும்பாரிற்
றங்கடமூறுப்பிற்கஞ்சிக்கயத்தினிற்சார்ந்தவென்றே
யங்கதற்கிரங்கிவந்தாங்ககன்களையேற்றுவார்போற்
றிங்கள்வாண்முகத்துமின்னூரீர்த்தகன்கரையிற்சேர்ப்பார். (எஉ)

புண்ணியம்புரியுங்காலைவினைக்குறைபொருட்டாழ்வாதி
யெண்ணரும்போகவாஞ்சையறிவினைமையிவற்றூலுற்ற
வண்ணரும்பாவமாற்றவறமவனொளிருமாபோல்
வண்ணவான்சாலியெல்லாங்களையறவளர்ந்தவன்றே. (எங)

பாசொளிபடைத்துமுற்றிக்கணுக்கொண்டுபதத்தினமள்ள
ராசகனீர்கால்யாத்துக்காத்தலினமுதகர்ப்பத்
தேசொருநிறத்தின்மன்னுஞ்சேர்ந்தபைசந்திவாக்கி
னோசைகொள்வன்னபேதமுறுமுறைதெரிக்குமன்றே. (எச)

வேறு.

சூன்முதிர்ந்துபைங்கருவுயிர்த்திளங்குராறுவன்றிப்
பானிறத்தவாய்ப்பசந்துபின்பன்னிறம்படைத்த
மேன்மைசான்கதிர்ச்சாலிகள்வளமுதல்விரிந்த
பான்மைசாலருணவந்தருபேதத்திற்பயிலும். (எரு)

## வேறு.

எண்ணிலாக்குடி கடத்தமிறைறவனைவணங்கவன்னோர்
மணமெனருங்காளும்வேந்தர்மலர்ப்பதம்வணங்கவேந்தர்
பண்ணியப்பொருளாமீசன்பூவடிவணங்குமாபோல்
வண்ணமான்சாலியெல்லாமவரன்முறைவணங்குமன்னோ. (எசு)

தரையினின்முதிர்ந்துசாய்ந்துதயங்கொளித்தரளமுற்று
நிரைநிரைபரப்புஞ்சாலிபருவத்தானிவப்புநோக்கி
யுரையிடைமள்ளர்நாவலோவெனவரற்றுமோசை
புரைபெறுவானம்புக்கப்புலவர்க்குமமுதமாமால். (எஎ)

கூனிரும்பங்கைப்பற்றியரிகதிரரியைக்கூட்டித்
தேனிருன்மானயாத்துச்சிரமிசைத்தரித்துவந்து
வானுறப்போக்கிமண்ணின்மாட்டிவைவேறதாக்கிப்
பானிறவெண்ணெல்செந்நெல்பருப்பதநிகர்ப்பவுய்த்தார். (எஅ)

மன்னர்கோணீக்கிநின்றசாலியின்வளத்தாற்றெய்வந்
தன்னிகர்விருந்துமறறைச்சுற்றமுந்தழுவிநாளுஞ்
சொன்னதென்புலத்தார்க்கீந்துமின்றவைதொகுத்துப்போக
மன்னவேயறத்தினசார்பால்வாழுங்குடிகளெல்லாம். (எகூ)

கன்னலுங்கமுகுந்தெங்குங்கதலியுங்ககனமேவிப்
பொன்னகர்நோக்குமாபோலோங்கியபொலிவுநோக்கின்
மின்னிகர்தளையின்மாதரவயவமேன்மைகாணி
னின்னனவுவமையென்றுங்காம்பையர்க்கிசைப்பபோலும். (அ0)

அசினியரம்பையன்றியாசினியரம்பையென்பார்
காசொளிர்கனகமன்றிக்காசொளிர்கனகமென்பார்
பூசலும்புணர்ப்புமன்றிப்பூசலும்புணர்ப்புமோர்பால்
வீசலும்விளைவுமன்றிவீசலும்விளைவுமோர்பால். (அக)

அதிகைமாநகரமென்னுமற்புதப்பதியுமாங்கே
புதிய்போதவிழ்க்குஞ்சோலைப்பொழில்வளர்நாவலூரும்
பதிகராய்த்தடுத்தாட்கொண்டவெண்ணெயாம்பதியுமாங்கே
கதியருட்டுறையூரின்னகண்ணுதனகர்களாங்கே. (அஉ)

நெய்தல் வேறு.

மற்றமருதத்தினயனெய்தல்கழிமன்னும்
பற்றலரைவென்றமதப்பாணமினிதோங்கு
மற்றதனயற்பொருநல்லார்கலியினேசை
வெற்றிமுரசத்தினொடுசங்கினொலிமேவும். (அங)

மணந்தமடமங்கையர்மகிழ்ந்துகளிதூங்கத்
தணந்திடைநுடங்குமடமங்கையர்கள்சாய
வணங்கினொடுமோகைபுரியார்கலியலைக்கைத்
துணங்கையொலிமாரன்முரசார்ப்பவிடைதோறும். (அச)

தண்டரளம்வெள்வளை துகிர்க்கொடிதயங்கத்
தெண்டிரைமுழக்கினொடுவீசும்விலைதோர்ந்து
கண்டல்பொதிநீத்துதவுகின்றகனகத்தின்
ஒண்டமஃதொத்தலர்வநெய்தறுறைதோறும். (அரு)

வாரிசொரிமுத்தினெதிர்முத்தநிரைமானக்
காருலவைநாகமுகிழ்செய்துவுறல்காணிற்
பாரினில்வெளிப்பொருள்பகர்ந்தகவிமுன்னந்
தேரவிரிகற்பனைதெளித்தகவிமானும். (அசு)

காலையினும்வெய்யவன்மதிக்கடவுள்காமர்
மாலையினுமிங்குலிகவண்ணமொடுமென்னல்
வேலையினுறுந்துகிர்விரித்தவொளிசூழ்குங்
கோலமெனலன்றியினைகொண்டீபிறிதன்றே. (அஎ)

பரத்தியருணக்குகயல்பற்றுபுரேப்ப
வரற்ஞெலியிஞர்கலியிஞேதையுமடங்கு
முரட்டபமுளத்தினருமாதர்முனமுற்று
விரப்புளரபரிப்பதுலகத்தியல்பதாமால். (அஅ)

அலைத்திவலைமுத்திஞெடுவீசுவவரற்றிச்
சிலைத்தநுதலார்கணவர்தேர்ச்செலவுநோக்கித்
தலைத்தலைபுலம்புதுயர்தாமுறுவபோலு
மலக்கண்ணுறுமத்துயரம்யாரதுசகிப்பார். (அகூ)

ஆம்பலொடுநெய்தனிரைவத்தலர்வகாலை
சாம்பிமுகமாழ்குவதனித்தனிபுலம்பிக்
கூம்புமடவார்களொடுகூடியவர்பொற்பின்
கீம்பனையதோளியர்கலந்தவரையொத்தே. (கூ0)

நெய்தல்வளமற்றினிவிரிப்பதெவனேர்ந்து
மையலறுநாற்றிணைவளம்படவிதித்தப் ·
பையவருகின்றபயவாரிதியபாங்கிக
மொய்யொளியவுப்பிரதம்யாவையினுமுந்தும். (கூக)

தத்துபணைமுல்லையினுநெய்தறலையென்னச்
சத்தியவண்வந்தவதரித்ததவமேயோ
முத்திஞெடுசெங்குகயல்வித்துருமமுப்பு
வித்துபவரின்றிவிளையும்பொருள்களெல்லாம். (கூஉ)

பரத்தியருணக்குகயலுண்டுபனைநீருண்
டிரத்தகொடியோடுமடவாரவணுரைப்பார்
வரக்கரைதியெங்கொழுநரொன்னவுளமன்னச்
சரக்கொடுபுலம்பரவமேகநிரைதாழு (கூரு)

தேரொமேகன்றவவர்செப்புரைமருமற்
காரொபுணர்ந்துவருகின்றசெயல்காட்டுங்
தாரொமேவிந்தபுயமனனர்சலதிக்க
ணேரொடுநடங்குகொடிவங்கமுடனேய்வே. (கச)

பத்திமுதிரப்பர்கரையேறுபுலிசைப்பான்
முத்திதருசோபுரமுத்றலமலிந்த
கொத்தலர்செய்புன்னைமணம்வீசுகுலைநெய்த
லித்தகைமையென்றெவருரைக்கவெளிதம்மா. (கரு)

வேறு.

விரித்துநானிலத்தைந்திணைவளத்தையும்விளங்க
வுரைத்தநாவலர்செந்தமிழ்ப்படிசிறிதுரைத்தாம்
புரைந்தகேள்வியோர்செவிக்கிளஞ்சேய்கள்சொற்பொருவ
வுரைத்தவதிணைமயக்கமுஞ்சிற்சிலவருப்பாம். (கசு)

திணைமயக்கம். வேறு.

தவளவெண்சுதைமாளிகைநிகேதனந்தாவித்
துவள்கறிக்கொடிதூங்கியபற்றியதேர்ற்றம்
பவளவேணியபராபரன்பரைகரம்பற்ற
வவளொசிந்தொல்கிநாணுமந்நிலைதெரித்தவிரும். (கஎ)

சலதிமன்னிய துகிர்க்கொடிதாய்ப்படர்ந்தேறிக்
குலவலாத்திகழ்சந்தனத்தாருவைக்குழைக்கு
நலநுகர்ந்துபின்னிவந்துறுமாடவாநயப்ப
விலவிதழ்ச்சிறுமூரலாரிணக்குசெய்கையைப்போல். (கஅ)

முல்லையாய்ச்சியர்மத்தெறியோசையுமுரணிக்
கல்லென்கும்மையிற்கலவர்களுப்பமையொலியுஞ்
சொல்லைவித்தியகழனிவாழ்மள்ளர்சொற்றொனியு
மெல்லைகாணுறினிம்பலவியக்கலொத்திசைக்கும். (கக)

எருமையேற்றினமுல்லையிற்குளகுணவேகு
மருவுமுல்லையாண் மருதத்தின் றுறைதொறும்பரக்குங்
கருமுகிற்குலஞ்சூன்முதிர்ந்தேகலுங்கடலின்
மருவியுண்ணச்செல்வெண்முகிற்குழாத்தையுமானும். (௧௦௦)

நாகமஞ்ஞிய்நாகமைநாகத்தைநிகர்ப்ப
நாகஞ்சேர்ப்பொன்னாகுமார்நாகமென்னு
னுகமுழ்வெரீஇநாகத்தையணைவுறப்பிணித்து
நாகம்வீசுவர்சிறுமகார்நாகருமவியப்ப. (௧௦௧)

இன்னநாவலர்நீவிண்டிற்காஞ்சியின்றென்பாற்
பொன்னிநல்வளம்பரப்புநாட்டுத்தாம்பொலிந்து
தன்னையொப்பரும்பெண்ணைநீர்பாய்ந்தகந்தழைத்து
மன்னிவாழ்வது திருமுனைப்பாடிமாநாடு. (௧௦௨)

அன்னநாட்டினிலாலாலசுந்தரருதிப்ப
வென்னையாள்வெண்ணைநாயகர்தடுத்தினிதாண்டார்
முன்னர்நாவினுக்கரசருமுனைத்தித்தக்கடலின்
மன்னியேயுகரையேறவிட்டாபுகழ்வளர்த்தார். (௧௦௩)

நாட்டின்மேம்படுந்திருமுனைப்பாடிநாடென்றே
யேட்டின்மன்னியகாப்பியக்கவிகளேயிசைக்கும்
பாட்டின்மன்னுசீர்ப்புலிசைமாநகர்வளப்பரப்பைத்
தோட்டலர்க்கலைச்செல்வியென்னவினூற்றுதிப்பாள். (௧௦௪)

திருநாட்டுப்படலம் முற்றிற்று.

(ஆகச்செய்யுள். ௧௩௪.)

---

## திருநகரப்படலம்.

---

அயன்மயன்புரிந்தமீமிசையுலகுமவனியிற்பன்னகர்வரைப்பும், படை
ளவித்தெவருமுயச்செயும்புலிசைப்பாடலேசுரன்சித்தவடிவ, மியல்
றத்தரித்தாங்கருளினுலியற்றவெழிலுமிந்நகர்க்கிணைசொல்லோ, ரப
ற்பொதுவுண்மையறிவுருவறிவின்றிரிபினரன்றியொன்றிலரே. (௧)

பண்ணவர்தமதுதானமும்விமலப்பாடலநகரமுநோக்கி, யண்ணலே
சிருட்டிபுரிந்தகாரணத்தான்முதற்பொருள்பரிணமித்ததுவா, மெண்
ணுகம்முலகமயன்வினையதனுற்காரியகாரியத்தியன்ற, வண்ணமாமெ
னவோர்ந்தனர்கொலோபார்த்துவிழியிமையாதுவாழ்ந்தனரால். (௨)

வேறு.

நெட்டிலைப்பசும்புடைக்கனி யுதிர்க்குநாளிகேரங்கள் விண்
ணெருங்க, வட்டவாங்கமுகுஞ்சிறுபழுக்காய்கள்வயங்கமற்றவை
தொடர்ந்தெழுவ, வொட்டிவான்கதலித்தாற்றெறும்பொலிவவுயர்ந்
தவரிழிந்தவரோப்போர், கட்டயாவருமேன்மேலுறநாடுங்காட்சியை
த்தனித்தனித்தெரிக்கும். (௩)

ஒள்ளொளிகுளிரவிரிகதிர்மதியோன்மேனியிற்பூம்டொங்கருவ
லைக், கள்ளலர்ததும்பவுலவையானலந்துசதுலவக்கலையமிழ்தகன்
ற, வெள்ளிடைபோலுங்களங்கமென்றெவரும்விரிப்பதுமுயல்கலை
யென்று, தெள்ளியோருரைக்குமாற்றமுமென்றுற்றணடலையுயர்வு
செப்பரிதால். (௪)

வள்ளைவாய்க்குதட்டுங்கரும்பகடுழக்கவாளைதாய்ப்பாய்தவிலு
டைந்து, தெள்ளுதேனூற்றும்முலினையுதயமதியெனச்செழுவுசெங்
கமலங், கள்ளொரமுலைக்குங்காலையினதனைக்கண்டரக்காம்பர்கண
கைக்கும், புள்ளொலியருநீலோற்பலவாவியெண்ணிலபொலிவவந்
நகர்க்கே. (௫)

தோட்டலர்க்கமலக்காட்டுவெள்ளனந்தன் றுணையொடுமெருவுறு
துறங்கப், பேட்டெனமூடிப்புனலிடைப்பாய்ந்தபெற்றியவனநிழன்
றுழுதுங், காட்டுவதடத்திற்கமலத்தினிழல்கள்கரங்களாற்பற்றியீர்
ப்பதுபோற், சேட்டொளிவிரிக்கும்வாவியிம்மாதர் செறிந்தரமகளிர்
போன்றாழவார். (௬)

வருமுலையுரற்கான்முறச்செவிக்கைம்மாமதசலமூற் றெழுந்தொ
ழுகத், தெருவினிற்சேறலளக்கர்நின்றெழுந்துசிறைவிரித்துலவுமை
நாகப், பெருவரையெனலாமதன்வெரிந்புறத்துப்பிறங்கொளிவிமான
த்தேர்நோக்கிற், பருதியஞ்சுடர்சேருதயவேதண்டப்பண்பினைநிகர்க்
குமற்றதுவே. (௭)

காருடன்மும்மைமதப்பெருஞ்சோனைக் கடாக்களிற்றினத்திர
ணோக்கி, வாருதிமடுத்துக்கறுத்துவான்பொழிந்தகுயின்களும்வெள்கி
விண்மறிந்த,பாரினிலிரப்போர்க்கிடையறவின்றிக்கொடுக்குமப்பண்
பினர்க்கொவ்வா, வேருறும்வானவைந்தருக்குலமுமெள்கச்சுரும்பணை
வுறுவன்றே. (௮)

கரடநால்வாய்மும்மதம்பிறழ் செவிக்கார்க்கைக்களிறணைவுறும்
வீதி, குரகதம்பலபூண்டொளிருமாடகத்தகொடிஞ்சிமான்றேர்பல
வெதிர்வ, தரையினிற்பொன்னங்கிரியிமவானுமற்றையசயிலமுந்தம்
மிற், பொருவிறற்பரித்துப்போர்க்களங்குறித்துப்புகுந்தவாபோன்ற
வாவணமே. (௯)

பன்னிறவிலாழிக்கொய்யுளைக்கலனைப்பாய்பரிமான்றிரள்வேக
தன்னையொத்திலாப்புன்மனமிடந்தோறுந்தனித்தனிச்சுழல்வ
னவன்றி, யன்னதுகற்பானோக்கினுமடிவைப்பகப்படாவிரைவினால
டிபார்தீ, தின்னவாறேகிற்றெனவனுமானத்தெனலன்றியேய்க்குரு
வவையே. (௧௦)

ஆடவர்குந்தவீதியிற்செலுத்துமலங்குளைப்புரவிபாய்வனபார்த்,தீடழி
ந்தோடிப்பின்னுரத்தெதிர்வானெனண்ணிவந்திறுத்துமாட்டாது, பாட
றப்பின்சென்றலையலைத்திரள்கள்பன்முறையின்னணம்வாவும், கோ
டகலாதவளக்கருமொருபாலகழியாங்குறிக்குமிந்நகர்க்கே. (கக)

புடைநகர். வேறு.

எறிவனவெய்வனவியற்றுவார்சிலர்
மறிவன திரிப்பனவழங்குவார்சிலர்
குறியினினெறியுறக்கோலுவார்சிலர்
செறிவியூகங்களைச்செலுத்துவார்சிலர். (கஉ)

குந்தமும்வேல்களுங்குறித்துநீட்டுவார்
சந்திரனிகர்த்தசக்கரமுருட்டுவார்
பந்தியினத்திரம்பலவழங்குவா
ரிந்திரசாலமொத்திளையரெண்ணிலார். (கங)

சிறைவிரிபாட்டளிசேரத்தேம்பொழி
னறையுகரீத்தமாய்கயக்கும்வீதியி
னறைகழலாடவர்செலுத்தும்யானைகள்
பொறையொடுசெல்கலப்பொலிவுபோன்றவே. (கச)

சிங்களஞ்சோனகஞ்சென்றபின்னருங்
கொங்கணங்கன்னடங்குறுகிமீடரும்
வங்கம்வெந்நரகினுஞ்சுவர்க்கமற்றினுந்
தங்கிமீள்சுக்குமத்தனுவைமானுமால். (கரு)

பல்துறைப்பல்வளங்கவர்ந்தபண்ணைக
ளொல்லைவந்திந்நகர்த்துறையிலுக்கன
செல்கதிபலவினுந்தேடுசெஞ்சித
மல்கருட்குரவனுனிமாறும்பாலவே. (கசு)

பன்னிறக்கோசிகமணிப்பரப்புமற்
றன்னரும்பொருளெலாமொருங்குதாங்கிவந்
திந்நகர்க்குதவியவங்கம்யாவையுந்
தன்னிடந்தருமுருமாயைசாலுமால் (கஎ)

முத்தமுமலைமலையொப்பமொய்ப்பன
வித்துருமங்களும்விளங்குமவவண
சத்தியுஞ்சிவமுமாந்தன்மைகாட்டுவ
பத்தியிற்பலபலபண்டசாலையே. (கஅ)

சந்தனமான்மதம்புழுகுசாதிக்காய்
கந்தமிலகிலவங்கமாதிகப்பல்க
ளுந்திவந்திறுத்துவெற்பெனவுயர்த்தலா
லந்தமில்புலான்மணமகலுமத்தியே. (கக)

எவவகைத்தேசத்தின்வளமுமிந்நகர்க்
கவவியந்தீர்தரக்கொணர்ந்தளிக்குமந்
நவவியைநால்வகைப்பொருளுநாட்டுநூற்
செவவியீதென்னவேதெரிக்கலாமரோ. (உ0)

செந்நெலுந்துவரையுந்திளைக்கும்புன்பயிர்
பன்னருந்தானியப்பரப்பியாவையும்
பொன்மலைவெள்ளியம்பொற்றைநிமற்றைய
சின்மலையென்னவேதெரிக்குமாங்கவே. (உக)

வேறு.

கொய்யுளைப்புரவிமான்றேர்களிறுகாலாள்கள்கொள்ள
வெய்யுனவெறிவவல்விகலனைகிம்புரியென்றின்ன
வைதறப்புரியுங்கம்மியத்தர்போன்மயனுக்கென்றுங்
கைவராமையினலன்றேமனத்தினாற்கற்பிக்கின்றான். (உஉ)

பஞ்ஞரும்புவனத்துள்ளநகர்ப்பரப்பவற்றுக்கெல்லா
மிந்நகரதிகமென்பதியாமினியியம்புமாறென்
பொன்றொடும்புணர்வைகுந்தன்புடைநகரொருபெண்ணாகித்
தன்னிகரானைப்புல்லிச்சாத்தனையுநவின்றால். (௨௩)

## இடைநகர்.

புடைநகர்வளங்களின்னதெரிந்தவாபுகன்றாமேனை
யிடைநகர்வளமுமுன்றோன்முறைமையாலுரைக்கின்றமா
லடல்கெழுசாதுரங்கத்ததுவிதுநாணியஞ்சு
மடநடைமஞ்ஞைபோல்வார்மல்குமாவணத்ததாமால். (௨௪)

மாணிக்கத்தியன்றகுன்றுமரகதத்தியன்றகுன்று
மாணிப்பொன்னதனாற்செய்தகுன்றுமாங்கவிர்வமாடே
வாணிக்கும்புகறீறெற்றுப்புளினமுமலர்ப்பூஞ்சோலை
நாணிப்பன்மின்னாராடுங்கவினநீர்த்தடமுமல்கும். (௨௫)

மேகமுமயிலுந்தம்பின்விரவுவமின்னுமின்று
ராகமுங்கலக்குங்காளகண்டமுமவர்வாய்ச்சொல்லும்
யோகமுற்றிருக்குந்தேவவனிதையருவர்களென்று
பாகமுற்றிருப்பரின்னோர்படைக்கணேவேறுகாட்டும். (௨௬)

கந்துகமனையகொங்கைகவினக்காரளகம்பூந்தேன்
சிந்தியவவிழக்கச்சும்பருமமுஞ்சிலைதயக்கணக
ளுந்தியின்சுழியிற்சுற்றவொண்ணுதன்மடவார்மேடைப்
பந்தடித்தெழுப்பமேன்மேலெழுவர்பார்மகிணர்நெஞ்சின். (௨௭)

தழைக்கிலைபசந்துமாவிற்றயங்குமாற்கோட்டிணிட்ட
விழைந்தவாடவர்கள்காணவியன்மணித்தாம்பினூச
லுழைந்தநூற்கலிர்கமின்னார்பொன்னனவாடனோக்கக்
கழிந்தமாலவர்சித்தத்துங்கன்னவிற்கணைபாய்ந்தன்றே.' (௨௮)

கனகமுமணியுமின்னவயிரத்திண்கறையிலிட்டாங்
கிளமடமின்னார்மன்னரிமுசலங்கொண்டிடிப்பச்சுண்ணம்
புனைதருமுடம்புமுற்றும்பொன்னெனமிளிர்வநோக்கி
னனகாமரம்பைமார்வந்தப்பணிபுரிதன்மானும். (௨௯)

தத்தையைப்பூவைப்பேட்டைத்தனிமணிக்கூட்டிலிட்டு
நித்திலுங்கனிபாலூட்டிநிறைந்தசொற்பயிற்றினாலும்
வித்தகமடவார்மென்சொல்வியப்புருமையினாலன்றே
யத்தகுமங்கலார்கண்மொழியினையமுதமென்பார். (௩௦)

வேறு.

அணியுழியகலுழ்யழகுஞ்செயவன
மணிமுதற்களபமீருணமங்கையர்
துணிவொடூடலிற்றுளங்குகாலத்தும்
பணிவொடுமெமளியிறபயிலும்போதுமே. (௩௧)

ஆடவரந்நலாரணியரங்கினி
னாடலின்மேகலைபற்றவுக்கண்
கூடலைக்குறித்தனர்கொல்லென்றெஞ்சிய
நீடியனாணொடுநீங்கலொக்குமே. (௩௨)

பொற்படம்பலவுமோர்பூவைதன்னையே
நற்புநவெழுதியநோக்கியாவியாங்
கற்புடைமடமயில்கலந்தவெற்பொரும்
புற்பலமாதர்கொல்பன்னென்றூடுவாள். (௩௩)

ஊடிவெந்நீர்தவர்கணவரொண்முக
மாடியிற்கீறன்றுதல்கண்டயர்வுறீஇ
வாடியகொழுநரையெதிர்ந்துமற்றவர்
தேடியதனம்பெற்றுத்தனங்கள்சேர்ப்பரால். (௩௪)

மங்கலகமாரூடலிற்சிதைந்தபல்வளை
யங்கதனிடைமுத்துமரதனங்களும்
பொங்கொளிவிரிதரப்புணர்ந்துதோன்றுவ
திங்கள்செங்கதிர்பொரவிருள்கள்சீக்குமே. (௩௫)

சந்திரகாந்தமாளிகையிற்றூழ்நீர்
வந்துசேரகழியார்கலியின்மன்னுமற்
றந்தநீருண்ணுமப்பரிதிகாந்தமுஞ்
சந்ததஞ்சுவற்றுவசலதிவன்னிபோல். (௩௬)

நடுநகர்.

புடைநகரிடைநகர்ப்பொலிவுசெப்பினு
மடைவினினடுநகரலங்கரிக்குவாங்
கடலொடுசக்கரவாளமேவகழ் .
திடமுறுமெயிலெனச்சிறக்குமென்பவே. (௩௭)

நாகர்தம்முலகுபொன்னுகட்பூவென
வோகையினுரைக்குமூவுலகமிந்நகர்ப்
பாகமதென்னப்பாதலத்தும்விண்ணினு
மேகியவகழியோடிஞ்சிசெப்புமால். (௩௮)

வற்றியும்பூரித்துமறுகுமாக்கட
லுற்றவிவ்வகழியோபடித்தின்மன்னுவ
தெற்றெனில்வடவைமாவிரண்டுமுண்ணினு
மற்றிதுகுறைவுறுவளமைத்தென்பவே. (௩௯)

இஞ்சியினியந்திரமெய்தலெற்றுத
றஞ்செயலளவிலசாற்றியென்பயன்
வஞ்சர்களெதிருறின்மறஞ்செய்கோலமே
யஞ்சியோடுறும்வகையணங்குசெய்யுமால் (௪0)

பொனணிலைவச்சிரக்கபாடப்பொற்புறு
மன்னிலைவாயினுன்கவற்றுளேகுவோர்க்
கெங்கிலைப்போகமுமினிதுகாட்டலான்
மன்னுமிந்நகர்நடுநகர்வழக்கதே. (௩௧)

வேசியர்வீதி.

ஒருகணப்பொழுதினிற்பலர்க்குமோகைசெய்
பெருவனப்பவினையப்பரத்தைப்பேதையாக்
கருவமாய்விழியசையாவரம்பையா
பொருவிலராகிவிண்புலவர்ப்புல்லுவார். (௩௨)

சித்திரத்தெழுதியசெம்மையோவிய
மத்தருகணிகையரடிவைப்பஞ்சியே
நித்திலைகயுருவமாய்ப்பிறங்குமேலெழிற்
கொததினைவகைவகைகூறவல்லமோ. (௩௩)

திருவுடனுயிர்த்தபாற்கடலிற்றேவியர்
பருவமங்கையரிவர்பருவமேனொடு
மருவியேபுதுநலம்வழங்கும்பா[illegible]மையார்
விருநிலப்பரதையாக்கிணையுறாக்களே. (௩௪)

திருந்தியபரத்தையர்சேயர்மின்னவை
பொருந்துபொன்னுலகமுமவர்கள்பொறபதி
யருந்தவக்குழுக்களுமாகுலத்தினால்
வருந்துவவெளில்வனப்புரைக்குமாண்பிற்றே. (௩௫)

ஆவணவீதி.

பிறர்பொருடம்பொருளிரண்டும்பேணிய
யறநிலைத்துராசுநாவொப்பவாவணத்
துலறவிட்டுத்துறுபொருள்கொண்டுவெப்பினை
மறுபொருள்யாவையும்வழங்குங்கூலமே. (௩௬)

துய்ப்பனவணிவனபுனைவருட்டுவ
மெய்ப்படுப்பனபலவேறுவேறுகொண்
டப்பெயர்ப்பொருள்களாலணிசெய்யாவணஞ்
செப்புமவ்வளகையிற்செல்வமல்குமால். (சஎ)

பல்வகைப்பூமணம்பரவியொன்றலாற்
பல்வகைச்சொற்களும்பகரவொன்றலாற்
பல்வகைநிறப்பொருள்பரவியொன்றலாற்
பல்வகைப்பொறிபுலன்படர்ந்தவல்லவே. (சஅ)

கடலினின்முகந்தகார்க்குலங்கணுட்டினி
லடைவினிற்சிற்சிலவளிப்பவாவணக்
கடையினிற்காணிபுந்தேடிக்காதலார்
கொடையினினுதவுவர்கோடிகோடியே. (சகூ)

ஐவகைப்பொன்னினுமமைத்தபல்கல
மைவகைவருணத்துளார்க்குமினபுற
வைவகைப்புலன்களுமமைக்கவாகிய
வைவகைக்கம்மியர்கடையனந்தமால். (ருo)

வேறு

மரத்தினிற்கடைந்தசெப்புமணியினிற்குயின்றசெப்பு
முரத்தினிற்கடைந்தசெப்பையொதரொளிர்தனத்தார்விற்கு
நிரைத்தமான்மதங்கத்தூரிநிறைமணமவிரிக்குஞ்செல்வப்
பரப்பினங்காடிவீதிபகர்ந்தனம்பகர்வாமற்றும். (ருக)

சங்கராசாதியர்வீதி.

காலேனும்வருணத்தோருந்தத்தமினயந்துபெற்ற
மேலவராறுவர்கீழாய்விரிந்தவராறுவரின்ன
பாலருந்தம்மிற்கூடிப்பெற்றபல்சாகியோருஞ்
சாலவேவசததய்வீதிரனைதனைநிரைப்பவாழ்வார். (ருஉ)

## வேளாளர்வீதி.

பூமகள்புதல்வராயிப்புவிமுதலுலகுக்கெல்லா
மேமுறும்போகநல்குஞ்சாலியேயாதியாவுந்
தோமறவிளைவித்தூட்டுந்தொல்குடிதுவன்றிமற்றை
நாமநீள்வருணமூன்றுநாட்டபினவர்கள்வாழ்வார். (ருங)

மேகமும்பணிந்துதாழ்ந்துசிறைப்படக்கொடையால்வென்று
மாகமும்புகழால்வென்றுமணிமுடிமூவேந்தர்க்கு
மோகையாற்குட்டவல்லோர்கற்புடைமனையாரோடும்
பாகதேயத்தாவிந்தப்பாரினைவளர்ப்பர்நாளும். (ருச)

மந்திரந்தூதுவென்றிசெலவிசைலாதிவாய்ந்த
தந்திரத்தலைவர்மானமேருவேளாளர்தங்குஞ்
சுந்தரச்சிகரமாடமேடைகள்சுடரும்வீதி
பந்திபந்திகளாய்மன்னுபரப்புமங்கனந்தமாமால். (ருரு)

## வணிகர்வீதி.

பொன்னவமணிகளானபொருப்பெனவுயர்த்தும்பின்னு
மன்னவைவளர்க்குநீராலளகையூர்கோனுந்தாழ
மன்னியவணிகமாக்கண்மைந்தர்கள்மல்கவாழு
மின்னிவண்மாடமல்குமவீதியுமனந்தமாமால். (ருசு)

## அரசர்வீதி.

செங்கதிர்க்கடவுடாமேதினகரனெனப்பேர்மன்னித்
திங்கள்வாரங்களவேறுதனித்தனிதோற்றுவித்து
மங்கவர்க்காதிவாரமென்பபோலனையாக்கியாவுந்
தங்களதெனுமன்னோர்கடங்குவீதிகளுஞ்சொல்வாம். (ருஎ)

## வேறு.

செய்குன்றினுமஞ்ஞைஞயுநடிக்குந்தேப்பிடைமடமயிற்குழாமு,மை பவிஞைக்குமாடவாதெளியமறம்பயில்கட்கடையமிழ்தும, வெய்ய தீவிடமுநகால்வனகாலாவேற்றுமைவிளக்குவநோக்கிப், பொய்யநு ண்ணிடையார்போகம்வேட்டுண்பார்புதிலாமுன்றில்சேர்குவரால்.

ஆடகத்தியன்றசிகரமோர்பாலாவவிர்மணிவச்சிரச்சிகரம், பாடலம
ணிசேர்சிகரம்வெள்ளொளியபளிக்குபலத்தினார்சிகரந்,தேடருநீலமர
கதச்சிகரந்திசைதிசைவிளங்கவெண்சுதையார், மாடமெம்பெருமா
ன்வடிவெனவிளங்கும்வண்ணமுமனந்தமங்குளதால். (௫௯)

வேறு.

வெங்கதிர்க்குலத்துலாந்தவிழுத்தபுகுணுத்தோர்மற்றைத்
திங்கட்குலத்துவந்தசெல்வராந்திறல்சான்மன்னர்
கங்கையுமதியுஞ்சூடுங்கண்ணுதலருளாலோங்கி
யெங்குளபுவியுமாண்டுமிந்நகரிருப்பர்பல்லோர். (௬௦)

மறையவர்வீதி

மறைமுழக்கருதவாய்மைமறையவரங்கிவேட்டுப்
பொறைமுதற்பலவுந்தாங்கியறுதொழிற்புரவுபூண்டாங்
கிறைவனையருச்சித்தியாகமெண்ணிலபுரிந்துவேதத
துறைபொருள்விதிப்போர்வீதியநந்தமாங்குள்ளவாமால். (௬௧)

வைதிகசைவமுற்றும்வரன்முறைவழாதுபோற்றிப்
பையரவணிந்தவீசன்பரார்த்தவான்மார்த்தபூசை
செய்திறத்ததுலராய்முத்தீக்கையால்வினைதீர்த்தாளு
மையராமாதிசைவர்வீதியுமனந்தமாமால். (௬௨)

பத்தியிற்சரிதையாதிப்பணிதருகிரியாதீக்கை
சத்திசாம்பவியென்றோதுஞானதீக்கையையுந்தத்தம்
புத்திபக்குவத்துக்கேற்பவொன்றினாற்புனிதமாக்கி
முத்திதந்தருளுஞானமுனிவரர்மடமனந்தம். (௬௩)

கலைகளெட்டெட்டுவையாகரணமாகமபுராண
நிலைவரன்முறையாற்றேர்ந்துநிச்சயித்திரப்போர்க்கியும்
புலமையிற்றலைமைசான்றோர்பொலிவுறுகழகமாங்காங்
கிலகுவசேடணைப்பாரதியிறும்பூதெய்த. (௬௪)

வேறு.

மங்கலமனைகடோறும்புராணங்கண்மறுகுதோறும்
புங்கவர்வேள்விதோறும்பூசுரர்கிடைகடோறுஞ்
சங்கொலிகாலந்தோறுந்தருமணஞ்சாலைதோறுங்
கொங்கலரீந்தர்தோறுங்கும்பம்வேதிகைகடோறும். (௬௫)

ஆரணமுழக்கமெங்குமாகமவ்முழக்கமெங்குந்
தோரணக்கொடிகளெங்குஞ்சுடர்மணித்தொங்கலெங்கும்
வாரணத்தொலிகளெங்குமாதராடரங்கமெங்குங்
காரணப்பொருள்சித்தேசன்கற்பித்தநகரமெங்கும். (௬௬)

வேறு.

மின்னவிர்கோபுரமேனிலங்களே
பொன்னுலகயனரிபுராரியம்பைவே
டன்னுலகிதற்கொருசான்றதீற்றினின்
மன்னியகோபுரம்வயங்குமென்பதே. (௬௭)

அருந்தவமெவரொவரியறறுவாரவண்
பொருந்தியாண் டருள்வதுபுலிலீசநாயகன்
பெருந்திருலென்பதாலமயமீபேணியே
யிருந்தனதிருமதிவிடபப்பத்தியே. (௬௮)

இடபமாயகனிருந்தெழில்செயாயிடை
யிடபகேதனம்பொலிந்தேகிவிண்ணினி
லிடபமுங்கடந்தசைந்திலகல்காணுறி
னிடபமான்றன்னுலகிருப்பதேய்க்குமால். (௬௯)

பன்மணிச்சிகரத்தின்பரப்பைநோக்குழிப்
பன்மணிக்கதிர்முடியணிந்துபாடலப்
பன்மணியராவணிபரனைப்போற்றுவான்
பன்மணிநிறத்தும்பர்நெருங்கும்பாலவே. (௭௦)

மாயிரும்புலிக்குளிப்புலிசைமந்திர
மாயிரங்கலையொடுமெண்ணல்வைகலாற்
பாயிருணீக்கியபரிதிவானவ
னாயிரங்கதிரொடுமேவிர்வதொக்குமால். ௭௧)

ஆகுதிச்சுடரினுங்கரசதீர்த்தத்து
மோகைசான்மண்டலத்துயரத்தாணியு
மாகமும்வாயுவும்வடிவருந்தவத்
தோகைபாலுறைவதும்பாடலேசனே. (௭௨)

பன்னிருபூமலர்பாதிரிக்கணே
யென்னையாள்சிவக்கொழுந்தீசன்வைகலா
லன்னதன்னீழலினடைந்துய்ந்தோர்கடா
மன்னுகற்பகநிழன்மதிப்பதில்லையே. (௭௩)

ஆயிடைத்தேர்ன்றியவதிசயம்பல
தூயவாமோதமுங்கரமுஞ்சுந்தர
மேயதாண்டவமுதற்றீர்த்தமேன்மையும்
பாயவாராமமுந்தசத்தின்பாலவே. (௭௪)

இன்னவாதசந்தசஞ்சதஞ்சகத்திரஞ்
சொன்னதோர்மேன்மைகடெங்குமாங்கது
மன்னியதேவர்கண்மதிப்பதன்றியே
யன்னமாரகசியமறியொணததால். (௭௫)

அற்புதரகசியமனைத்துமெம்மனோர்
சொற்பொருட்பாலவாய்த்துதிக்கும்பான்மைத்தோ
பொற்புறுவியாதனும்புதைத்துரைத்தனன்
றற்பரன்பாடலச்சரிதமென்பவே. ௭௬)

சித்தராயரன்புரிதிருநகர்த்திறம்
பத்தரின்மேம்படுபதஞ்சலிக்கலா
வித்திறமெனவொணுவேனுமநக
ரத்தலவிசிட்டமுமறிந்ததோதுவாம். (எஎ)

திருநகரப்படலமுற்றிற்று.

ஆகச்செய்யுள் ௨௯௩.

---

உ

சிவமயம்.

# தலவிசிட்டச்சருக்கம்.

அருள்விளங்கியவுளத்தரசயாரணப்பொருளைத
தெருளுமாதவமுனிவிர்காள்சிந்தையையொருக்கிப்
பொருள்செய்பாடலப்புலிசைமான்ஙியததைமெய்ப்போத
மருளுரவீலைகேட்டுளங்கொளுமெனவகுப்பான். (க)

வேதமறுங்கமாகமத்தினுள்ளுறையெனவிளங்கும்
பாதவத்திருப்பாடலபுரத்தைவைபவத்தா
லேர்துமாத்தலமாயிரத்தெட்டினுமுயர்வா
மாதிமாநகரென்பர்களாயந்தமூதறிவோர். (௨)

புண்ணியந்திரண்டுருவமாய்ப்பொலியுமந்நகர்தா
னெண்ணுமெவ்விதபாவபேதத்தினீடழித்து
மண்ணின்மேம்படுகீர்த்தியால்வயங்குவததுவே
நண்ணுமங்களவுருவமாஞானவீடளிக்கும். (௩)

அம்பிகாபதியம்பிகையிருவருமகலா
தும்பரோடவண்கயிலையையொப்பவேவாழ்வா
ரெம்பிரானுக்கவவெள்ளிமால்வரையினுமெழில்செய்
வம்புலாமலர்ப்பாடலபுரத்துளமகிழும். (௪)

தருமமத்தமேகாமம்வீடெனவுரைசான்ற
விருமையின்பமும்வழிபடுவோர்க்கினிதளிக்கு
மொருமையாஞ்சிவஞானசாதனமுண்மைஞான
மருளுமப்பதிக்கிணையிந்தச்சகத்தினிலரிதால். (௫)

மாலின்மைந்தனுமன்மதேச்சுரத்தினுக்கணித்தாயக்
கோலமல்கியதிருத்தில்லையுத்தரகோணத்
தாலநீழலாரதிகையின்கீழ்த்திசையத்தி
மேலதாந்திசைவிளங்குமந்நகரமாவியப்பால். (௬)

தத்துவப்பொருளுளக்கண்ணூளுள்ளமாதரித்த
சுத்தஞானிக்களெண்ணிலாருழாஙகொண்டுரூழும்
வித்தகன்றருகன்னிகாபுரத்தின்வீற்றிருப்பார்
சத்தியேசிவமாகியதனிமுதற்பரமர். (௭)

வாலகில்லியர்சித்தர்வித்தியாதரர்வசுக்கள்
சேலுலாம்விழித்தேவியர்தேவர்கடினமும்
பாலலோசனற்கன்புசெய்பாதிரிப்பதியே
சாலவும்பவித்திரமெனமறையெலாஞ்சாற்றும்.

விசித்திரந்தரும்பாடலநகரமேமேலாம்
வசித்தகீடமுங்கிருமியுந்தேவதவடிவாஞ்
சசிக்கொழுந்தணிசிவபுரஞ்சார்ந்தினிதிருந்து
புசித்துவாழ்ந்துபின்பராபரமுத்தியிற்பொலியும். (௯)

புராணம்யாவையுமாகமவருக்கமும்புகழுந்
தராதராவினினுண்மையாம்படிதரித்துரைக்கு
நிராமயப்பொருளாயிரங்கலைகளானிவக்கும்
பராபரத்தினைமுனிக்குழாம்பாதங்கள்பணியும். (௧0)

இந்திராதியர்ருடிகள்பருப்பதமெழில்சேர்
சந்திராதியர்சமுத்திரந்தாரகைமுதலாம்
பந்தம்வீட்டியதேவருமரையரும்பதுமத்
தந்தணன்னிகர்மறையவர்முதலியோர்யாரும். (௧௧)

கன்னிமாவனம்பாடலவனத்தினிற்கவினப்
புன்னைபொன்சொரிபாதிரிநீழலிற்பொலிந்தே
யென்னையாளுடைச்சிவக்கொழுந்தீசனையிறைஞ்சி
மன்னுபூசனைபுரிந்ததம்பதத்தில்வைகுவரால். (௧௨)

கங்கைமன்னியகரசமேயகத்தியங்கவின்செய்
சங்கமன்னியசமுத்திரம்பிரமியந்தழலின்
றுங்கவாவியேயயிந்திரங்கெடிலமேற்சொல்லு
மங்கந்துள்ளவெண்டிசாபாலர்தீர்த்தமுமாடி. (௧௩)

பெண்ணையாடிப்பாலோடையின்மூழ்கியபெரியோ
ரண்ணலாயிரங்கலையொடுமம்பிகைதவத்தின்
வண்ணங்காண்பதேபொருளெனக்கொண்டிவண்வைகி
நண்ணருந்தவவடிவினால்வீடெண்ணுவரால். (௧௪)

அம்பரத்திருவுருவமாங்கன்னிகையமலச
செம்பொன்மன்றினிற்பஞ்சதசாக்கரஞ்சிறந்து
வம்புலர்மலர்ப்பாடலமூலத்தின்வளரு
மிம்பர்தேவரும்பூசித்தாங்கெய்துவர்யாவும். (௧௫)

வேறுவேறினிவிரிப்பதெனமபிகைவிமலைக்
கேறுசாபமித்தலததினிற்றீர்ந்தெழிலெய்தித்
தேறமாத்தவடபுரிந்தனளெனிற்றிசைதிசையிற்
கூறலாம்படித்தனதிணையொருதலங்குறிக்கில். (கசு)

நினைக்கிலெத்துணைப்பாவமும்பொடிபட்டுநீரு
மனக்குவேண்டியவிசயமாரோக்கியமனனுங்
கனக்கருங்குழன்மங்கையர்புத்திரர்கலந்து
தனக்குவேண்டியசுகமெலாஞ்சார்ந்துவாழ்ந்திருப்பார். (கஎ)

அத்தலத்தினிற்புற்புதற்பிறப்பினுலணைந்து
நித்தம்வைகியவுயிர்கட்குநிருமலயோக
முத்திவீடுறுமெனிலணைவுறுதலெனமொழியிற்
பத்தர்யாவருமத்தலப்பெருமையேபகர்வார். (கஅ)

வன்னநான்கினிலுழிவருநிலையினன்கதனிற்
றன்னைெயாப்பருமில்லறநூறவொன்றைச்சார்ந்து
கன்னிநாயகன்சந்நிதையாதியவொன்றைக்கருதி
யின்னருட்பணிபுரிந்தவணிருப்பரால்யரும். (கசு)

தேவதேவனேயெனத்திகழ்திருவுருவுடையூர்
நாவினுலவர்சரணங்கடுதித்துநாடோறும்
பூவில்வாழ்தருமெம்மனோர்பரகதிபுகுவா
ராவராதவினவரடியிறைஞ்சுதுமடைந்தே. (உ௦)

கலைகளாயிரமவிர்கன்னிமாநகரிறைவர்க்
கிலகுகோபுரமண்டபமியந்திரபீடம்
பலர்புகழ்ந்துசொலிரதங்கள்சிறப்புறுற்படியா
னலமிகச்செய்தோரிராசராசேந்திரராவார். (உக)

தெங்குபூகமாமதூகமாமலகங்கள்சிறக்கப்
பொங்கர்செய்தீருட்கன்னிமாவனத்திடைப்பொலிந்த
வெங்கணுயதர்க்களித்தவரிகத்தரசளித்துத்
தங்கிவெள்ளிமால்வரையினுந்தலைவராய்வாழ்வார். (உஉ)

வாவிகூட்பங்கள்வகுத்தெழிற்பாதிரிப்புலியூ
ராவியன்னோனம்மூலலிங்கேசனுக்களிததோர்
தேவதேவர்தந்திருவுருவடைந்துசிற்பரத்தின்
மேவுவாரவர்பேற்றினைவிளம்புதற்கெளிதோ. (உஙு)

சத்திரமடஞ்சாலைகள்வளம்படவகுத்து
நித்தனெம்பிரான்பாடலநாயகனிமலன்
சுத்தமூலலிங்கேசுரன்சந்நிதிதுலங்க
வைத்தமாதவர்பதத்துகள்சிரத்திறல்வகிப்பாம். (உச)

என்றுகௌதமாமுனிதலவிசிட்டத்தையியம்ப
வன்றுணர்ந்தனாசவுனகராதியாமுனிவ
ரின்றுமம்முறையுரைததனமினியெடுத்துரைப்பா
மன்றலார்குழற்றேவிகண்புதைத்தவாவகுத்தே. (உரு)

தலவிசிட்டச்சருக்கமுற்றிற்று.

ஆகச்செய்யுள்-உஙுஅ.



உ
கணபதிதுணை.

# தலவிசிட்டச்சருக்கம்.

மங்கலமூர்த்தியும், என்றுமுள்ளவரும், எங்குநிறைந்தவரும், எல்லாமறிந்தவரும், எல்லாம்வல்லவரும், அளவிடப்படாத ஆனந்தமுடையவரும், தம்வயமுடையவரும், உயர்வும் ஒப்புமில்லாதவரும், சகலலோகத்திற்கும் ஓரேநாயகருமாகிய சிவபெருமான்; தனதருள்பெற்ற திருநந்திதேவருக்கு முதனூலான வேதத்தின்கணுள்ள புராணம் பதினெட்டையு முபதேசித்தார். அவர் தன் மாணாக்கரான சனற்குமாரமுனிவருக் குபதேசித்தார். அவர் தன் மாணாக்கரான வியாசமுனிவருக் குபதேசித்தார். அவர் தன் மாணாக்கரான சூதமுனிவருக் குபதேசித்தார். அவர், பதினெண் புராணங்களையும் சவுனகாதிமுனிவர்களுக்குச் சொல்லிவருகையில், அம்முனிவர்கள் கேட்டபொழுதே புத்திமுத்திகளைத் தருவதாகிய சைவபுராணத்துள், உருத்திரசங்கிதையில், உத்தரகாண்டத்தில், தலவிசிட்டமுரைத்த சருக்கமுதல் திருவிழாச் சருக்கமிறுதியாகப் பகுத்தோதிய திருப்பாதிரிப்புலியூர்த் தலமான்மியத்தை யடியேங்களுக்கு விரித்துரைத்தருளல்வேண்டுமென்று வேண்டிக்கொண்டனர். அம்முனிவர்களுக்குச் சூதமுனிவர் கூறுவாராயினர்.

எல்லாவறிவும், எல்லாமுதன்மையும், எல்லா வநுக்கிரகமும், உடைய முழுமுதற்கடவுளாகிய பசுபதியெனப்படுஞ் சிவபெருமானது திருவருள்விளங்கிய வுளத்தராய் வேதப்பொருளைத் தெளிந்த மாதவர்காள் சித்தத்தைச் சிவக்கொழுந் தீசனடித்துணையிற் செலுத்தி யுண்மைஞானத்தை விளக்குந் தலமான்மியத்தைக் கேளுங்களென்று வகுத்துரைப்பாராயினர்.இருக்கு,யசுர்,சாமம், அதர்வணம், என்னும் நான்கு வேதங்களும், காமிகாதிவாதுளமிறுதியாகிய சிவாகம மிருபத்தெட்டும், சிவதத்துவங்களும்,மகாமந்திரங்களுமே தவஞ்

செய்து பாதிரிவிருக்ஷ வடிவங்கொண்டுறையப்பெற்றதாய், வேதப் பொருளாய்விளங்கியசங்கரன்கர்மசாதாக்கியத் திருவுருவங்கொண்டு அடியார்களின்பொருட்டெழுந்தருளப் பெற்றதாய், விளங்குகின்ற பாடலீபுரமானது; அன்பரின்பொருட்டனவரத தாண்டவஞ்செய்த வற்புத மூர்த்தி யெழுந்தருளிவிளங்கும் பெருமை திகழ்ந்த வாயிரத் தெட்டுத் திருப்பதியுள்ளுஞ் மிகச்சிறந்ததாய், ஆதிபதி யென்று முனிவரரால் புகழும் பெருமையுடையது. பதிபண்ணியந் திரண் டோருருவமாய்ப் பொலியுமந்நகர், கருதற்கரிய வெவ்வகைப்பட்ட பாவங்களையும் போக்கி,யெவ்வுலகினும் மேம்படுகீர்த்தியோடு விளங் கித், தன்பால் வசிக்கப்பெற்றோர்க் கருமையாகிய வீட்டினிற்குரிய சிவஞானந்தந்து,தேவரிஷிகளோடுசிவகணங்களுஞ்சூழக்கயிலையிற் சிறந்தபெருமகிழ்ச்சியோடன்பர்க்கருளும்படி, மணங்கமழும் பூக்கள் நிரம்பியபாதிரிவிருக்ஷநிழலில்அம்பிகையோடம்பிகாபதிவீற்றிருக்கப் பெற்றதாய், தனக்கெத்தலங்களு மிணையிலாததாய் வழிபடுவோர்க் குப் புருஷார்த்தங்களை யினிது பயந்து விளங்காநிற்கும்

இப்புண்ணியத்தலமானது, தம்மினின்றும் வேறாகாது தமது திருவருளே தமக்குத் திருமேனியாகக்கொண்டு தமதருட்சத்தியும உலகன்னையுமாகிய வுமாதேவியாரோடும் சிவபெருமானெழுந்தரு ளப்பெற்ற வீரட்டத்தலமாகிய திருவதிகைக்குக் கீழ்த்திசையினும், புண்ணியதீர்த்தங்களு ளொன்றாகிய சமுத்திரத்திற்கு மேற்றிசை யினும், சாந்தோக்கியோபநிடதத்திலே கூறிய தகரமாகிய புண்டரீக புரத்திற்கு வடக்கினும், தக்ஷிணகங்கையாகிய பெண்ணைநதிக்குத் தெற்கினும், மகாகைலாசமெனறு வியக்கும்படி விளங்கும். தத்து வத் துட்பொருளாகிய பரசிவத்தை யுணர்க்கண்ணுற்கண்டுமனத்தகத் திருத்தி யாதரிக்குஞ் சுத்தஞானியர் பலர் குழாங்குழாமாய் வசிக்கு மத் தலத்தில் சத்தி சிவமாகிய இலிங்கத் திருவுருவங்கொண்டு முழு முதற் கடவுள் வீற்றிருந்தருளுவர். வாலகில்லியர்களாகிய மகா விருடியரும், தேவசாதியாராகிய சித்தர்கள், வித்தியாதரர், வசுக்

கள், சேல்போலும் அழகிய கண்களுடைய வரம்பையர், தேவர்கள் முதலியபலருமிஷ்டசித்திபெறுதற்குக் கண்ணுதற்பெருமானை வழிபட்டுவசிக்கப் பெறும்பாதிரிப்புலியூரை யடைந்தார்க்கு மிகுந்த பரிசுத்தத்தைத் தருவதென்று பபேதமும் புகலாநிற்கும். அவ்விசித்திரமாகிய ஸ்தலத்தினில்வசிக்கும் வண்டு புழுமுதலிய பாபசெந்துக்களும் தேவவடிவந்தாங்கிச் சந்திரசேகரா வாழுஞ் சிவபுரத்தையடைந்து சிவபோக நுகர்ந்து பின் முத்தியும்கூட்டும் தராசு நாவைப்போலுண்மையே கூறும் வேதாகமபுராண விதிகாச மிருதி முதலியபல சாத்திரங்களும் புகழாநிற்கும் கிராமபப்பொருளனந்த கலைகளோடு விளங்குமப்பதியில் அனேக முனிவர்களும், இந்திராதி தேவர்களும், மலைத்தெய்வங்களும், அழகுவாய்ந்தவிரவி முதலிய கோள்களும் கடலரசனும், தாராகணங்களும், பந்தமறுத்த கிராசனரும், மண்ணுலகத்தரசரும், பதுமத்தண்ணலனைய வேதணரும், பிறரும் கன்னிமாவனமாகிய பாடலிவனத்தில் அழகிய பூக்களைச்சொரியும் பாதிரிமரத்தின் நிழலிலேயனந்த சூரியபிரகாசத்தோ டெழுந்தருளியிருக்குஞ் சிவக்கொழுந்தீசனை வழிபட்டு நித்தியப்பேற்றிற்குரிய பூசைபுரிந்து, வேண்டும் வரங்களைப்பெற்றங்ஙனமே வதிவர். அத்தலத்தின்கணுள்ள கங்கையிற்சிறந்த சிவகரதீர்த்தம், அகத்தியதீர்த்தம், சமுத்திரதீர்த்தம், பிரமதீர்த்தம், அக்கினிதீர்த்தம், இந்திரதீர்த்தம், கெடிலநதி, திக்பாலகதீர்த்தம், பிணிகினிநதி, பாலோடை முதலிய பல தீர்த்தங்களிலும் ஸ்நானஞ் செய்தளவிலாப் பெரியோர் தவவடிவங்கொண்டு, சிதாகாசஸ்வரூபியாகியும், பஞ்சதசாக்ஷரியுமாகிய வமலைதவவடிவந்தாங்கி யருந்தவநாயகி யென்னுந்திருநாமத்தோடு நறுமணங்கனுலுமலர்நிறைந்த பாதிரி மரத்தின் மூலத்தில் எழுந்தருளியிருக்கும் காக்ஷியைத் தரிசித்து, மீட்சியில்லா மோக்ஷம் பெற்றனர். அன்றியு மிவ்வுலகத்தார் பலரும், அனந்தேசுரரும் பூசித்து வேண்டிய சித்திகள் பெற்றனர் என்றால் வேறு விரித்தத்தல

மான்மியத்தைச் சொல்லவேண்டுவதென். சிவபெருமானால் கிடைத்த சாபநீங்கி பேரழகுவாய்ந்து தவங்கொண்டு பராசரரி வாழப்பெற்ற வத்தலத்திற் கிணையாக வேத்தலமுள்ளது. நிகருமுயர்வுமற்ற வத்தலமானது நினைத்தவர்கள் பாபத்தை நீறாக்கும். மனத்தில் நினைத்தவற்றையு மாரோக்கியத்தையுந்தரும். மைந்தரில்லா மாதருக்கு மகப்பேறு தந்து வேண்டிய சுகமெல்லா நுகரக்கொடுக்கும். அங்குள்ள புல்புதல் முதலாகிய வடிவங்கொண்ட வுயிர்கட்கும் நற்பல யோகத்தாலெய்தும் வீடளிக்குமென்றால் பத்திசெய்வாரடையும் பேற்றையுரைப்பதென். அந்தண ரரசர், வணிகர், வேளாளர் என்னு நான்கு சாதியிலும் வகுத்த பிரமசரியம், கிருகஸ்தம், வானப்பிரஸ்தம், சந்நியாசமென்னும் நாலாச்சிரமங்களுள் கிருகஸ்தம், சந்நியாசமென்னு மிவற்று ளொன்றைச்சார்ந்து, சரியை, கிரியை, யோகம், ஞானமென்னு நாற்பாதங்களு ளொன்றினால் திருவருட்பணிபுரிந்தங்குவாழும் பெரியோர்களைத் தேவதேவனென நினைத்தவர் திருவடிகளை நாவினாற்றுதித்து, நாடோறும் பூசித், தெம்மனோர் பலர் பரகதியடைவா ராயினார். ஆதலின்நாமுமங்குச்சென்று அவர்களை வழிபட்டுய்யக்கடவோம். கன்னிகாவனமென்னும் பாதிரிப்புலியூரில் எழுந்தருளியிருக்கும் பாடலிநாதருக்குத் தூலலிங்கமாகிய கோபுரம், மண்டபம், பீடம், இரதம், வாகன முதலிய வற்றைச் சிற்பசாத்திரப்படி செய்து வைத்த வரிம்மையிலரசர்க்கரசராய் மறுமையில் வீட்டின்ப மெய்துவர். தெங்கு, கமுகு, இருப்பை, நெல்லிமுதலிய மரங்களால சோலை யுண்டு பண்ணி யத்தேவனுக்கு அளித்தோ ரிவ்வுலகத்தரசராய், முடிவில் சிவகணத்தரசராவர். நல்ல குளங்கள், கிணறுகள் தோண்டி, யப்பசுபதிக் களித்தவர்கள் பரசிவ திருவுருவம் பெற்று மேலுலகத்தைச் சார்ந்தடையும் பேற்றினையென்னால விளம்பக்கூடுமோ ? அந்தப் பாடலேசன் திருச்சந்நிதானத்தில் அன்னசத்திரம், மடாலயம், கட்டிவைத்தவர்கள் எக்காலமும் சிவலோகத்தி லெத்தேவரும் பணிய வீற்றிருக்கச் செய்வதாகிய, மேன்மையை யுடையதென்று சூதமுனிவர் கூற நிரம்பச் சந்தோஷமடைந்த சௌனகாதி ரிஷிகள் வினவுவாராயினர்.

---

## தேவிதிருக்கண்புதைத்த சருக்கம்.

---

இன்னமுறையஃற்றலந்தீர்த்தமூர்த்திவிசிட்டமெடுத்து நூல்
சொன்னமுறையேயுகங்கணிந்துசூதமுனிவன்விரித்தியம்ப
வன்னமுறையேதலவிசிட்டமுணர்ந்தசவுனகாதியர்கண்
முன்னியொருசொல்லையமறவினவிக்கேட்கமுயல்கின்று (௧)

முத்தியுதவும்புராணமூவாறும்வியாசமுனியருளாற்
பத்திபெருகவுணர்ந்தவற்றின்விளைவுத்தலத்தின்படியெல்லாம்
புத்திபெருகநிச்சயித்தப்புலமைவாய்ந்தமுனிகேண்மோ
சத்தியமலைபலரைதேவிசாபமுறக்காரணம்யாதோ. (௨)

ஆதிசத்திபுராசத்தியனந்தசத்திவடிவமுமாஞ்
சோதிஞானசத்தியைந்துதொழிலுந்தொடங்கித்தொடக்ககற்றிப்
பேதவுயிர்களனைத்தைப்பெற்றுவாழவருளிறைவிக்
கேதமகன்றதென்னையெனவினவசசூதமுனியியம்பும். (௩)

உள்ளவண்ணமுனிவிருளந்தெளியுமாறுவிரித்துரைத்தும்
பள்ளமடைபோற்பேரன்புபழுத்தமனத்திர்கேண்மின்முனம்
வெள்ளிவரைமேற்றேவர்கணெருங்கவிறைவன்வீற்றிருந்து
கள்ளாரளகக்கவுரியொடுஞ்சூதாடியவாகட்டுரையால். (௪)

எண்ணின்மணிபாற்சித்திரத்தாங்கியற்றுஞ்சிகரப்பரப்பனந்தம்
வண்ணம்பலவேறுடைத்தெனினும்வெண்மையுருவாய்வயங்குவன
வண்ணலகண்டாதாரசுகத்தழுந்துமுயிரம்மயமாகு
மூண்மைதெரிப்பத்திருக்கயிலைவெள்ளியோங்கலொளிருமால். (௫)

வன்னம்பலவும்பற்றுதுபடிகச்சிகரமாறெரிந்து
துன்னுவரியவெள்ளிவரையொளியாலொன்றாய்த்தோன்றுவன
தன்னினிரண்டற்றொளிர்சிவத்திற்சார்ந்துகலந்ததனிமுனிவர்க்
கென்னேயுலகமன்னதிறத்திசையுமென்னவியம்புவரால். (௬)

எரியும்பசும்பொன்னிழைத்தமணிகுயின்றசிகரமெண்ணிலதிச்
சொரியும்பரிதிகாந்தமணிசுடரவிழைத்ததொல்சிகரம்
விரியுநிலவுகாலிந்துமணியாலிழைத்தவியன்சிகர
மரியபடிகம்வெள்ளியினுமிழைத்தசிகரமனந்தமால். (௭)

தாளொன்றிரண்டுமூன்றனந்தடக்கைத்திரளுமவவாறே
வாளொன்றெயிறுவிழிசிகரம்வண்ணம்பலவாய்வயிறகன்று
நீள்பங்கிகளுஞ்சுருண்டெரியினிவக்கும்பூதப்படையவண
கோளொன்றியவானவர்பதமுங்கொள்ளுமாற்றலுடையனவே. (௮)

கங்கைமுதலாஞ்செழுந்தீர்த்தங்கலந்துவந்துபடிந்தார்க்குத்
தங்கள்வினைதீர்ந்திட்டசித்திசாருந்தடமாஞ்சிவகங்கை
யங்கண்வைகுமதன்கரையின்மடநான்கவற்றினாகமத்தின்
றுங்கஞானதேசிகர்களொருவருந்துதிப்பத்துலங்குவரால். (௯)

பருதிப்பூத்தேள்வெள்ளிவரைப்படரின்மதியப்பான்மையென
வுருவம்வெளுத்துத்தன்னொளிகான்றுலவுமெண்ணிலவரையின்
பெருமைக்குவமையதற்கதுவேபிரசமறாத்தண்மலர்ச்சோலை
மருகுபரப்புங்கதிர்சூழ்ந்தவமலவுருவாய்வயங்குமால். (௧௦)

இன்னவனப்பார்கயிலைமலைநடுவேமகிழ்ந்தகர்ப்பப்
பொன்னணிந்தபனறுபன்மணியுங்குயிற்றிப்புகழ்ச்சிக்கடங்காது
தன்னைநிகர்க்குஞ்சிறப்பினதாயயனுமயனுஞ்சமைத்தியாது
மன்னுசத்திசிவாலயமாய்வதியுமாங்கோர்மணிக்கோயில். (௧௧)

தம்பம்விளங்கும்வச்சிரத்தாற்படிகந்தலமிந்திரநீல
மம்பொனடைவிற்சோபானமவிருமணிமாணிக்கமிவை
பம்பிவாயின்முப்பதினோடிரண்டாய்ப்பகல்கான்றொளிர்சிகரத்
தும்பர்போற்றவுருத்திரிகணடிப்பவுயரத்தாணிமிசை. (கஉ)

வாலவியங்கணவசத்திமணிக்காம்பிரட்டவராகிமுத
னீலவிழியாரடப்பைமுதலெவையுமேந்தநிமலையராங்
கோலவதனச்சசீனியராதியர்கள்குழைத்தகலவைச்சே
றாலமுண்டார்க்கெடுத்தியற்றநந்திகுறிப்பினவைவிளக்க. (கங)

சிங்கஞ்சுமந்தசுத்தவித்தைச்சேக்கைமணியாசனத்துமையோ
டெங்கள்பெருமான்வீற்றிருக்குமேல்வைதெரிந்துகமலையெழிற்
கொங்கைக்குவட்டாலுழுதபுயப்புத்தேள்குறுகியடிபணியத்
திங்கள்கங்கைபணிவேணிதிருமாலிருவென்றருள்செய்தான். (கச)

மூலவிலிங்கவடிவமுமாஞ்சகற்காரணனைமுறையோவென்
றோலமிடுதேவர்களுய்யக்கண்டங்கறுத்தவொருமுதலைப்
பாலவிழியான்மதனைவிபொடித்தபரமகாரணனைச்
சீலவடிவப்பரசிவனைத்தெரிசித்துய்யவாஞ்சிதராய். (கரு)

முத்தியடைந்துந்தரிசனத்தான்முயங்குமோனமுனிவர்கண்மெய்ப்
பத்தர்தேவரிருடிகணெருங்கிப்போற்றப்படர்காலந்
தத்தம்பதவிற்றயனாதிதேவரணைந்துசார்ந்துகுழீஇ
நித்தனமலன்கயிலாயமலைத்தாழ்வரையினிரந்தார்கள். (கசு)

பதினெண்கணமுமுறைமுறையாற்காவல்பூண்டவாயில்பல
விதியினகன்றுசோபானமுறையிலேறிவிரிஞ்சன்முதன்
முதியதேவர்சிவகங்கைத்தடத்தின்மருவிமுன்னுணர்வின்
மதியாற்கணங்கடமைவினவியீனுக்கவாயின்மருவினார். (கஎ)

கதிர்செய்மணிக்கோபுரத்தயலேநந்திதேவர்கழல்வணங்கி
யதிருமறையாற்றுதித்தனகண்டவருமீசனடிவணங்கிப்
பதியினின்றுந்தேவரெல்லாம்பணிவானடைந்தாரெனப்பகர
விதிராதகடைப்பவவரையிவண்டருதியென்றான்விமலேசன். (கஅ)

அதுகொண்டிறைதாள்வணங்கியபினந்தியவர்பாலடைந்துமக்குப்
புதியமணிபூணியெம்மானருளிப்பாடுபோதிரென
மூதிருமன்பாற்பண்ணவர்கள்சென்றுமுறையினிறைஞ்சுதலுங்
கதிர்செய்முறுவலளித்தயற்குந்தேவரெவர்க்குங்கடைக்கணித்தான்.

விரிந்துகுவியாப்பதுமமலர்விரிஞ்சன்பதம்பார்த்தணுகுநிலை
தெரிந்துவினவவவற்குறுதிசெய்தானிறையோன்புரந்தரனும்
பரிந்துசென்றுவிண்ணப்பஞ்செய்யப்பரமரருட்கடைக்கண்
புரிந்துதேவர்தத்தநிலைக்குறுதியாகப்புகன்றருளி. (உ0)

செந்தாமரைக்கட்டிருமறுத்தமார்பிற்றிருமான்முகநோக்கிச்
சந்தார்புயத்தநறுங்கொன்றைத்தாரோனுரைப்பார்னீயுமையாம்
பந்தார்விரலியுடன்கூடிபலகாலம்பபடிபார்த்து
முந்தாதுள்ளபடியுரைப்பாயெனவேமுகுந்தன்மொழிகின்றான் (உக)

அடியேனுய்ந்தேனுய்ந்தேனென்றங்கைகூப்பிமுடியடியிற், படி
யுமாறுபணிந்திருந்தானிமலன்பாவைமுகநோக்கித், துடியேரிடைப்
பெண்கொடியேயொருதுகொணுவென்றெடுத்துரைப்பப், படிவமெழு
தவரியமயிலாங்கோசேடிமுகம்பார்த்தாள். உஉ)

அன்னகாலைவற்பலகைகவறுமுதலாவனைத்தினையு
மின்னேனிடையாடரவவைகனங்கையேற்றுவிரைமலர்மேற்
பொன்னுலணிந்தவணிபிறழாதொதுங்கிநடந்துபூங்கொடியே
யன்னுடிருமுன்பரப்புதலுமனுதிமூர்த்தியுடனிருத்தி. (உங)

ஞானவடிவாம்பரஞ்சோதிகளினவதனத்துமையேநீ,கானமலர்ப்பூம்பொருட்டிருந்தோனிழைத்தகதிர்செய்மணிப்பலகைத், தானமுறையான்மரகதவல்லிருத்திவயிரத்தனிச்சூதை,மேன்மைவிளங்கநம்பக்கல்விரித்தியென்னவருள்செய்தான். (உ௪)

அவ்வாறியற்றிமாணிக்கத்தவிர்சூதகங்கையாலெடுத்துச்
செவவேவிரிக்கவிரண்டாறுசிறந்துபிறழ்ச்சிவபெருமா
னவவிரோக்கிகரத்தினின்றும்வாங்கிப்புரட்டநாலர்றே
யொவவாமுறையாலவவவறறைமீராறுகத்திரித்துரைத்தான். (உ௫)

பின்னும்பின்னுமவ்வாறெம்பிராட்டியார்க்குவுருசயத்தைத்
தன்னதாக்கிக்கோடீரந்தயங்கமதிவெண்கேர்முந்தசையச்
சொன்னமுறையேமுடிதளக்கியிறையோன்கூறச்சுடர்த்தொடியெ
மன்னையிமயமலைவல்லிசற்றேறயெள்ளியகங்கறுத்தாள். (உ௬)

பரமானந்தப்பிழம்புருவாமபரையேதானுய்வடிவுகொண்டு
வரமான்மாக்கட்கருள்புரியவல்லோனபகிழும்விளையாட்டீங்
குரமாம்வகையான்மேன்மேலத்திறப்பேமபுரியவூடியுமை
பிரமாதியர்கண்மணிமுடிகளிடறநடந்தாள்பெட்புறவே. (உ௭)

செற்றித்தனிக்கட்சுடரொழுந்துபடர்ந்தாலென்ன நிமிர்சடையோன்
கற்றைக்கருமென்குழற்கொடியைக்கடுகச்சென்றுகரமலரைப
பற்றிக்கொணர்ந்தூரன்னயச்சொல்பகர்ந்துகிருதிப்பாவாய்கே,
ளூற்றதுரைத்தேர்ந்தவறியம்பேமெனருனுலகுக்கொருமுதல்வன் ()

மான்மழயொண்கண்மாமகுயில்போன்மிழற்றுமதுரத்தனிமொழியால்
யாமைப்பழித்தமயிற்சாயலிளங்கொம்பன்னவிமயவல்லி,
யூழைத்தூரந்தெவவுயிர்களுக்குமுயர்வீடளிக்குமுபாயநிலைச்
சூழப்புக்கதனிமுதலேசூழினெல்லையாகாதனவே. (உ௯)

ஆயந்திதிருவுளங்கொண்டருளவேண்டுமெலாககமலை
மேயமுருந்தனபேிலையுக்கடவாதுள்ளமெய்வழக்காற்
பாயுப்பிறழுங்கவற்றினத்திற்கண்டபணத்தைப்பலரறிய
மேயவுலைத்துவிளையாடப்புரிந்தாற்புரிவோமெனவிதித்தாள். (௩0)

மற்றவவர்றேமுன்னுமியாம்புரிந்தவண்ணமணிக்குழைக
ளுற்ற பிறமுங்கருநெடுங்கண்ணுமைகேளினியுன்மனமகிழச்
சொற்றவண்ணம்புரிகுதும்வல்லாடமெனுடங்கென்றிரந்துரைப்பச்
செற்றமகன்றெம்பெருமாட்டியாடமெனுடுத்தாடிருமுன்பே. (௩க)

செந்தாமரையினகவிதன்னழப்பழித்துத்திகழ்ந்ததிருக்கரத்தாற்
பந்தார்விரலியிறைவிகவநெடுத்துப்புரட்டப்பன்னிரண்டு
விழ்ந்தேதோன்றயிருக்காலெட்டானபகடைவரவரக்கண்
டந்தாமரைபோன்முகமலரவண்ணலாடமெனுடுத்தனளுல். (௩௨)

ஆங்குத்தோன்றுவனவெல்லாமாறுநான்குமூன்மெனுமேற்
யோங்கித்தோன்றப்பகடைமுதவிருக்காலெட்டாவுளத்திருத்தப்
பாங்கிலுறைதாமோதரனுமவவாறுவைக்கும்படிகடைக்கண்
ணூங்குப்புரிந்துதிருவிளையாட்டுவேந்தானேமென்பதப்பொருளே. ()

கங்கைகரந்தகடவுடிருவிளையாட்டென்னுங்கருத்துணர்ந்த
செங்கண்மாயோன்முகநோக்கித்தேவியுளத்திற்கொண்டியம்பு
நங்கள்பெருமான்விநயங்களெல்லாமுள்ளபடிநவில்வாய்
சங்கமணிந்தபுத்தேளேசாட்சிகுறித்தேமிதற்கிசைய. (௩௪)

ரன்னேலாடுங்காயாம்பூமேனிமாயனெடுத்துரைப்பான், பொன்னுரி
ழித்துணர்க்சடிலத்திங்கட்கொழுந்தைப்புணர்பொருட்டாற், பன
குகத்தின்சிறுகுஞ்சொன்றேடிப்பையவங்காந்திருந்த, தன்னேயதா
பார்த்திருந்தமதிபிறழ்ந்ததினியாழ்ந்தறிந்துரைப்பேன். (௩ரு)

ஆமிச்செயல்கொண்டீகஞ்சிவப்பதென்னையமலத்தனிமுதல்வன்
காமித்துரைத்தவாறியற்றல்கடனுஞ்சலனக்கருத்தேதன்னே
வாமித்திருந்தவெனக்குமவ்வாறென்னிஞேவென்மடம்பயிர்ப்பு,
சேமித்திருந்ததிருக்கடைக்கட்பிராட்டியென்றுதெரித்துரைத்தார்.

உரைத்தவாறுமனங்கொள்ளாதூடல்பெருக்கிமாதவனை
நிரைத்தசொற்கணவென்மைநினக்கேதெரியுமதுநிற்கக்
கரித்தசுரும்புபாட்டயருங்கொன்றைமாலைக்கடவுளையா
னிரப்பமதியாவகைபுரிந்தவெல்லாங்காண்டியெனவுரைத்தே. (௩௭)

வண்மையாண்மைத்வம்பொறுமைமானம்வேள்வியாவழக்கிவைக
ளுண்மையுடையோரனுவேனும்பிறழார்பிறழினூழிபெயர்ந்
தெண்மைதிரிந்துமுச்சுடருமாறியுலகமிழக்குமெனத்
திண்மையுடையோரறிந்துரைப்பதெல்லாந்தெரிந்தசிவமுதல்வன்.()

பொற்புமிக்கவிளையாடும்பொருட்டாற்குறித்தகுதினிலை,யற்பமன்றி
மகத்தாமோவடைவைந்தொழிலுமியற்றுமிவர், கற்பப்படியேமெய்
யுரைததுவெல்லவேண்டுங்களவுரைத்து,நிற்பதறமோவுரைமுகுந்தா
வென்றுள்சென்றோர்நிலையிருந்தாள். (௩௯)

மெய்ம்மைநோக்கியோகிருக்குமவர்போன்முகுர்த்தம்விழைவின்றி
யையவுணர்வாற்சவலைநினைவென்கோலமலர்க்காருமெழிற்
பொய்பினுட்டங்குநுண்ணிடைமேற்புலம்பும்பருமவகலல்குற்
றையலேயுன்சயமுமரன்சயமுமுனக்கேசாற்றுவரால். (௪௦)

ஆனமுறையாற்பலவுநினைந்தாடல்புரியவேண்டுமெனக்
கானத்துளவோனுணர்த்துதலுங்கனன்றுதேவிமொழிந்தருளுந்
தானமறிந்துநிலைபறிந்துகூறுதென்னைச்சவலையென்று
னூனமுனக்கேவுரையாதோர்பாலுரைக்கவுணரரியே. (௪௧)

என்றுபலவுமெடுத்துரைத்தெம்பிராட்டிகூறுமெரிசுடரே
குன்றுவில்லிதிருநயனமதனாற்பொய்ம்மைகூறிலரே
லின்றெங்கரத்தாலவ்விழிகள்புதைப்பவுலகமிருண்மூழ்கின்
மன்றவின்றபாற்றவருகுமின்றேலெனக்காமெனவரித்து. (சஉ)

பல்காற்றெறிந்துவெஞ்சினத்தாற்கூறுமொழியின்பயனுணர்ந்து, பில்காலெயிற்றுவிடவரவப்பெருமானிசையச்சார்ங்கியுமங், கொல்காதுறையப்புன்னகைகொண்டொய்யென்றெழுந்துகரமலரான், மல்காதடங்கணொளிகள்விழிபுதைத்தாளிருண்டமாதிரமே. (சங)

வையம்விளக்குஞ்சுடரிரண்டுமுறையக்குவிந்தமாநயனச்
செய்யகமலமயன்கழலீந்தோவிதிருமாதுறைகமலந்
தையல்வாணிவளர்கமலஞ்சாற்றுந்தவத்தோருளக்கமலந்
தெய்வந்தியச்செழுங்கமலந்திரைநீர்க்கமலமுழுவதுமே. (சச)

பகல்கான்றிருளைப்பருகியொளிர்பரிதிப்புத்தேண்மதிக்கடவு
ளிகல்கான்றிரவோடேனுறையவெய்துங்காலமி:்தெனநூல்
புகலாநின்றதின்றினியாம்புகலுமுறைமைத்தெவனென்றே
யகலாநின்றூர்கணிதமுறைவல்லாரயவருமுனிவர். (சரு)

சுடரோன்பாவமிருளெனவே துணிந்தத்துணிவேயுவமையான்
மடமார்மூலமலமேயின்றென்றுஞானுபாவமதித்
தடலேறெனவேவென்றிமொழிதர்க்கவாதியகாணக்
கிடலூமிருளிலொளித்திருந்தான்வெய்யோனென்பகலைஞர்களே. ()

வேறு.

பொய்த்தெழினுண்ணிடையிமயப் பொருப்பரையன்மடப்பாவைபுரிமென்கூந்த, னெய்த்தெழில்செய்வடிவாகப்பன்னெடுநாட்கருணைவரநிலவிலாவோ, மைத்தெழிநீர்பரிதியொடுவெண்மதியுநாணவிருண்மல்குமாறு, கைத்தவிராற்பராபரையெம்பிராட்டியிறைவிழிபுதைத்தகாட்சிதானே. (சஎ)

ஆடிபொளிரவமணியிலைவிரொளிகண்ணொளிமுதலாவனைத்தும்வெய்
யோன், கூடியகாலத்தளவாய்மற்றைக்காலத்திலவாங்கொள்கையே
ய்ப்பப், பாடியல்விண்மணிப்பரிதிப்புத்தேளுமதிக்கோனும்படிமப்
பாவை, மூடியகண்ணொளிவிரவாதியந்திரம்போலிருந்தனரென்மொ
ழிகுவாமே. (௪௮)

பாயொளியாலிருள்சீக்கும்பரிதிமதிசெலவொழிந்தபயிலுமாற்றான்
மேயவிருளெப்பொருளும்விரவிபகர்கேவலம்போல்விரியுமாற்று
ஞயகனூர்புரமடுவான்றிசைகாலமில்வழக்காய்நாட்டுமாயன், மேயவு
ரைக்கிலக்கியமாயறிவுடைமேலோர்விதித்துவிளம்புவாரால். (௪௯)

பொற்புறுலோகாலோகப்பெயரையொருங்கிரிக்குநூல்புகலுமந்த, வற்
புதமாவரைமுழுதும்பேரிருளின்மூழ்கியுருவடங்குமாற்றாற், பற்பலவு
வாகியவரையிலொன்றெனலாய்க்காரணப்பேர்பலியாவாகிச், சொற்
பொருட்கோரிடுகுறியாய்நின்றனவேற்றமோவீக்கஞ்சொலற்பாற்ற
ன்றே. (௫0)

இம்முறையசற்சராசரங்களண்டகடாகந்திசைகோளிராசிவான்மீன்
மம்மர்தருதிமிரகணங்கற்பமாயிநமன்றப்பமயங்கிலோக,மிம்முறைசெ
ய்குவதுறுதியிஃதொழிதன்முறைமையெனுமெண்ணமின்றி யம்ம
வோவெனவரற்றியிடர்க்கடலின்மூழ்கியறிவயர்ந்தவன்றே. (௫௧)

தேவர்கடவுளர்முனிவர்சித்தர்மருத்துவரியக்கர்திசைகாப்பாளர்,பூவ
யனுகியவுலகப்பேருரிமைபூண்டுயர்ந்தபுகழ்ப்புத்தேளிர், யாவர்களுந்
தயிற்குழீஇயெழுந்துகயிலைப்பொருப்பினேறிச்சென்று, காவல்பல
கடைகடந்துமணிக்கடைவாயிலினந்திகழலிற்றாழ்ந்தார். (௫௨)

ஓதுநாலுறுதிவழியுகாந்தம்வரன்முறைமைத்தியாமுளத்துந்தேறு
மேதெனநாமெடுத்துரைப்பதகாலத்தேகடைகாள்வந்திறுத்தவின்றே
மாதொருகூறுடையபிரான் பெருங்கருணைவிளையாடன் மதித்ததே
யோ,வேதமுறுமடியோங்கடவினையோவீதெனயாமறிகிலேமால்.

என்றுபலவுந்நினைந்தே துயர்க்கடலிலழுந் துழவுரிமெம்மைபதீரக்,குன்ற
ம்வளைத்தெயின்மூன்றுமொரு நொடியிற்றழலாக்குங்கயிலைக்கோமா
ன், மன்றன்மலர்க்குழ்லுமையாமிறைவிமலர்ச்சேவடியைமறையின்
கூற்று,ணன்றுயிர்கட்குளவாகவிடர்நீங்கத்துதியனந்தவிலனுற்றார்.

வாக்குமனுதீதசுத்தவேதவேதாந்தமுடிமன்னிநின்ற, நீக்கரியவகண்
டசச்சிதானந்தசுகோதயமாநிமலவாழ்வே, காக்குமுறைநாரணற்கும
யன்முதலாங்கடவுளர்க்குங்கருணைபூத்து,சாக்கிரமாதியவறிவாற்றலை
யளிக்கும்பரம்பொருணின்சரணம்போற்றி. (ருரு)

ஆலாலமுண்டிருண்டகண்டங்வகித்தெமையாண்டவரனேபோற்றி
பாவலோசனத்தெழுந்தபட்டர்சுடரான்றதன்பொடியப்பரிந்துபின்
னுங்,கோலவருவுருவளித்திட்டிரதியுயிர்காத்தகுணக்குன்றேபோ
ற்றி,மூலமலமுரணறுத்துச்சுத்தவடிவாக்குவிக்குமுதல்வாபோற்றி.()

வேறு.

கங்கைவேணியனேபோற்றிகயிலைவாழிறையேபோற்றி
மங்களநாதாபோற்றிமாதொருபாகாபோற்றி
புங்கவர்க்கிறையேபோற்றிபூரணமுதல்வாபோற்றி
யெங்கணாயகனேபோற்றியீறிலாமுதல்வாபோற்றி. (ருஎ)

உலகெலாமீன்றாய்போற்றியுலகினுக்கொருவாபோற்றி
திலவணிமுடியாய்போற்றிநீறணிசுடரேபோற்றி
பல்பலவடிவாபோற்றிபன்னகாபரணாபோற்றி
யலகிலாவுயிர்கட்கின்பமளிக்குமற்புதனேபோற்றி. (ருஅ)

சரவணபவனையீன்றசம்புவேபோற்றிபோற்றி
யரணமூன்றெரித்தாய்போற்றியஞ்செழுத்துருவாபோற்றி
பிரணவப்பொருளைநால்வர்க்கருள்புரிபிரானேபோற்றி
பொருவிடையூர்ந்தாய்போற்றிபுண்ணியவடிவேபோற்றி. (ரு[illegible]

வேறு.

தாருகனென்றசுரன்றனையேபோற்றிதந்திமுகன்றனையுயிர்த்த
தலைவிபோற்றி, வாரணிபுர்த்தனவிமயவல்லிபோற்றிவஞ்சியிடைநா
ன்மருங்குன்மானேபோற்றி, நாரணியென்றயன்போற்றவருள்வாய்
போற்றிஞானவடிவாகாதமுதலேபோற்றி, காரணியாயுலகுயிர்களனை
த்துமீன்றுங்கன்னிவடிவாயிருக்குங்கௌரிபோற்றி. (௬௦)

கமலைகலைமாதுபணிசரணீபோற்றிகாமனையுங்கடைக்கணளித்
தாண்டாய்போற்றி, தமலமறுமடியருளஞ்சார்ந்தாய்போற்றிதத்து
வாதீதநிறைதாயேபோற்றி, விமலையெனவேதாந்தத்துறைவாய்போ
ற்றிவிதரணர்கட்கானந்தம்விளைத்தாய்போற்றி, யுமையகிலசிவை
யேனும்பேருடையாய்போற்றியோங்காரத்தொருமுதலேபோற்றி
போற்றி. (௬௧)

இன்னமுறையுலகம்மையப்பரானவிருகுரவாபதாம்புயங்களி
றைஞ்சித்தேவர்,முன்னமுறையிடுமோசையணுகச்சென்றமுததர்தந்
திருச்செவியின்முழங்கநதி, பொன்னடித்தாமரைபரவித்தேவதே
வபொருவின்மணிக்கடைவாயிற்புலவரெல்லாம், பன்முறையாற்று
திக்கின்றார்க்கபயந்தந்துபாதுகாத்தருள்வதுவும்பண்பதாமால். (௬௨)

என்றுரைத்துப்பகிரண்டகோடிபல்காலீன்றளித்தவிமயவல்லி
துணைத்தாள்போற்றி, நன்றுதரவுயிரனைத்துமுய்யுமாறுநந்திகேச்ச
ரரபரசம்புசொல்வா, ரன்றமுதலிதுகாறும்யாங்களன்னையருட்க
டைக்கணளித்ததனல்வாழ்ந்தேமன்றி, மன்றவேறொருகதியின்றி
மையோர்கூட்டமருண்டுமணிக்கடைவாயில்வழுத்தாநின்றார். (௬௩)

வேறு.

பலகலையாகமப்பொருள்கண்முனிவர்தேறார்பார்முழுதழிதாகிதங்க
ளனுவும்பற்றற,நிலமுதலாக்கலைவனாவாழுயிர்களெல்லாநீடிருளின்
பெருங்குழுவினிலைப்பொன்றின்றி, யலகில்கற்பகாலமிடர்க்கடலி

ஞுற்றவாங்கவைதீர்த்தருடியெனவேண்டநந்தி, கலகலெனவளைமுழ ங்கக்கரங்கணீப்பக்கதிரொளிபாய்ந்திருளனைத்துங்கரந்ததன்றே.

பருமவேரகலல்குலுமையாணங்கைப்பங்கயச்செங்கரத்துணைக ணீத்தலோடும், தருமம்வருதீவினைகளோட்டமோபோற்சலதியணை முறித்தெழுந்துசாருமாபோற்,கருமமலமாயையறஞான சத்திகலந்து யிரைவாழ்விக்குங்காட்சிபோலப்,பெருகிருளின்குழுவனைத்தும்பருதி நின்றபேரொளியின்பெருமிதம்விண்பிறங்கிற்றன்றே. (௬௫)

மூலமலநீத்தவுயிர்ஞானசத்தி
யதிட்டானத்தைந்தொழிலுமுடிக்குமாபோற்
காலமகன்றருளுருவாய்நின்றசோதிக்
கடைக்கணொளிநிறைந்திலங்குங்காட்சியாலே
கோலவொளிப்பரிதிமதியாதியான
கோளனைத்துநாளனைத்துங்கொடபுறறநத
ஞாலமதிற்பொருளனைத்தும்விளக்கிற்றென்று
நவில்வதுமோரற்புதமாநாட்டலாமே. (௬௬)

பஞ்சகோசக்குகைக்குளிறைஞான
பரம்பொருண்மற்றனுமகத்துக்கவையாய்நிற்கு
மெஞ்சலில்சீர்ப்பெருங்காட்சிதெரிப்பதேய்ப்ப
விருவிழியினமைந்தவிளங்கொளிசென்றியாவும்
வஞ்சமறக்கலந்தண்டகடாகமெல்லாம்
துதியுமவைக்கங்குரத்தான்மருவுமாறு
கொஞ்சமெனவுவமையெடுத்துரையாவொன்னிற்
குலவுமிலங்கொளிப்பெருமைகூறற்பாற்றே. (௬௭)

மறைநெறிகள்விளங்கியுலகுயிர்களெல்லா
மல்கிவளஞ்சுரந்துசுகவாரிமன்னித்
துறைபலவுந்தெரிந்துதருமார்த்தகாமத்
தொடர்புதொடரகண்டசுத்தவெளியின்மூழ்கி
நறைபருகிக்களித்தமதுகரம்போன்றன்பர்
ஞானவாரிதியுமடுத்திருந்தாரொன்னி
னறைவதெகன்சிவனுருவிவவுலகுக்கெல்லா
மாவியெனவிசைக்குநூலணியாமன்றே. (௬அ)

சித்திரத்துமெழுதவரிதாயமேன்மைத்
திருவடிகண்ணந்திதிருக்கரத்தால்வைப்ப
வத்தடவர்கரத்துமால்கரத்துமூன்றி
யற்புதப்பாதுகையேறிக்கணங்கள்பூதர்
சித்தர்வித்தியாதரர்கள்சூழப்பஞ்ச
தேவவாத்தியமுழங்கச்சின்னமார்ப்பப்
பத்தரொடுவிண்ணவர்கள்பொழிபூமாரி
பதநிறைப்பமாகதரும்பரவிப்போற்ற. (௬௯)

அள்ளியலையெறிந்துசுழல்சுவறக்கங்கை
யந்தரத்தினிருபுடையுமசையுமாபோல்
வெள்ளியசாமரையனந்தம்வாமைகங்கை
மேனகையாதியரிரட்டவிமலமான
வொள்ளியவெண்கயிலைவரைமீதொன்றென்ன
வொளிமுத்தவெண்கொற்றக்குடைகொண்டேய்ப்பப்
பள்ளமடைதிறந்தனபல்கணமவந்தார்ப்பப்
பன்னகங்கள்பன்மணியாற்றீபமேந்த. (எ0)

கோகனகமலருவதைவனப்பால்வென்று
குலவுமுருத்திரகணிகைக்குழாங்களெல்லா

மேகநிலைமின்னுடங்குகாட்சியேய்ப்ப
விரவுசதிமுறைக்கிசையாடிப்பவிம்மி
யாகநிறைமதுரவிசைவீணையோசைக்
கமையவிருமுனிவர்மிடறசையப்பாடத்
தோளுகமயிலெனவுமையும்பாங்கிற்செல்லச்
சுந்தரநாயகன்குறிப்புசொல்லிச்செல்ல. (எக)

வச்சிரமாமணிவாயனீங்கிச்சென்று
மரகதமாமணிமேடைப்பாங்கராங்கட்
பொசசமில்சீர்மயன்கரத்தால்வருந்திச்செய்த
புதுமணிமாமண்டபப்பூந்தவிசின்பாங்க
ரிச்சைதரவெழுந்தருளிநின்றுதேவ
ரியாவரையுங்கடைக்கணிப்பவிறைஞ்சிவீழ்ந்து
நிச்சயவேதப்பொருளால்விரிஞ்சனுதி
நிறைந்தபெருந்தேவரெல்லாந்துதியாநின்று (எஉ)

அத்துவிதப்பொருளானவனுதிமூர்த்தி
யகங்களித்துப்புன்னகைசெய்தமரரியார்க்குந்
தத்துவமடலமுதமெனவருளிச்செய்வார்
சங்கரிசெம்விளையாட்டாற்கரங்கள்சாரப்
பொத்துதலின்விழிச்சுடர்களடங்குமாற்றாற்
பூதவிருண்மறைப்பவென்றுப்புணராவாகி
நிதந்தியமைமித்தியங்களின்றிவேத
நிலைதவறவறிவுசெயனீங்கிற்றன்றே. (எங)

ஆதலினீரனைவர்களுமலமந்தீர்மற்
றனைத்தொழிந்தாங்கவரவர்தம்பதத்திற்சென்று
கோதகவொன்றின்றியேமுன்புபோல்யா
நுவனுமதிகாரமுறையியற்றிவாழ்மி

னாதமினியொருகணமுமனுகாதஞ்ச
லெனவருளிவிடுத்திறைவனெழுந்துபோந்து
நாதமணிமண்டபத்தின்மடங்கலுங்கு
நளினமலர்த்தவிசதனினண்ணினால். (எச)

அம்பொன்மணிவாலவியஞ்சனங்கைக்கொண்டாங்
கவிரொளிப்பொன்னவமணிமண்டபத்திலேறி
யும்பர்களுமதிசயித்துப்போற்றுமெண்ணான்
குயர்நிலைவாயிற்கடையினென்றுலெய்தித்
தம்பமளவிலவவற்றினருகுசார்ந்த
தயங்குமணிவச்சிரத்தூண்சாரநின்று
கொம்பைநிகரிடையிமயவல்லிவீசக்
குறுநகைசெய்திறைநோக்கிக்குறித்தாரன்றே. (எரு)

யாணர்மணிமதாணியெழிற்பருமவல்கு
லைங்கிதங்காண்டொறும்பயஞ்செய்திறைவனோக்கங்
காணுதொறுங்குதுகுதுத்துவிதிர்ப்புற்றஞ்சிக்
கரஞ்சிரத்திலஞ்சலித்துக்குடந்தம்பட்டுப்
பூணணிகண்முறைபிறழவலம்வந்துற்றுப்
பொன்னடித்தாமரைபரவிப்புகழ்ந்துமெய்யி
னுணமடநலிவகற்றியைந்தெட்டங்க
நண்ணும்வகைநமக்கரித்துநயந்துநின்றாள். (எசு)

நின்றுயிர்கட்குயிராகுமனாதிபோத
நிரஞ்சனநிற்குணசுத்தநித்தநேயத்
தோன்றுமநுபூதசுகானந்தவாரி
யுண்மையருள்பகவமகேசானவென்றே
தன்றுணைநாயகனையன்பிற்றுதித்துச்சொல்வாள்
சந்தேகந்திருவுளத்திற்றுங்குமாறென்

மன்றமதியாதடியேன் புரிந்தகுற்ற
மாற்றுமுறையருள்கவெனவணங்கினின்றாள். (௭௭)

பலமுறையுமடிவணங்கிவணங்கியாங்குப்
பன்னகாபரணபுரிபாவந்தீர்ந்து
நலமலியுமுறுதியருளென்னலோடு
நந்திபிரான்வந்துபதங்களினம்போற்றி
யுலகவுயிரனைத்துமிதம்பொருந்துமாற்று
லும்பர்குழாமுறைத்தேவமறலிப்புத்தேள்
தலைவபதசரோருகங்கள்பணியுமாசை
தரித்துமணிக்கடைவாயிற்சார்ந்துநின்றான். (௭அ)

ஆங்கவனைத்தருதியெனாநந்திதேவ
ரணைந்தருளிப்பாடென்னவழைத்தலோடுந்
தாங்கரியமகிழ்ச்சியினொற்சண்டன்சென்று
சம்புபதாம்புயங்களிற்றாழ்ந்திறைஞ்சநோக்கி
யீங்குவன்வந்தணைந்தகருத்தென்னவென்று
நந்திமுகத்தால்வினவயமனுஞ்சொல்வான்
பாங்கிலடியேனுனதுபதங்கள்போற்றப்
பரிந்துவாஞ்சித்துவந்தபடியீதென்றான். (௭௯)

காரிருளின்பெருங்குழுவினெவையுமூழ்கிக்
கண்மகிலையொளிறின்றிக்கடந்தோரொப்பப்
பாருலகமுதலனைத்துமூடமாகிப்
பரம்பொருணின்சிவார்ச்சனமாசனமுமின்றி
யோருருவாமஞ்ஞிமலத்துற்றவண்ண
மூற்றனமத்தீனமையறுபாயந்தேரு
மாருறுவதிவவபராதத்தையென்ன
வறிகிலோமெனமயங்கியமரரெல்லாம். (அ0)

தங்கள்காயிகம்வாக்குமனத்தினானுந்
தரும்புத்தியபுத்தியினுஞ்சார்ந்ததன்று
லிங்கிவையாரேறபவுறுந்தீரவெவவாறென்
றிருங்கயிலைசென்றிறைதான்பணியென்றேவ
வங்கவர்கள்வினவுமொழிக்கருள்பேற்றேக
வணைக்தன்னெனன்றிரந்துரைப்பவவனைவிட்டுத்
திங்கள்வதனத்துமையைமாலைநோக்கித்
தெளிந்துரைப்பீர்செப்புநூற்றிறத்தாலென்றார். (அக)

காரணநாயகனகைசெய்திவ்வாறோதக்
கமலைதனிக்கொழுநனுரையாட்டான்வைகப்
பூரணிமெய்ம்மிறைவிசரா சரங்களின்
பொருப்பரையன்கன்னியெடுத்துரையாநின்று
ளாரணமுந்தெரிவரியமுதலேநின்பா
லடியனேன்புரிந்தாயப்பராதத்தாற்
கோரவிருள்வந்தணுகியிவ்வாறாகக்
கொடும்பாவம்வந்ததுவேறிலலையென்றாள். (அஉ)

ஆரணமுந்தேறரியபோதமூர்த்தி
யருள்செய்வானமலையுன்போல்யாவர்சொல்வார்
நாரணனுங்கூறரியநன்மைசான்ற
நடுநிலையாலுரைத்தநலமிகவுநன்று
பூரணியாதலினிவ்வாறுரைத்தாய்வேண்டும்
பொருளுரைப்பாய்தருதுமெனப்புணர்ப்புநோக்கிக்
காரணநாயகனருளக்கேட்டலோடுங்
கலைமதிவாணமுகத்துமையாள்கழறுகின்றாள். (அரு)

பூரணப்பொற்குடமிரண்டுகொண்டுநின்ற
பொலங்கொடிபோற்றிருவுருவப்பொருப்பின்மங்கை

வாரணவீருரிபோர்த்தவண்ணல்பாதம
வணங்கிவிழிபுதைத்தபிழைமாறுமாற்று
லாரணத்தினுட்பொருளேவருள்கவென்ன
வகிலாண்டமீன்றபராபரையேயாதி
காரணியேயெமையகலாச்சந்திநின்பாற்
கருவாதுபாவவினைகவலேலென்றார்

அறுதிமுத்தசச்சிதானந்தமோன
வற்புதசிற்கனமுருவாபகிலமுய்யத
தனுதசுதந்தரசுத்தசத்தியேனி
தாக்கிருதகமினெனத்தாங்கிநின்று
மனுநிகளுக்கெட்டாப்பேருருவைமென்போல
மதிகளைவையன்றியபராதமற்றே
நினுதுகடைக்கண்ணருளாற்குற்றநீக்கி
நேயமருளெனப்பின்னும்பணியாநின்றாள். (அரு)

அனந்தமுறையஞ்சலித்துப்பணிந்துபோற்றி
யகமுருகிநெடுங்யோகமார்த்தித்
தனிந்தவறும்வறியனைப்போல்வதனம்வேறாய்ச்
சாற்றுமுறைதிருச்செவியிற்சார்ந்தபோது
சினந்தொருசொலபராதமுறலாற்றாவு
செப்புவங்கேள்வாலயங்களனைத்துஞ்சென்று
நினைந்துபணிந்தருச்சித்துநித்தம்போற்றி
நியதிபுரியென்றுபின்னுநிகழ்த்துகின்றார். (அசு)

தென்றிசைக்கோவினவுமொழிதேறுமாறு
தேவியுரைத்ததுகொண்டுதிசைப்புநீங்கக்
குன்றவில்லிதர்ச்சனிசால்கரத்தாலேவக்
குதுகலத்தாற்றிருவடிகள்வணங்கிப்போற்றித்

தன்றனிமாநகர்நோக்கிமேமதியேறிச்
சார்ந்தனனிக்கிளைகொழுநனசரணம்போற்றி
மன்றன்மலர்க்கொன்றையணியிறைவனேவ
வைகுந்தமாநகர்க்கேசெல்லாநின்றான். (௬எ)

மானினிகன்னிகையுருவந்தரித்துநீயுங்
கயிலாயத்க்கணத்தின்மருவிமாங்கே
யூனமில்சம்புத்தீவந்தொளிராநிறகு
முயர்ந்ததலமாயிரத்தெட்டும்பர்போற்றுந்
தானமவையாமிருக்குந்தலங்களாமத்
தலத்திலிங்கமூர்த்தியடிசார்ந்துபோற்றிக்
கானமலர்த்தீர்த்ததம்படிந்தாங்காரங்
கருதாதுதவம்புரிந்துகணித்துநாமம். (௬அ)

விதித்தமுறைகேத்திரவாசங்கள்பத்தி
விரவுமன்பாலருச்சித்துமேன்மையான
கதித்ததலம்பூவலமாய்வந்துபோற்றக்
கண்ணிடமுந்தோளிடமுந்துடிப்பவாங்கே
மதிக்குநலந்தருபாற்கூபங்கள்காணும்
வதிசகுனநம்பெயரோவபூத்தியென்றுந்
துதிக்குமந்தப்பதிமருவிவிதியாற்பூசை
சொல்லுமடைவினில்விரதந்தொடங்குவாயால். (௬௯)

ஆயிடையின்வதிதீர்த்தமடைவிலாடி
யருந்தவஞ்செய்தயர்வின்றியனேககால
மேயுநினைப்பாவமகன்றிடவாலியாம்வந்
தின்பநலமணம்புணர்துமேகுகென்ன
நாயகனுங்கருணைகூர்ந்தருளலோடுங்
கன்னிகையுமெழுமாதாநயந்துருழ
வாயதலமாயிரத்தெட்டினுஞ்சென்றீச
னடிவணங்கியுலகுயிர்கட்கருள்வாளன்னே. (௭0)

தேவிதிருக்கண்புதைத்தசருக்கமுற்றிற்று.

ஆகப்பாடல ௩௨அ.



# தேவிதிருக்கண்புதைத்த சருக்கம்.

அருந்தவக்கொள்கைப் பெருந்தவவியாசர் திருவாய்மலர்ந்தருளிய புராணம் பதினெட்டையும் யாங்களுய்யும்பொருட்டு விளம்பி வருகின்றசூதமுனிவரே! ஞானவடிவினளாகிய பராசத்திக்குச்சாபம் வந்த காரணமும் நீங்கியவிதமும் அடியேங்களுக்குத் திருவாய்மலர வேண்டுமென்று சவுனகாதிமுனிவரர்வேண்டச் சூதமுனிவர் சொல்வாராயினர். சிவஞானமே திரண்டோருருவமாய் நின்றாலன்ன திருக்கயிலாயமலையிலே திருவாலயத்திலே சிங்காதனத்திலே, கருணைத்திருவுருவங்கொண்டு பரமசிவமு முமாதேவியாரு மன்பர்க்கருளுமாறு வீற்றிருந்தருளுகையில், திருமறுமார்பனாகிய விட்டுணுமூர்த்தி, தேவாதிதேவனை வந்திக்கும்பொருட் டஞ்சலியத்தராய்வந்தடிபணிந்து நின்றனர். அப்பொழுதெமபிரா னவரை யோர்பாலிருக்கவருள, அத்திருமாலங்ஙனமே யெழுந்தருளியிருந்தனர். அத்தருணத்தில், பிரமன், இந்திரன், திக்குப்பாலகர், மற்றைத்தேவரிருடியர் முதலியோர் பலரும் பசுபதிநாதரைத்தரிசிக்கும்பொருட்டு வந்து திருநந்திதேவரடிபணிந்து வேண்டினர். அந்நந்திதேவரண்ணலார் சந்நிதியிற்சென்று, பணிந்து, குனிந்து, வாய்பொத்தி, தேவர்பலருந் தரிசனத்திற்குவந்து காத்திருப்பதை விண்ணப்பித்தனர். சிவபெருமானவர்களை யீண்டுத்தருதியென்றாஞாபிக்க, அவ்வாறே நந்திதேவரவர்களையனுப்ப, அவர்கள் சந்நிதியில்வந்து, நமஸ்கரித்துக் கைகளைச் சிரமேற்குவித்து, உரோமாஞ்சிதங்கொண்ட வுடலினராகி, வேதமொழிகளால் தோத்திரித்து நின்றனர். அப்பொழுது பிரமனிந்திரனிருவருங் கண்ணுதற் கடவுளிடத்துத் தங்கள் குறைகளை விண்ணப்பஞ்செய்ய, அக்குறைகளை முற்றுந்தீர்த்து வேண்டும் வரங்களையுந் தந்தருளினர். பின்னர் பிரமன்முதலிய தேவரு மிருடிகளும் திருவடியிற்பணிந்து விடைபெற்றுக்கொண்டு தங்களுலகஞ் சேர்ந்தனர்.

பிறகுசம்புவானவா, ஜீவகோடிகளைக் கடைத்தேற்றும்வண்ணம் ஓர் திருவிளையாடலைக்கருதித் திருமான்முகநோக்கி, இங்கு நாமும் நமதுமாதேவியும் விளையாடும் விளையாட்டிற்குச் சாட்சியாகவிருந்து தோல்வி சயத்தைச் சொல்லுகவெனக் கட்டளையிட,அவர் உய்ந்தே னுய்ந்தேனென்று மகிழ்ந்து ஐயன்றிருவடியிற்பணிந்திருக்க, பின்பு உமாதேவிதிருமுகத்தைப்பார்த்துச் சூதிவிளையாடுவோங்கருவிகளைக் கொண்டுவாவென்று வாய்மலர்ந்தருளினர். உலகமாதாவாகிய பிராட் டியாருந் தனிமகிழ்ந் தையன் கருணையைத்தெரிந்து சேடிமுகநோக்கி னர். அப்பொழு தச்சேடியானவ ளம்மை குறிப்பறிந்து மாணிக்கந் துயின்றபலகையும், மரகதக்காயும், வைரச்சுவறும் கொண்டுவந்து வைத்து அம்மை திருவடியிற் பணிந்தனள். கருணைப்பெருமா னது கண்டுஞானவுமையே! பிரமன் நமதாணையாற்சிருட்டித்த விக்கருவி களையாடத்தக்கவிதம் பரப்புகவெனக் கட்டளையிட, அவ்வாறே எல லாக்கருவிகளையு மமைத்தாடத தொடங்கினர்.முதலில் உமாதேவி யார் மாணிக்கம்போலுஞ் செவ்வொளிபரப்பி மரைமலர்போலும் வனப்புவாய்ந்த தனதுதிருக்கரத்தாற்கவறையெடுத்துருட்ட வீராறு விழுந்தது. உடனே யதையமலன்வாங்கியுருட்ட நாலாறு விழுந்தது. அதனைச் சகதீசனீராறு விழுந்ததாகக்கூறினர். மறுபடியுமாட வப் பொழுது மம்மைக்கே வெற்றியுண்டாக வதனையு மையன்மாற்றி யுரைக்க, வகிலகாரணி தேவன் லீலையை யறியாள்போன்று சற்றே சினமுற்றவள்போ லிருந்தனள். அன்பர்க்கருளு மருளாளன் சக லர்க்கருள்வது காரணமாகச்செய்யும் லீலையாதலின், மறுவலுமாடத் தொடங்கியபொழுது, உலகீன்ற உத்தமிக்கே வெற்றியுண்டாகப் பின்னருமறைத்துத் தனக்கென்றே கூறினன். அதுகண்ட சச்சிதா னந்தத்தனிப்பிழம்பாகிய பார்வதிதேவியார் பொருர்போல, பிரமன் முதலிய சுரர்பணியுந் திருவடியானடந்து தனதுவளத்தேற்றனர். அதுகண்ட பிள்ளைகர் பின்னேசென்று மரகதக்கொடியனைய சத்தி யின் கரமலரைப்பிடித்தழைத்துவந்து "கோபிக்காதே. உண்மை நீ

யறியா யல்லை. இப்பொழுதாடுவோம். சயமுவந்தாலுனக்கே சொல்லுகின்றேன்'' என்றுகூற வதற்குப்பராசத்தி "நினைத்தமாத்திரத்தே யூழைழ்விலக்கி யுயிர்க் கிருளக்கொண்ட விவலீலையிற்றுங்கண் முன்னிறுவெதுமுடியாது? அருட்பெருங்கடவுளே! ஊழின் மன்னியவுயாகளைக் காக்கச்செய்யும் லீலைக்குச்சான்றாகத் திருமாலைவைத்தாடுவோம். வெற்றிதோல்வியை யவன்கூறக்கடவன்'' என்றுகூற வதற்குச் சம்மதங்கொண்டவெம்பெருமானருட்கொடியாகிய வம்மையைநோக்கியுவவாறேயாடுவோமெனறவளவி லுமாதேவியாரழகிய திருக்கரத்திற் கவறையெடுததாடப் பன்னிரண்டேவிழ, வெமதையன் வாங்கியாட விருக்காலிருமூன்றென்றேவிழ,தேவிமுகமலர்ந்து மறுவலும் வாங்கியாட, வப்பன்னிரண்டேவிழ, தேவாதிதேவனுட விருநான் கொன்றே பின்னரும் விழுந்தது. இவவண்ணம் பலமுறையுமாடியும் வெற்றியெங்களுலகநாயகியாருக்கே யுண்டாகவுந்தாம்கொண்டகருத்தைமுற்றுவிக்கும்நிமித்தந்தமக்கே வெற்றிகூறத திருமான்முகத்தை நோக்கினர். அதுதெரிந்தநாயகி விட்டுணுவைநோக்கி "ஐயன் வினையமெல்லாந் தெரிந்த நீ உண்மையைக் கூறுக'' என, விட்டுணு "அமமையே யான் எங்கணாயகர் திருச்சடையில் வீற்றிருக்கும் மதிக்குழவி யங்குள்ள வரவைக்கண்டு பிரமகபாலத்துட்புக வவ்வரவுவாயங்காந்திருந்த விநோதத்தைக கண்டிருந்தே னதனலதனைக் கவனிக்காதிருந்து விட்டேன். இனிக்கவனிப்பேன். ஆடவேண்டும்'' என்று வேண்ட வதற்குப் பராசத்தி கோபங்கொண்டு "நிகழ்ந்ததோல்வி சயத்தை யறிந்திருந்துமோர்சாராகிநடுவு பிழைத்தாய். தவம், பொறுமை, வாய்மை முதலிய வுடையோர் தவறுரையா ராதலின் நீ யுண்மைகூறுக'' என்றுரைக்க வதைக்கேட்ட முகுந்தன் சிறிதுநேரம் யோகியர்போல் வாளாவிருந்து பின்னருமாதேவியாரின் றிருமுகத்தைநோக்கி யுன்றன்சயமுஞ் சிவபெருமான் சயமும் அவரே கூறுவர். சவலைகளைப்போலச் சினங் கொள்ளற்கவென்று வேண்ட பரமமாதா மிகச்சினந்து "என்னை

யறிவிலிபோற் சவலையென்றாய். நீ மிகக் குறறமுடையனாயினை, பெருமானா ருயிர்களின்பொருட்டுச்செய்த விவ்லீலை யெளிதன்று. பரமபதியின் றிருமுகத்துள்ள முச்சுடரும் பொய்கூறாதாகலின் அவற்றை மறைக்கிறேன். யான் றோற்றிருந்தா லவைமறைபடா மலே யொளிவீசும். ஐயன்றோற்றிருந்தா லவைமறைந்துல கிருளின் மூழ்கும். ஆதலா லவ்வாறு செய்வேன்" எனவெழுந்து பரமேச்சு ரன்றிருக்கண்களைத் தமது திவ்யதிருக்கரத்தாற் பொத்தினர். உல கீன்றவன்னை கமலக்கரத்தான் மூடியமாத்திரத்திலிரவி மதியாமிரு விழிகளு மொளிவழங்காதாக, எவ்வுலகும் பேரிருணிறைய வுயிர்க ளெல்லா மிடர்க் கடலின்மூழ்கின. அப்பொழுது தேவர்கள், முனி வரர், சித்தர்முதலிய பலருங்கூடிக் கயிலையில்வந்து திருநந்திதேவர் திருவடியிற்பணிந்து நின்று புலம்புவாராயினர். "இது வெம்பெரு மான் றிருவிளையாடலேயோ! அல்லது அடியேங்க டீவினையோ! தெரிகிலேம். வேதத்திற் கூறியவாறே யுகாந்தகாலமு மிப்பொழுது வாராதே. இவ்வகாலத்து நேர்ந்த திமிரவிக்கத்திற்கு மூலம்யாதோ" என்று புலம்பிப் புலம்பி வேதமொழிகளா லெம்பெருமாட்டியையு மெம்பெருமானையுந் தோத்திரஞ் செய்வாராயினர். "குணங்கடந்த பெருமுதலே, தேவதேவே, விடமுண்டகண்டனே, மூவாமுதலே, முத்திக்கு வித்தே, புரமட்டபெருமானே, பிஞ்ஞகா, அடியேங்களைக் காக்குக, அகிலாண்டகோடி பிரமாண்டநாயகி, பரமதயாளி, சா லோகசாமீபசாரூபசாயுச்சியகாரணி, உலகமாதா, கலைமகளுங் கமலை யும்வழிபடவலார்க்கருளுமம்மையே, அடியேங்களைக் காக்குக" என்று தோத்திரஞ்செய்து கொண்டிருக்கத் திருநந்திதேவர், தேவர்பிரான் றிருமுன்னர்ச்சென்று, 'கும்பிட்டு, வாய்பொத்தித் தேவர்களெல்லா மிருளின் மிகையால் வருந்திப் பிரார்த்திப்பதை விண்ணப்பித்து, அம்மைபாதாம்புயத்தில் வந்தித்து "உலகெலாமீன்றதாயே யுன் மக்களாகிய யாங்களெல்லா மனேககாலமாயந்தகாரத்தகப்பட்டு வருந்துகின்றோம். கடைக்கணித்துக் காக்கவேண்டும்" என்று

பிரார்த்தித்தவுடனே, அம்மையார் தமது திருக்கரத்தை யெடுத்த னர். உடனே யுலகெல்லா மொளிநிரம்பிப் பிரகாசமுண்டாயின. உயிர்களெல்லாம் பேரானந்த மடைந்தன. வேதாகம புராண விதி காசங்கள் குதுகலித்தன. தருமங் களித்தன. சற்கருமம் பரவின. தேவதேவன்றிருமுன்புசென்று தேவர்களெல்லாம் பணிந்து, நெஞ்ச நெக்குருகி, கண்ணீர்வார, புளகாங்கிதர்களாய் நின்றனர். அத்தருணத்தில் தேவன் குறிப்பிலொழுகுந்திருநந்திதேவர் பாதுகையைக் கொண்டுவந்து திருவடியின் முன்புவைத்துத் திருப்பாதத்திற் சேர்த்தருளினர். அப்பொழுது தேவர்களெல்லாஞ் சாமரை யிரட்டித் திருக்குடைபிடிக்கத் தேவதுந்துபிமுழக்க முனிவரெல்லா மரகர முழக்கஞ்செய்யவு மெழுந்தருளித் தெய்வீகமாகிய அரதனம் பதித்த திருமண்டபத் தமர்ந்தருளித் தேவர்பாற் கடைக்கணிக்க, அவரெல்லாம் பணிந்தெழுந்து தோத்திரஞ்செய்ய. ஐயனவர்களை நோக்கி''நமதுமை விளையாட்டா லெமதுகண்களை மூட வுலகமுற்று மிருண்மூழ்கிற்றதனு னீங்களெல்லாம் மிக வருந்தினீர்கள். இனி யெப்பொழுதுந் துயருறு வண்ணங் காக்கின்றேம். நமது கட்டளைப்படி விதித்த தொழில்களைச்செய்து கொண்டிருங்கள்'' என்று விடைகொடுத்தனுப்ப அவர்களெல்லாம்வணங்கிவிடைபெற்றுத்தத் தமுலகஞ் சேர்ந்தனர். பின்பு சிவபெருமானு ருள்ளே யெழுந்தருளியங்கிருந்த வரியணையில் வீற்றிருந்தருளினர். உமாதேவியாரும் பின்னேசென்று, அங்குள்ள படிகத்தூணினிடத்துச் சார்ந்து நின்றனர். சிவபெருமான் றேவிமுகத்தை வினயமாகப்பார்க்க, அம்மையு முடனே திருவடியிற்பணிந்து "எம்பெருமானே தெரியாமையால் விளையாட்டாகச்செய்த விக்குற்றத்தை மன்னித்திடல்வேண்டும்." என்று பிரார்த்திக்கும்பொழுது, திருநந்தி தேவர்வந்து திருவடியிற் பணிந்து யமதருமன் தரிசனத்திற்கு வந்திருக்கிறானென்பதை விண்ணப்பிக்க, வீண்டழைத்திடுமென்று கட்டளையிட, வுடனே வபரசம்புவும் யமதருமனை யுத்தரவானபடியாற் றரிசனத்திற்கு வருகவென்

றழைத்துவர, யமதருமன் வந்து திருவடியிறபணிந்து நிற்க,'பிரபு வானவர் நந்திதேவனைப்பார்த்து எங்கு வந்தனனென்று வினவ, தருமதேவன் விண்ணப்பஞ் செய்வானாயினன். 'அநேககாலமாயி ருண்மூழ்கியிருந்தமையாற் செய்யுஞ் செயலெல்லாமொழிந்து பாவத்திற் காளாயினேனாதலின் அதற்குக் கழுவாயுரைத்தருளல் வேண்டுமென்று வேண்ட, அதுவறிந்து உமாதேவியாரடியேன்செய்த செயலாலித்துணைத் தீங்குலகத்திற்கு நேர்ந்தமையா லித்தீங்கொழியுமாறு அடியேனுக்குக் கட்டளையிட்டருள வேண்டுமென்று நனி வருந்திப் பிரார்த்திக்க தேவன் "உமையே நீ நம்பாலமருஞ் சத்தியாதலினுன்னை யெந்தப்பாவமு மணுகாவாதலினஞ்சற்க" எனக் கூறினா. அநாதிசித்துருவாய் மன்னியகருணை யங்கடவுளே! தாங்கள் கருணை செய்யினெத்துணைப்பாவமு நீங்குமென்பதற் கையமில்லை யாயினுமடியேனுய்யும் வண்ணந்தீர்வு தந்தருள வேண்டுமென்று, வறியன் தனவானிடத்துயாசித்து நிற்பதுபோல மனநடுங்கியஞ்சலித்து நிறகுமுமையைப்பார்த்து, யமதருமன் வினவிற்கு விடையாக வாமதேவர் திருவாய்மலர்ந்தருள்வாராயினர். "உமையே! நீ பூமியிலுள்ள நமது ஆலயங்களிற் சென்று பூசித்து வலம்வந்து தோத்திரஞ்செய்க" எனக்கட்டளையிட, வதனைத்தெரிந்த தருமன் ஐயனைவணங்கி விடைபெற்று நீங்கித்தனதுலகஞ்சென்றனன். திருமாலுந் தேவ தேவனைப்பணிந்து போற்றி யுத்தரவுபெற்று வைகுந்தஞ் சேர்ந்தனன. பின்புமையை நோக்கி "நமது கைலைக்குத் தென்பாலுள்ள பூமியிற்சென்று நமது திவ்யத்லங்களைத் தரிசித்துத் தீர்த்தங்களின் மூழ்கி விரதங்களை யனுட்டித்துப் பூமிவலம் வருவாயாக. அக்காலத்தி லெந்தத்தலத்தி லிடதுகண்களு மிடதுதோள்களுந் துடிக்கின்றனவோ வத்தலத்திருந்தங்குள்ள தீர்த்தங்களில் ஸ்நானஞ் செய்துணவின்றித் தவஞ்செய்வாயாக. அங்கு வந்திப்பாவங்களைத் தொலைத்துன்னை நாம் மணஞ்செய்வேம்" என்று கட்டளையிட் டருளினர். அது கேட்டம்மையாருயிர்கள் பாவமகன்றுய்யுமாற்றூற் குழவிநோய்க்குத்தாய் மருந்துண்ணு மாறுபோலத் தவ்டி வந்தாங்கிக் கன்னியரொழுவர் சூழ்ந்து போற்றப் பூமியிலெழுந்தருளிச் சிவாலயமாயிரத்தெட்டுந் தரிசிப்பாராயினர்.

---

# தேவிதலங்கடரிசித்தசருக்கம்.



கங்கைநாயகனுமையுடனாடியகாதை
யங்கியூலவையுமடைவினிற்கேட்டமாமுனிவ
ரெங்கணாய்கிபணிபதியாயிரத்தெட்டுங்
துங்கமாகநீயருளெனச்சூதனுஞ்சொல்வான். (க)

கருதுபுட்கரந்துண்டுலிகண்ணுவாச்சிரம
நிருதராமகத்தியமியயாதினீள்பதனங்
தருமமல்குமாகாளமேசந்தனுத்திரியே
மருவுபத்திரவடஞ்சிந்துத்தீபமேல்வந்தாள். (உ)

ஆனபத்திரபாதமேபத்திராரணியம்
வானஞ்சார்கவுரவமலைசிவபுரமவிபுதத்
தான்னீபவாரணியமேதாளிமாநகரங்
கானகுண்டிளைமைங்கணைக்காமமாநகரே. (ங)

சொன்னவாறருளரித்தலஞ்சோணகாகேய
மன்னுபத்திரபட்டினம்புட்பமாவனமே
பொன்னேபூதபுல்வனங்கர்மவனம்புகழ்குகேச
முன்னமல்குகூர்மேச்சரமச்சவாரணியம். (ச)

தெய்குமல்கியசேடனூர்தேவராரணியஞ்
சங்கமார்வனயோகியூர்சாருமாபுரமே
மங்கலந்திரும்மாதனவேமப்பேர்வனமே
திங்கடங்கியவாருணபட்டினஞ்சேர்ந்தாள். (ரு)

அங்கண்வைகியவாருணேச்சரனடிவணங்கிக்
கொங்குலாமலர்ச்சுதாமனுவார்வணங்குறுகித்
தங்கிநாயகியார்சரகேச்சரம்பணிந்து
மங்குலேய்கபித்தாரணியந்தொழவந்தாள். (௬)

மாதராட்டரூச்சிருங்கமாபுரம்வந்துவணங்கி
யேதநீங்கியசோமனூர்வாயுவூரிறைஞ்சி
நாதனண்ணியகாசிபாச்சிரமததைநயந்து
சீதமல்குகோபேச்சரமெனுந்தலஞ்செறிந்தாள் (௭)

ஒப்பிலாதவக்கிருத்திரமுமையவள்வணங்கிச்
செப்பமார்மனுகாரணியநதலந்திளைத்து
வைப்புவாழ்சடையப்பர்கோபருப்பதமகன்று
வைப்பெனப்புகழாமபிரமரிதொழவந்தாள். (௮)

வண்டுபாட்டரூச்சருமந்நிதடம்வணங்கி
யெண்டரும்பிரசாதவூசங்கமமிறைஞ்சி
யண்டர்வாழ்வரதானமுமபணிந்தகன்றன்பாற்
பண்டையோகர்வாழ்துவாரவதிச்சரம்பணிந்தாள். (௯)

முத்தித்தானமாஞ்சநமகத்தலமுரணுப்
பத்தியாகவேசங்குகன்னேச்சரம்பரவி
நித்தமாம்பிரமிதிவசோத்தாரமுநிநவிப்
பத்தர்வாழ்சிர்தூத்தமப்பெயர்ப்பதியினைப்பணிந்தாள். (௧௦)

மாடமல்கியபிரமதுங்கப்பெயர்வனத்துஞ்
சேடர்வாழ்குமரப்பெயர்குண்டமுஞ்சென்று
நீடிரேணுகாபுரத்தொடுநெடுமெதில்வாயி
லாடகம்பொலிகும்பகோணத்துவந்தடைந்தாள். (௧௧)

கங்கையாதியதீர்த்தமும்பொன்னவன்கலக்ஞ்
சிங்கவோரையில்வந்ததந்தீவினைகழுவுந்
துங்கமேன்மைசேர்தீர்த்தத்துமூழ்கிமுன்றோன்று
மெங்களையகன்கும்பகோணேசனையிறைஞ்சி. (கஉ)

மஞ்சுசூழ்சைவபஞ்சனதேசனைவணங்கிக்
குஞ்சமழூர்கிரிபத்திரபதத்தினுங்குறுகி
யிஞ்சிசூழ்மணிமந்தமுந்தேவிகையிறைஞ்சி
வஞ்சிபுல்கிடைக்காமவாசத்தினில்வந்தாள். (கங)

விசைதீர்க்கசத்திரஞ்சாருமசேகூசமம்வியந்து
வசையினுகசன்மாசிலேமற்பேதத்தைவணங்கி
யிசைவிளங்கியநன்னகோற்பேதததைதயிறைஞ்சிக்
குசைவளர்சருவோற்பேதமாநகர்குறுகி. (கச)

அம்புயத்தடச்சதத்துருநந்தத்துமணுகி
வம்பரூமலர்க்குமாரகோடித்தலம்வதிந்து
கொம்பனூர்பணியுருத்திரகோடியுங்கும்பிட்
டெம்பிரான்பதமிருடித்நாணத்தினுமிறைஞ்சி. (கரு)

மேன்மைசார்சிவாவாசமாவிமலனைவிழைந்து
ஞானமீர்குருக்கேத்திரமங்களநயந்து
நானமார்தருங்கந்துகபுரத்தையுநயந்து
தானமார்தருவபிட்டிணமெனும்பதிசார்ந்தாள். (கசு)

வேதநாதமார்பூபிதீர்த்தத்தினைவியந்து
நாதமுங்கமழ்சாலுகிராமகங்கலந்து
பேதமில்லதோர்கபர்த்தியார்தருவியும்பேணி
மாதர்வண்டலார்துவாரபாலத்தினும்வந்தாள். (கஎ)

மந்திரம்பஞ்சவடமுதற்பதிகளைமன்னி
யிந்திரன்பணிகோடிதீர்த்தத்தினுமிறைஞ்சிச்
சுந்தரந்தருமசுவத்தக்கேத்திரந்துணைவி
யெந்தையார்வராகேச்சரமென்பதுமேத்தி. (கஅ)

கோதிலேகவஞ்சப்பெயர்சிலந்தியூர்குறுகி
நீதியார்கிருதாசவுசத்தினுநிலவி
மாதர்மல்கியபஞ்சவடாக்கியமதித்து
வாதிராயசீமத்துவாரத்தினுமமர்ந்தாள். (கசு)

பண்ணலந்தருமாதடமெனுந்தலம்பணிந்து
விண்ணெலாந்தொழும்பஞ்சதீர்த்தப்பதியேவி
யண்ணல்வேணுவனேசனதடியிணையருச்சித்
தெண்ணுகாயசோதனமெனுமப்பதியிருந்தாள். (உ0)

பத்தர்லோபாத்திரோததீர்த்தத்தினும்பணிந்து
சித்தர்வாழுலோகத்துவாரத்தினுஞ்செறிந்து
முத்தர்சீபுரங்காபிலஞ்சூரியமுன்னி
யத்தர்கோபுரம்விருடேசனத்தும்வந்தமைத்தாள். (உக)

சங்கநாமத்துந்தேவிமாபுரத்தினுஞ்சார்ந்தே
யெங்கணுயகியக்கமாபுரத்தினுமெய்தி
பங்கயப்பிரமாவர்த்ததீர்த்தகம்பணிந்து
மங்களந்தருகாசிநாயகனடிவணங்கி. (உஉ)

சத்தமாதரோருத்திரக்கேத்திரஞ்சார்ந்து
சுத்தமாஞ்சிவாவாசமேமுதற்பலதொழுது
நித்தனூர்தநைசாரகதப்பதிநேர்ந்து
வைத்தபூதவூர்வியங்கதூமத்தினும்வந்தாள். (உங)

மையருவிழிச்சருவதோபத்திரம்வணங்கிப்
பையருவரவாரம்ராக்கியும்பணிந்து
மெய்யர்வாழ்தருசாலிகோத்திரத்தினும்வியந்தே
வையநண்ணிடைவாமனபுரத்தும்வந்தடைந்தாள். (உச)

பச்சைமேனியாள்பவாகிருதத்தலம்பணிந்தே
யச்சமின்மருத்தாலயஞ்சீகுண்டமமர்ந்து
மெச்சுசாரசுவதனைநமிசாகுண்டமேவி
யிச்சையிற்றொழுதிருந்தனளெம்மையாளுடையாள். (உரு)

ஆயகுல்வியாசாரசுவததிறுமனுகி
நாயனார்தமைக்கன்னிகாநகரத்தினயந்து
தூயவப்பிரமேச்சரஞ்சோமத்தானத்து
மேயசப்தசாரசுவதமெனுந்தலம்விரும்பி. (உசா)

மங்களுக்கியமத்தியாகரமிவைவழுத்திக்
கொங்குசேர்குழலபாபவராக்கியங்குலவித்
துங்கஞானதஞ்ஞானகமிவைகளிற்றொழுது
திங்கணாண்முகியக்கினிப்பேர்த்தலஞ்சென்றாள். (உஎ)

இந்திரப்பெயராலயமினபுரந்தொழுதே
சந்திரந்தனதேச்சரமுதற்றலஞ்சார்ந்து
பந்தபாசத்தையொழித்தருள்விமலனைப்பரவிக்
கந்தனைப்பயந்தாளிறையன்பினிற்கலந்தாள். (உஅ)

ஞானநாயகிவைசுவாமித்திரநயந்து
மோனமார்சுருபிரமகாரணத்தினுமுன்னிப்
பானலார்வயற்பிரதூதகப்பெயர்த்தலம்பணிந்து
கானமார்பொழிற்கீரசிரவத்தினைக்கண்டாள். (உகூ)

மேன்மைசார்மதுச்சிரவமாமத்தலம்வியந்து
மான்மியந்தருபரப்பிரகாசத்தைவழுத்திக்
கானிலந்தருசதசகத்திரத்தலங்கணித்துப்
பான்மைநீக்குவாள்வைணவத்தலத்தினைப்பரசி. (௯௦)

இரணதூடணம்பாவமோசனமிவையிறைஞ்சிப்
பரமர்தேவபஞ்சாவடமத்தலம்பணிந்து
வரமளித்தருளவுசசம்வாருணமருவிக்
குருபுரஞ்சொர்க்கத்துவாரமாந்தலத்தையுங்குறித்தாள். (௯௧)

சுவத்திமாபுரந்திவ்வியபுரமிவைதொழுது
தவத்தின்மேம்படுவதாரணியமுஞ்சார்ந்து
பவத்தைநீக்குவாள்பரார்த்தமாத்தலத்தினைப்பணிந்து
சிவத்தையுன்னுகங்காமடுவெனுந்தலஞ்சேர்ந்தாள். (௯௨)

முத்தர்வாழ்வசிட்டாச்சிரமத்தையுமுன்னிப்
பத்தர்சேர்தருவாத்துமாபுரத்தையும்பரசி
நித்தர்சோமநாமகந்தரிசித்தலநிலவி
யத்தர்கன்னியூர்சுனிகிதத்தலத்தும்வந்தடைந்தாள். (௯௩)

வாவிசேர்சதகங்கையோடயிரம்பம்வழுத்தித்
தேவரார்குருக்கேத்திரந்தருமவூர்சென்று
பூவயன்பணிபிரமவேதித்தலம்புணர்ந்து
காவுயர்ந்தெழுசவுகந்திவனத்தையுங்கண்டாள். (௯௪)

இன்பமல்குமீசானதூடத்தையுமிறைஞ்சி
யன்பர்வாழ்பஞ்சயெச்சமாபுரத்தினுமணுகித்
துன்பநீக்கருட்சாரகும்பத்தலந்தொழுது
தன்பெயர்த்தலந்தேவிதானத்தையுஞ்சார்ந்து. (௯௫)

அன்னமார்துறைதிருதித்தானத்தையுமணுகிச்
சொன்னதானத்துந்துயக்கேத்திரத்தினுந்தொழுது
மன்னுதாரைபூர்யமுனைசேர்துவாரத்தும்வந்து
கன்னலார்கங்காத்துவாரந்துமடைந்தனள்கடிது. (௩௬)

சத்தகங்கையூர்திரிகங்காநகரத்துஞ்சார்ந்து
நித்தனார்கபிலாக்கியத்தீசனைநினைந்து
பத்தர்நாகராசம்மெனுமடுத்தலம்பரவிச்
சுத்தர்காபிலேச்சரந்தொழுதிருந்தனண்மனைவி. (௩௭)

பங்கயத்தடச்சாந்தநவத்நலம்பணிந்து
சங்கவாவிசேர்பவுண்டரீகத்தினுஞ்சார்ந்து
திங்கள்வேணியார்வாசபேயத்தினுஞ்செறிந்தே
யங்கயற்கண்ணியருந்ததிவடத்தைவந்தணைந்தாள். (௩௮)

உருத்திராவர்த்தம்பிரமாவர்த்தமுமுவந்து
கருதிலன்புசெய்விட்டுணுவர்த்தமுங்கலந்து
திருத்துநாகமாபிருட்டமாபுரத்தையுஞ்சேர்ந்தே
வரத்தினம்பொலிமாளிகைவரவடயணைந்தாள். (௩௯)

தறுவிசங்கமமஞ்சிந்துபிரபவஞ்சார்ந்து
பறுமைவேதமந்திரபெறுந்தானங்கள்வணங்கிக்
குறுகியாரிடம்வாசிட்டமகாளயங்குலவி
யிறுகுறுண்ணிடைமகாகூர்மேச்சரமெய்தி. (௪௦)

கொண்டல்வண்ணனேவிராட்டவனுளமெனுங்கோயிற்
புண்டரீகமாபுரத்தைவந்திறைஞ்சினள்போற்றி
யண்டர்போற்றுவைதாநிகத்தரனடிவணங்கி
மண்மெனபிணிற்பிரமமாபுரத்தினும்வணங்கி. (௪௧)

ஈசர்வைகுகங்கோற்பவங்கோமதியெய்தி
வாசவாவிரூழ்துவாரமாபுரியினைவணங்கிப்
பாசநீக்கியசாரசுவதபுரம்பணிந்தே
யீசனெம்பிரான்சீரமாவதிப்புரியிறைஞ்சி. (சஉ)

தையனுயகிகோபிரதாரத்துஞ்சார்ந்தே
யையன்மேவியசதசகத்திரத்தலமணைந்து
வையமேவியபத்திருதானத்துமருவிப்
பையவந்தனள்கோடிமாபுரமெனும்பதியில். (சங)

காவியார்கலியாணகாரகப்பதிகலந்து
மேவிமார்க்கண்டம்வாராணசீபுரம்வியந்து
தூவியன்னமார்காசியுங்காளியுந்தொழுது
தேவிகோமதிகங்கைசங்கமப்பதிசேர்ந்தாள். (சச)

ஆதியாம்விசுவேச்சரமப்பதியணைந்து
பாதிமாமதிச்சடையர்சாயாபுரம்பரவிச்
சோதிதேவதாசிரயவூரீசனைத்தொழுது
மாதொர்பங்கனையக்கமாவடதினும்வழுத்தி. (சரு)

ஒப்பிலாவானப்பிரமவாவித்தலமுவந்து
தப்பிறேனுகங்கிருத்திரவடமிவைசார்ந்தே
யப்பருத்தியம்பருவதேச்சரமிவையணுகிச்
செப்புநேர்முலைச்சாவித்திரீபுரஞ்சேர்ந்தாள். (சகு)

முத்துலாமுலைராசமாகிருகத்தைமுன்னி
நத்தனுமபணியும்மணிநாகத்துநயந்து
பத்தர்சேர்மணிசவுகந்திமாபுரம்பரவிக்
கொத்துலாம்பொழிற்கவுதமாச்சிமரத்தைக்குறித்தாள். (சஎ)

கன்னிநாயகியார்யவூருதபனங்கலந்து
வன்னியத்தர்வாழ்சனகமும்விவசமும்வணங்கிச்
சொன்னவற்புதராமசந்திரத்தலந்தொழுதே
யென்னையார்நைமைபிரகதத்திருதம்வந்திருந்தாள். (௪௮)

தாற்றுவாண்முரூழ்விசசநங்கண்டகிசார்ந்து
வேற்றுநாயகன்விசல்லியநாதகியிறைஞ்சிப்
போற்றுமாமகேச்சரமகாதாரத்தைப்புணர்ப்பை
மாற்றுன்மகேசுரபதம்வாமனமருவி. (௪௯)

கொடிநுடங்குநாராயணங்கௌசிகீகோஇற்
படிவமேவியகௌசிகாச்சிரமமுமபஸ்பின
வடிவழாகியபரதாச்சிரமமும்மதனைப்
பொடிசெய்வாருறைசாளமாக்கிராமமும்போற்றி. (௫௰)

தேவதேவவூர்சண்பகாரண்ணியஞ்செல்வ
மேவுசேட்டிலங்கன்னிச்சிவேத்தியம்விரும்பிப்
பாவநீக்கியமனுபுரிநிச்சலம்பணிபாத்
தேவகூடமுங்கௌசிகவிருத்தமுஞ்சென்று. (௫௧)

சருவதீர்த்தவூரக்கினிதாணாயூர்சாற்றும்
பொறுமையாளர்வாழ்மகாகிருதப்பதிபோற்றி
யுறுடைநல்கியவாரிதாராக்கியமன்னி
யுறுதிபன்பினிற்றேவதீர்த்தத்தைவந்துற்று. (௫௨)

சயிலராசவூர்குமாரதாரைத்தலஞ்சார
வெயிலுடைக்கௌரீசமுநந்தினியிறைஞ்சிக்
குயிலுலாம்பொழிற்கேகயங்கோமளைசென்று
பயிலசுவமேதஞ்சிரீகூபமும்பரசி. (௫௩)

இன்பமார் தருபத்திரகூடமுமிறைஞ்சித்
துன்பிலாமணிகூடமும்போற்றுவாள்றொடங்கி
யன்புநீடியகாசிகாசங்கமுமாதி
மன்பிறங்குமாகாளியூர்வணங்கியெம்பிராட்டி. (ருச)

மானவேச்சரங்கயாரணியத்தலமகிழ்ந்து
சேனுலாம்பொழிலசுவமாபிலக்கமுஞ்சேர்ந்து
மீனுலாம்வயற்கயப்பிலக்கத்தலம்வியந்து
தானமாமிராசதாத்திரியுருத்திரைசார்ந்தாள். (ருரு)

ஏர்விளங்குசோமாச்சிரமத்தலமிசைந்து
காருலாம்பொழிலூர்வசிபுரத்தையுங்கண்டு
பாருலாங்கும்பகன்னவாச்சிரமத்தைப்பரவி
நீருலாஞ்சங்குகன்னவாச்சிரமமுநேடி. (ருசு)

சங்கமுத்தவிர்பிருகுதுந்தாக்கியஞ்சார்ந்து
மங்குறோய்மதிட்காமமாமுகபுரமருவித்
துங்கமாளிகையானந்தபுரத்தினுந்தொழுதே
திங்கள்வாண்முகியிருடிதீபத்தினுஞ்சேர்ந்தாள். (ருஎ)

பத்திரப்புரஞ்சுதாகரப்புரம்பரசிச்
சுத்தர்போற்றுதேவத்துருநாமகந்தொழுது
முத்தர்காளிகல்யாணமும்வணங்கியெம்முதல்வி
யத்தரூர்திரியமபகம்போற்றினளன்னே. (ருஅ)

சோதிட்டோமமுத்தாலகபுரத்தினுந்தொழுது
வேதிக்குண்டமார்சவுமியபுரத்தினும்விரும்பி
நீதித்தன்மமாவனந்தன்மதீர்த்தவூர்நினைந்தே
யாதிப்புண்ணியதீர்த்தத்துமடைந்தனளம்மை. (ருகூ)

மானிடத்தவர்சண்பகாபுரத்தையுமருவிக்
கானமல்குசம்லேத்தியப்பட்டினங்கலந்தே
யானைந்தாழ்வார்தீர்த்த்ராசப்புரமணுகிப்
பானலார்பழனைச்சரதோயவூர்ப்பணித்தாள். (௯0)

அலையெழுந்தெறிகங்கைசோசகரராலணுகுந்
தலைவனார்தங்காவீச்சரஞ்சார்நங்காநகர
நிலைதிரிந்திடாதுரிங்கவூர்கயபுரநேடி
விலையிற்சீர்மல்லகாபுரம்பிராட்டியார்மேவி. (௯௧)

சொல்லரும்புகழ்ப்புராணமுஞ்சோணமுந்தொழுதே
யில்லெனாதருள்சோதிமாபுரத்தையுமேத்தி
யல்லைநீக்குமெய்ச்சோச்சினுங்கரத்துமடுத்துப்
பல்வளந்தருசந்திரபுரத்தினும்பரவி. (௯௨)

அசுவக்கேத்திரஞ்சயந்தியூர்கோசலையணுகி
விசுவத்தெம்பிரான்கோமதிபட்டினமவிளைந்து
வசுவதேயமார்வதரிகைமகேந்திரமன்னிப்
பசுவின்பாசத்தைப்பாற்றியசீபுரம்பரவி. (௯௩)

மாமதங்கவூர்சீபருப்பதமிவைவணங்கித்
தோமறும்புண்டரப்புரத்தாதியைத்தொழுது
நாமமாரிருடிப்பருப்பதத்தையுநயந்தி
ராமசேதுவுங்கன்னிதீர்த்தேசமுநண்ணி. (௯௪)

சாகரத்திடைமேன்மையாங்கோகன்னஞ்சரித்துப்
யோகியற்சொலக்காயத்திரிபுரம்பரசி
மோகநீக்குங்காயத்திரிநகரமுமுன்னித்
தோகையன்னவள்சாரசுவதிப்பதந்தொழுதாள் (௯௫)

புன்னைபொன்சொரிவியாகிதிபார்க்கவும்போற்றித்
தன்னையேநிகர்சவுனகாச்சிரமத்தைச்சார்ந்து
மன்னுநந்திபாதப்புரம்பரத்துவம்வணங்கி
மின்னிடைக்கொடிகற்கியாச்சிரமத்தில்விளைந்தாள். (சுசு)

சாமமல்குகாசிபஞ்சமதக்கினித்தான
மோமதூமமாரத்திரிததானமுமுவந்து
காமனைதெறுநைத்திருபத்தலங்கலந்து
வாமமேகலைகாசிபததானத்தைமணந்து. (சுஎ)

சாண்டிலியம்வசிட்டாச்சிரமத்தையுஞ்சார்ந்து
பூண்டகோபருப்பதத்தொடுபூமலைபுணர்ந்தே
யாண்டநாயகனவிருத்தகிரீசனையணைந்து
காண்டகுஞ்சுவேதப்பருப்பதத்தையுங்கண்டு. (சுஅ)

இருக்குமல்குமிரோபவாச்சிரமத்தையிறைஞ்சித்
தருக்கிளர்வராகாத்திரியென்பதுஞ்சார்ந்தே
யுருக்குதண்டுசெயிலம்வேணுசயிலத்தொடுமுன்னி
மருக்கிளர்வில்வவேத்திரவனத்தினுமகிழ்ந்தாள். (சுகூ)

ஆல்மாவனம்புன்னாகவனத்தினுமணைந்து
வேலவார்குழற்றிந்திருணீத்தலமிறைஞ்சி
மூலமாகியவச்சிராச்சிரமமுமுன்னிக்
கோலமார்சுவேதார்க்ககானத்தையுங்குனித்தாள். (எ0)

புட்பமாவனங்கூவிளவனமெட்டும்போற்றித்
தற்பரன்பதமரத்தினபஞ்சகஞ்சாரா
வற்புமேம்படுதாம்பிரோச்சரனடியண்ணி
நற்பரம்பொருடாணியேச்சரனடிநண்ணி. (எக)

சந்தவார்குழலாடகேச்சுரனடிதாழ்ந்து
கெந்தமல்குரேபாச்சிரமத்தையுங்கெழுமி
யந்திவண்ணனைச்சிவதீர்த்தபுரத்தினுமணைந்து
பந்தநீக்குகீசாத்திரியென்பதும்பணிந்தாள். (எஉ)

காமுகாததிர்கதலிமாவனத்தினுங்கருதி
மாமையார்சிரோபதச்சிரமததலம்வழுத்திக்
கோமளத்தலம்லோகலோகேச்சுரங்குறுகி
யேமமார்தருமர்த்தினத்திரியையுமெண்ணி. (எஙு)

கருணைமாமலைபஞ்சநதீசனைக்கருதி
மரிசியத்திரிவாலுகாநகரமுமன்னி
யரியதாமயப்புரஞ்சிசபுரத்தையுமணுகிப்
பெரியதாம்பதுமாரணியததலம்பேணி. (எச)

திருட்டுணைகாந்தியாகவல்லித்தலந்தினைத்தே
யரிட்டநீக்கியவோங்காரபட்டினமாதி
மருட்டெறுஞ்சிரீசயிலஞ்சேடாத்திரிவணங்கித்
தெருட்டுமன்பர்தோதாத்திரியெனுந்தலஞ்சேர்ந்தாள். (எரு)

தருணைமாமலைபிரியநாகந்தவனமு
மருணமார்மதுவனஞ்சாரதாத்திரியணைந்து
கீருணைசால்சக்கிராத்திரிகலியாணமலையும்
பெரியதாங்கிருதாசலமெனுந்தலம்பேணி. (எசு)

மத்தியார்ச்சுனமாயூரமருத்தலம்வணங்கி
யத்தர்கும்பகோணம்பலாசவ்வனமணுகி
நித்தர்கோவிதாரவ்வனநேசனைநினைந்து
முத்தர்சேர்பிப்பலாரணியங்கொண்டியன் ma (எஎ)

தாருமாவனநவநீதபுரத்தையுஞ்சார்ந்து
பாரின்மேம்படுவேணுமாவனத்தையும்பணிந்தே
யீரவன்பினிற்சொன்னவாரணியத்தையிறைஞ்சி
நாரவேவிசூழ்தராவனமாத்தலநயந்தாள். (எஅ)

தக்கரோச்சரந்ததிச்சரம்பயேச்சரஞ்சார்ந்து
மிக்கவிச்சருவோத்தமத்தலத்தினுமேவாய்த்
தொக்கவின்பம்வீடுயிர்க்கெலாமுதவுமத்தொல்லை
நக்கபூமலிபாடலவனநயந்தறாள். (எகூ)

என்னுமெய்வளத்தலங்களெட்டடுத்தவாபிருந்துங்
கின்னிமானிடவடிவமாய்க்கன்னியர்சூழத்
தன்னையொப்பரும்பூமியைவலம்வந்துசார்ந்தே
யந்நகர்த்தலந்தீர்த்தமுமடைவினிலாடி. (அ௦)

ஆங்கங்குற்றிடுமருட்பரம்பொருட்குறியமலத்
தோங்குமப்பராபரசிவலிங்கத்தையுற்றே
யேங்குசிற்றிடைக்கிடைதனத்துமைவியெம்பிராட்டி
யோங்குபூசனைமுறைமையாலருச்சனையுஞற்றி. (அக)

இரந்திரந்துணைத்தியற்றபராதநீத்திறைவ
புரந்துகொண்டருளெனப்பலமுறையினும்போற்றிக்
கரந்துகன்னியாய்க்கருணைநாயகன்பதங்கருதி
நிரந்தபாடலவனத்தயனுற்றனணிமலை. (அஉ)

தேவதேவருளாயிரத்தெட்டெனுந்திறங்கொள்
பூவலயத்தினிலெழிலுறமல்கியபொருவி
லூவிலாதவித்தலங்களைநினைப்பவர்சதுர
ரேவராயினுங்கயிலைபுக்கினிதமர்ந்திருப்பார். (அங)

இந்தமாத்தலக்கதையினையெழுதுவோர்படிப்போர்
சந்ததஞ்செவிப்புலமுறக்கேட்பவாதரிப்போர்
முந்தைபெச்சமோராயிரம்புரிபலமுகந்தே
மெந்தையாளுறைகயிலைமால்வரையினிலிருப்பார். (அச)

எட்டெட்டோயிரமெனுந்தலந்தரிசித்தபலமு
மட்டமூர்த்தியையாயிடையுருச்சித்தபலமு
மட்டுலாமலர்க்குழலயார்தீர்த்தங்கண்மருவி
யிட்டமாகவேமூழ்கினபலன்களையிசைவார். (அ௫)

வேதமியாவையுமோதியபெரும்பலம்விமலச்
சோதிலிங்கத்தைக்கூவிளமலரினாற்சொல்லி
நாதமல்கியபாவினாற்போற்றுநன்னலமு
மாதரத்தினித்தலங்களினினைந்தவரடைவார். (அ௬)

பஞ்சபாதகமுதலியதீவினையாறு
மெஞ்சலில்லதோரெண்வகைத்தனங்களுமிசையும்
வஞ்சநீக்குநன்மகவினைப்பெறுவர்கள்வாழ்வுற்
றெஞ்சலில்பெருங்கீர்த்தியுமணிகுவரின்னம். (அஎ)

பத்திநன்னெறிவழியினாற்பரகதியுறுவார்
சுத்தமந்திரமருச்சனையாதியாற்றுதியா
லத்தர்வெள்ளியங்கயிலையிலணியராயவன்போ
னித்தமேனிகொண்டயிக்கராய்நிலவிவாழ்குவரால். (அஅ)

இன்னவாறுமையாயிரத்தெட்டெனுமிணையின்
மன்னுமாத்தலந்தரிசித்தமுறைமையையுரைத்தாம
புன்னையாதியமலர்தருபாதிரிப்புலியூர்க்
கன்னைவந்திறையருச்சனைபுரிந்தவாவுரைப்பாம். (அ௯)

தேவிதலங்கடரிசித்தசருக்கமுற்றிற்று.

ஆகச்செய்யுள் - சஙஎ.



## தேவிதலங்கடரிசித்த சருக்கம்.



உலகமாதாவாகிய உமாதேவியார் கன்னியரெழுவர்தயமைச சூழ்ந்தேவல் செய்துவரப் புஷ்கரம், துண்டுலி, கண்ணுவாச்சிரமம், அகஸ்தியம், யயாதிபதனம்,மகாகாளம், சந்தரூத்திரி, பத்திரவடம, சிந்துஸ்தானம், பத்திராவடம், பத்திராரணியம், கவுரவமலை, சிவா புரம், விபுதஸ்தானம், நீபாரண்ணியம், தாளிபுரம், குண்டினம், காமபுரம், ஹரிஸ்தலம், சோணநாகபுரம், பத்திரபட்டணம், புஷ்ப வனம், புல்லாரண்ணியம், கர்மாரண்ணியம், குகேச்சரம், கூர்மேச் சரம், மச்சாரண்ணியம், சேஷபுரம், தேவாரண்ணியம், யோகிதேவ வனம், சாருபுரம், இரத்னஹேமபுரம, வாருணபட்டணம், சுதாமத் வனம், ஸரகேச்சுரம், கபித்தாரண்ணியம், சிருங்கபுரம், சோமபுரம், வாயுபுரம், கச்சிபாச்சிரமம், கோபேச்சரம், கிருத்திரபுரம், மதுகார ண்ணியம், கோபருவ்தம், சர்மநதீதடம், பிரஸாதம், ஸங்கமம், வர தானம, துவாரவதீச்சுரம், சனஞமகள், சங்குகன்னேச்சரம், பிரமதி நாமகம், வசோத்தாரபுரம், சிந்தூத்தமம், பிரமதுங்கம், குமாரருண் டம், இரேணுகாக்ஷேத்திரம், கும்பபுரம், பஞ்சநதம், கிரிகுஞ்சம், பத்திரபதம், மணிமந்தம், தேவிகாநாமகம், காமவாசம், தீர்க்கசத்தி ரம், சருமசேஞரமம், நாகோற்பேதம், சிலோற்பேதம், நகோற்பே தம், சருவோற்பேதம், சத்துருநந்தி, குமாரகோடி,உருத்திரகோடி, இருடித்தானம், சிவாவாஸம், குருக்ஷேத்திரம், மங்களக்ஷேத்திரம், கந்துகபுரம், விஷ்ணுஸ்தானம், பூமிதீர்த்தம், சாலுகிநாமகம், கபர்த் திதருவிகா, துவாரபாலம், மந்திரம், பஞ்சவடம், கோடிதீர்த்தம், அசுவர்த்தக்ஷேத்திரம், வராகேச்சரம், ஏகஹம்ஸஸ்தலம், சிலந்தித் தலம், கிருதாசவுசம், மஞ்சுவடம், ஸ்ரீமத்துவாரம், உமாஸ்தானம, பஞ்சதீர்த்தநகரம்,காயசோதனபுரம்,உலோக யாத்திரோததீர்த்தம்,

உமலோகத்துவாரம், ஸ்ரீபுரம், காபிலம், சூரியபுரம், கோபுரம், விருஷ சேனம், சங்கக்ஷேத்திரம், தேவிபுரம், இயக்ஷபுரம், பிரமாவர்த்தம், உருத்திரக்ஷேத்திரம், சிவாவாசம், சாதகதம், பூதபுரம், வியங்கதூடம், சுவர்ணதீர்த்திரம், அமராக்கியம், சாலிஹோத்திரம், வாமனம், பவாஹிருதயம், மருத்க்ஷேத்திரம், ஸ்ரீகுண்டம், கல்லியாசரசுவதி, கன்னிகாங்கயம், பிரமேச்சுரம், ஸோமஸ்தானம், ஸாரஸ்வதம், மங்கணம், ஹஸ்தியாஹாரம், பாபஹரம், ஞானதம், அஞ்ஞானஹம் அக்கினிக்ஷேத்திரம், இந்திராக்கியம, அஹஸ்கரம், நிசாசரம், தனதேச்சரம், வைகுண்டமித்திரம், பிரமயோனி, பிரதூதகம், க்ஷீரஸ்ரவம், மதுச்சிரவம், பரப்பிரகாசம், சதஸகஸ்ரம், வைணவம், இரணதூஷணம், பாபமோசனம், தேவபஞ்சவடம், ஔஜஸம், வாருணம், குருபுரம, சுவர்க்கத்துவாரம், சுவஸ்திபுரம், திவ்வியபுரம், பதரிகாரண்ணியம், பரார்த்தஸ்தலம், கங்காமடு, வசிட்டாச்சிரமம், வாஸ்துபுரம், சோமநாமகம், ததீசிதலம், கன்னியாச்சிரமம், சுனிஹிதம், சதகங்காஹிருதம், ஐரம்பம, குருக்ஷேத்திரம், தருமப்ராஜ், பிரமவேதி, சௌகந்திகவனம், ஈசான்தூஷதபுரம், பஞ்சயஞ்ஞபுரம், சாதகும் பேச்சரம், தேவிஸ்தானம், திருநிஸ்தானம், சுவர்ணஸ்தானம், தூபக்ஷேத்திரம், தாராபுரம், யமுனாத்துவாரம, கங்காத்துவாரம், ஸப்தகங்காபுரம், கங்காநகரம், கபிலாக்கியம், நாகராஜஹிருதம், காபிலேச்சரம், சாந்தரவம், பவுண்டரீகேச்சரம், வாஜபேயம், அருந்ததிவடம், உருத்திராவர்த்தம், பிரமமாவர்த்தம, விஷ்ணுவாவர்த்தம், நாகபிருஷ்டபுரம், வரவடம், தர்விசங்கமம், சிந்துபிரபவம், வேதஸ்தானம், ஹாரிஷம், வாஸிஷ்டமாவனம், மஹாளயசமம், மகாகூர்மேச்சரம, புண்டரீகபுரம், வைதானிகம், பிரம்புரம, கங்கோற்பவம், கோமதி, துவாராபுரி, ஸாரஸ்வதபுரம், சிரவதி, கோபிரதாரம், சித்திரம்: புஷ்கிருஸ்தானம், கோடிபுரம், கல்லியாணகாரகம், மார்க்கண்டேயம், வாராணசிபுரம், காசிபுரம், காளீபுரம், கோமதிகங்காசங்கமம், விச்சுவேச்சுரம், சாயாபுரம், தேவதாசிரயம், அக்ஷயவடம்,

பிரமவாவித்தலம், தேநுகாநாமகம், இருத்திரவடம், உத்தியமபுரம், பருவதேச்சரம், சாவித்திரிநகரம், இராஜகிருகம், மணிநாகம், மணி சௌகந்திகபுரம், கவுதமாச்சிரமம், கிரியாநகரம், உதபானம், ஜனக நகரம், விவசாபுரம், இராமசந்திரஸ்தலம், பிரசத்திருதம், விஷ்ஸணம் கண்டகி, விசல்பாபுரம், நந்தகிபுரம், மகேச்சரமகாதாநம், மகேச்சர பதம், வாமனபுரம், நாராயணபுரம், நவுசிகபுரம், கவுசிகாச்சிரமம், பரதராச்சிரமம், சாளக்கிராமம், தேவதேவபுரி, சம்பகாரண்ணியம், சிபேட்டிலபுரம், கன்யாசம், வைத்தியகக்ஷேத்திரம், மனுபுரம், நிச்சலபுரம், தேவகூடம், கவுசிகஹிருதயம், சர்வதீர்த்தம், அக்கினிதாரம், மஹாஹிருதம், வாரிதாரம, தேவதீர்த்தம், சைலராஜம், குமாரநாராக்ஷேத்திரம், கவுரீசபுரம், நர்மினிநர்மகம், ஹேஹபநாமகம், அச்சுவமேதபுரம், ஸ்ரீகூபம, பத்திரகூபம், மணிகூபம், காசிகாசங்கமம், மகாகாளிபுரம், மானவேச்சரம், கஜாரண்ணியம், அசுவப்பிலக்ஷம், கஜப்பிலக்ஷம், இராஜதாத்திரிபுரம, சோமாச்சிரமம், ஊர்வசிபுரம், குடபுநர்ஜூச்சிரமம், சங்குகாஞச்சிரமம், பிருகுதுந்தம், காமமுகம், ஆநந்தாபுரம், இருடித்வீபம், பத்திரிபுரம், சுதாநகரம், தேவத்துருநாமகம், காளிகல்பாணம், திரிபங்கபுரம், சோதிட்டோமபுரம், உத்தாலகபுரம், சவுமியபுரம், தருமவனம், தருமதீர்த்தபுரம், புண்ணியதீர்த்தம், சம்பகாபுரம், சம்வேத்தியபட்டணம், தீர்த்தராஜபுரம், சரதோயசமாக்கிடம், கங்கைச்சரம், கங்காநகரம், துரங்கநகரம், கஜபுரம், மல்லகபுரம, புராணநகரம், சோணபுரம், சோதிபுரம், ஜோஸ்நாபுரம், சந்திரபுரம், அச்சுவக்ஷேத்திரபுரம், ஜயந்திநகரம், கோகலிநகரம், கோமதிபட்டணம், பதரிகாபுரம், மகேந்திரபுரம், ஸ்ரீபுரம், மதங்காச்சிரமம், ஸ்ரீபருவதம், புண்டரபுரம், இருடிபருவதம், இராமசேது, கன்னியாதீர்த்தேச்சரம், கோகர்ணம், காயத்திரிபுரம், காயத்திரிபதம், சரஸ்வதிபதம், வியாஹிருதிநகரம், பார்க்கவாச்சிரமம், சவுனகாச்சிரமம், நந்திபாதபுரம், பாரத்வாஜபுரம், கற்கியாச்சிரமம், கச்சிபாச்சிரமம், ஜமதக்கினியாச்சிரமம், அத்திரியாச்சிரமம், கைத்

திருப்பாச்சிரமம், காசியபாச்சிரமம், சாண்டில்யாச்சிரமம், வசிட்டாச்சிரமம், கோபருவதம, பூபருவதம், விருத்தாசலம், சுவேதபருவதம், இரேபாச்சிரமம், வராகாத்திரி, தண்டசைலர், வேணுசைலம், பில்வாரண்ணியம், ஆலவனம், புன்னாககானம், திந்திரிணிவனம், வற்சாச்சிரமம், சுவேதார்க்ககானம், புஷ்பாரண்ணியம், பில்வாரண்ணியாஷ்டகம், இரத்நாத்திரிபஞ்சகம், தாம்பிரேச்சரம், தாணியேச்சரம், தனேச்சரம், இரேபாச்சிரமம், சிவதீர்த்தம், கீசாத்திரி, காமகாத்திரி, கதலீவனம், இரைபாச்சிரமம், லோசாலோகேச்சரம், அரசுணைகிரி, பஞ்சநதம, பரீசாத்திரி, வாலுகாநகரம், அயப்புரம, சீஸபுரம், பதுமாரண்ணியம், திருஷ்ணாகரம், தியாகவல்லீசம், ஓங்காரபட்டனம், ஸ்ரீசைலம், சேஷாதகிரி, தோதாத்திரி, அருணாசலம், பிரியநாகம், ததிவனம், மதுவனம், சாரஸாத்திரி, கிருதாசலம, மத்தியார்ச்சுனம, மாயூரம், மஹாத்தலம், கும்பகோணம், பலாசவனம், கோவிதாரவனம, பிப்பலாரண்ணியம. தாருமாவனம, நவநீதபுரம, மஹாவேணுவனம், சுவர்ணாரண்ணியம், தராவனம், தக்கிரேச்சரம், ததீச்சரம், பயேச்சரம், முதலிய உத்தம க்ஷேத்திரங்களெல்லாஞ் சென்று தரிசனஞ்செய்து, உத்தமோத்தமமாகிய வீட்டினபத்தை உயிர்களுக்களிக்கும் பாடலிவனத்தைச் சேர்ந்து, அங்கெழுந்தருளியுள்ள சிவபெருமானைப் பூசித்து, என் குற்றத்தை நீக்கி யருளவேண்டுமென்று,பிரார்த்தித் தவவனித்திலோர் சாரவீற்றிருந்தனள. சிவபெருமான் திருக்கோயில்கொண்டுள்ள வாயிரத்தெட்டுத தலத்தினுஞ் சிறந்ததாகிய வித்தலத்தை யொருபொழுது நினைப்பவா எவராயினுங்கயிலையிற் சென்றுவாழ்வார். இந்தக்ஷேத்திரமானபியத்தை யெழுதினோர் எவராயினு மிடையறாது யாகங்கள் செய்தபலனையும், ஆயிரத்தெட்டுச் சிவாலய தரிசனபலத்தையும், கங்கைமுதலிய புண்ணியதீர்த்த மாடியபலனையும் பெறுவர். இத்தலங்களெல்லாவற்றையு நினைப்பவர் வில்வபத்திரத்தினு லநேகருள்ள சிவலிங்கப்பெருமானை யருச்சித்த பலத்தையும், வேதம் யாவுமோதித் தேவாரப்பாக்களினாற் ஸ்தோத்திரித்த பலமும் பெறுவர். பஞ்சபாதகமுதலியன நீங்கவும் பெறுவர். எண்வகைச்செல்வமும் புத்திரப்பேறும் பெருங்கீர்த்தியும் பெறுவர். பத்திவழியான் மந்திரஜபத்தியான பூசையினாலதத்தலத்தைச் சார்ந்தவர் பரகதியடைவர்.

## தேவிபாடலவனத்துக்கு வந்தசருக்கம்.



மின்னுடங்குவனபோலிடைமீதுமேகபந்தியின்விளங்கியவர்ன்மீன்
பின்னகந்தழுவுபுன்மலர்மானப்பெண்ணைலங்கனியுமேனியுமாயக்
கன்னிமானிடமெனுந்திருமேனிகாறெறுணுதவளைகம்பிதமாகிப்
புன்னைமாதவிசெருந்திமலர்ந்தபுலிசைமாநகரிலெல்லைவணங்கி. (௧)

பாடலஞ்சுனைபுன்னைபலாசம்பனசம்வாழைகரவீரநரந்த
மேடலர்ந்தசககாரமிலந்தையெழில்செய்கொன்றைவளர்குதமதூகங்
கோடகந்திகழசோகொளிர்வில்வங்குலவுதெங்குருகுமிழெங்கணுமாகி
மாடணைந்துநறைவீசுவவாசமணந்துவிம்மிதமலிந்துமகிழ்ந்து. (௨)

வண்டுகிண்டுவனகொன்றைநெருங்கிவாசம்வீசுவனபூகமணந்து,
கொண்டறுவுவனதெங்கினிணங்கிக்கோலமுல்லைமலரோடிணைபொ
ங்காப், பணைநோரணியுமஃதுமரன்பாற்பாகமேவுதிறமானவிளங்கல்,
கண்டுகண்டினிமைகொண்டு வளமந்தேகன்னியன்னமெனமன்னி
நடந்தாள். (௩)

நாகமவன்னிநறைஞாழலிலஞ்சிநறைசரும்புவிரிசந்தவிர்கோங்கு,மாக
மல்குசினைவேங்கைநெருங்கிமருதுசண்பகமலர்ந்தகுருந்து, காகதுண்
டசராளாதியெழுந்துகற்பகத்தினயனிற்பணகாறு, வோகைகொண்ட
பனைகன்னிமகிழ்ந்தேயுளங்கனிந்தயல்விரும்பினள்சென்று. (௪)

தாதவிழ்ந்தெழில்செய்பங்கயவாவித்தாளம்வீசுஊனசங்கநெருங்
கி, போதவிழ்ந்ததுவராம்பன்மருங்குபொருந்துவண்டொல்புணர்
ந்தனகாணி, ஞாதரம்பெருககவம்பிகையேகுமம்மருங்கொலிசெய்சங்
கெனலாகு, மாதரங்கெதிரப்பொன்மலர்க்கொம்பர்மருங்குமண்டுவன
கண்டுமகிழ்ந்து. (௫)

விண்ணிவந்தகொடியாடுவெபாங்கர்மீதுகோகிலமிழற்றுவபூவை, கண்
ணிவந்தெழில்செய்காட்சியவன்னிகாதல்கொண்டுநிறைடஞ்ச நெருங்
கிப், புண்ணியம்பொலியுமேனியவாகிப்பூதநாதசிவசம்பு புராரி,மண்
ணிலிங்குலைகடைஞாழலிருந்தமன்னவென்னுமுனாதுன்னமகிழ்ந்தாள்.

ஆனைசிங்கமகோமானினம்வன்றியசுவமேதிகலையானினமாமா
கானின்மன்னுபுலியெண்குநரந்தங்கவரிசல்லியகீரந்துநெருங்கி
வானமன்னியமடங்கல்டங்கமனங்கலங்கவுருமென்னமுழங்க
வேனமஞ்ஞைஞகலுழன்புறவன்னமின்னபுட்டொகுதிகண்டுவியந்து
கண்டுகண்டுகூடமன்னியப்பாலுங்காவியன்னவிழிகம்பிதமாகிப்,
பண்டுமென்றுமறியாதசுகந்தப்பரவுதெய்விகமுகந்தனளாகிக்
கெண்டையங்கரியகண்ணிடனாடக்கிளர்மணிப்புயமுமாடிடவாமந்,
தொண்டையங்கனியின்வாயுமையீசர்சொன்னசொனிலைவின்ம
னனவுணர்ந்து. (அ)

தேவதேவடிவிரும்பிவணங்குஞ்சித்தர்பூசுரரிலிங்கமிருத்துந்
தாவிலாதமறையோரைசநிறைந்துசாலைமன்னுபுனைகீயோமம்விளங்க
வாவியாவுமதுநீருநிறைந்துமன்னிலிங்கமொருநூறுவயங்கக்
காவிகோகனகதீர்த்தமனந்தங்கமழ்ச்செய்பாடலவனத்துளடைந்து.

சுத்தவித்தைபரமுத்தரணைந்துசோதியொன்றுளமிருத்தினராகி, நித்
தஞானநெடுவீடருண்மும்மைநேசமேனியினினைந்தனராகப், பத்தர்
வாலகிலராதிகணங்கள்பாடியாடுவெப்பரப்பினவென்னக், கொத்தலர்ந்
தொள்ளிகள்காலவனவெள்ளிக்குன்றமானுமவைகண்டுகேலந்தாள். (௧௦)

வேறு.

இன்னவளங்கள்கண்டனளங்கணைமையாளு
மின்னைமகிழ்ந்தற்புதமவிரோமாஞ்சிதமெய்தித்
தன்னிகரில்லாமுன்னவன்மன்னித்தலமென்னே
வென்னவியந்தேவன்னிலைமூர்த்தமின்புற்றாள். (௧௧)

மெல்லநடந்தேசென்றனளாங்கண்விளாமேவு
மல்லிகைமுல்லைமல்கியகானமதுநீங்கிப்
பல்வளமன்னுமுத்தரதிக்கிற்படர்வுற்றுக்
கல்லெதிர்சுமமைக்கடிலநதிப்பாற்கண்ணுற்றாள். (கஉ)

ஆடியின்மல்குசுத்தசலத்தினயலெய்தி
மாடுறையஞ்சங்கம்புள்குரண்டமகரந்தங்
கோடுநெருங்கக்கெண்டைகள்சங்கின்குலமல்க
வேடவிழ்புன்னைப்புளினநெருங்கவிருபாலும். (கங)

சலஞ்சலமுத்தும்புன்னையரும்புந்தமிலாத்தே
கலந்துநெருங்கப்பஞ்சடிநோவக்காணுற்றுப்
பொலன்செய்கலன்செம்பொன்னணிப்பாடைப்புணர்வோடு
நலத்திகழ்வேதமந்திரமோதிநனைநீங்க. (கச)

முத்தணிகொங்கையாடுறவாடிமுறையாலே
பத்திநிறைந்தசந்திபுரிந்தப்பாலேகிச்
சித்திரமாமுய்யானனவாசஞ்செறிசோலை
யுத்தரதீர்த்தப்பெண்ணையினுடியுயர்வெய்தி. (கரு)

மன்னியபாலினோடையில்வந்துமலராலே
துன்னியதிந்துபயக்குலியென்னத்துளைந்தாடித்
தன்னருளாலேபாடலநாதன்றருவித்த
தின்னதுபூசாமஞ்சனமாமெனறெண்ணுற்றாள். (கசு)

அப்புனறினனுநித்தியதானுசமனுதி
செப்பியகருமாதிகள்கடனியாவுஞ்செய்வுற்றே
யொப்பருமீசர்க்கர்ச்சனைசெய்வானுறுகாலை
யப்பணிவேணியருளினெழுந்ததாங்கொன்று. (கஎ)

## வேறு.

அன்னதன்வடபாகல்வாரிகரைபுரண்டணியின்வைகும்
மன்னயகடிலதீரத்தகங்கைமருங்காகாயத்
துன்னிஞும்யோகிநின்ஞேர்சுத்தவன்புளத்தோர்வாக்கா
லின்னனவனேகஞ்சொல்லக்கேட்டனளெமையாளீனே. (கஅ)

அவருரைசெய்தவாய்மையதிசயமவிளங்கச்சொல்வார்
நவைதருபிரமகத்திசிசுக்கொதிநாடிப்பொன்னை
பவமுறத்திருடல்வீரகத்திதமன்னையப்பர்
பவமுறக்கோறல்சுற்றந்தழுவிடாப்பாவபேதம். (கக)

குருமனைதன்னைப்பற்றனீசரோடிணங்கல்கூடி
யொருமையினன்னபாவவிதத்தரோடுண்டல்வைக
ல்ருமறையாதிகற்றுமறத்தலின்னனவாமியாண்டு
மொருவுருதனவுமீண்டித்தலமுறவுலக்குமென்று. (உ0)

அவிழ்ந்தவண்புற்றுர்நாளோர்போதரவணிந்தவேணிச்
சிவந்தனையருச்சித்தோரகடிருவொடுசிறப்புற்றுங்கே
தவந்தருமுத்தியின்பஞ்சார்வரென்றுரைத்தாகாயத்
துவந்தனாபோனார்தேவிகேட்டின்பமுற்றுளன்றே. (உக)

அற்புதத்தலத்தின்மேன்மையின்னவாலவற்றில்யாமும்
பொற்புடனருச்சித்தேத்திப்புணர்தருபாவநீங்கிச்
சிற்பரன்முணப்பவின்பஞ்சேர்குவமென்றென்றெண்ணித்
தற்பரன்ஞானழுலேசன்சந்நிதித்தடத்தைச்சார்ந்தாள். (உஉ)

சார்ந்துகற்பகத்தினேடுதானஞ்செய்திருக்கமூலம்
வாய்ந்தமந்திரமாம்பாவமானமப்பிலிங்கத்தாலே
வேய்ந்தமர்ச்சனமுமற்றவகமருடணமுமெண்ணி
யாய்ந்தமாவிருடிதேவர்பிதிர்க்கடனவைவிலாற்றி. (உஙா)

வெண்டிருநீறுபூசிப்பூண்டக்கமணியுமேன்மை
யண்டருமறியாமூலவைவகைப்பாவந்தீர்க்கும்
பண்டையபிரமமஞ்சுமஞ்செழுத்தாகும்பான்மை
கொண்டமந்திரத்தைப்பீசமிருடியுங்கூடச்செப்பி. (உச)

எண்ணிருநியாசம்வன்னத்தியையுமாநியாசஞ்செய்து
பண்ணவர்பரவுபஞ்சதசாட்சரீபீசப்பான்மை
நண்ணிபவிருடிசந்தமாதியாமனைத்துநாடிப்
புண்ணியம்பெருகவன்பாலாயிரவிலக்கம்போற்றி. (உரு)

அன்பினிலடியார்வேண்டில்வேண்டுமோங்களிக்குமண்ணற்
றுன்பம்வந்துறுமலன்பர்க்காவனபுரியுந்தொல்லோ
னெனபணிபூண்டமுக்கட்பிரான்கருணைசனெந்தை
முன்பொருமகற்காய்க்கூற்றையுதைத்தருண்மூலலிங்கம். (உசு)

காலதேசத்தினுமளக்கொணுன்கடைஞாழற்கண்
ணேலவவயியமாமுத்தாரேசுரனெவற்றுமவைகும்
நீலமார்கண்டனுப்பண்கடிலத்திலைலயுஞ்செய்த
சீலமார்மூலலிங்கம்பாடலேச்சுரன்முன்சென்று. (உஎ)

காரினக்குழுக்கண்டாலுமஞ்ஞைபோற்புளிற்றுகன்றை
நேருறத்தோன்றுங்காதனிலைமைபோறபரிதிப்புத்தேட்
டேரிடைத்தோன்றக்கண்டகமலம்போற்றேவியீச
னேர்தருமேனிநோக்கிப்பரவசமெய்தாநின்று. (உஅ)

ஏவிழ்தருமன்பினலட்டாங்கபஞ்சாங்கமாக
கவுழுறப்பணிந்துசென்னிமேற்கரங்குவித்துக்காது
றவழவைங்கான்முக்காலும்வலஞ்செய்துசார்ந்துபோற்றத்
துவண்மனவாக்கான்மற்றுந்துதித்தனள்வேதராசி. (உகூ)

வலம்வந்துபின்னுமீசன்முன்வழிபாடுசெய்து
நிலமுறவிருந்துபஞ்சாக்கரசபநியமியாற்றி
நலமிலேமவுனமந்திரயாகமுநயந்துசாதன்
புலமுறுமேனிமாலியங்களைவிதியாற்போக்கி. (௬0)

உருத்திரமானியாசமைமவகையங்கமோங்க
விரித்துரைத்தோதிமஞ்சனஞ்சியவவிதியாலாட்டிப்
பொருத்தியகமகமோடெசமகமுமலொ ருந்தப்போற்றி
யருத்தியாற்பரார்த்தபூசையடைவினிற்புரியாநின்றுள். (௬௧)

சந்தனக்குழம்புகும்போதகழ்விதிதமுழவவாட்டிச்
சுந்தரக்கலவைசாத்தியம்பரவிதமுஞ்சூழ்ந்து
கீந்தமுற்றியகத்தூரிமான்மதங்கற்பூரந்தி
யெந்தையார்க்கணிந்துபல்பூவிண்டைமாலைகளுஞ்சாத்தி. (௬௨)

பொன்னணிமதாணிதண்டைசிலம்பரைநாணும்பூட்டிட்
பன்மணிமகுடஞ்சூட்டிப்பதக்கமாபரணம்பூட்டி
யின்னியமியங்கச்சட்டவிரதமார்முதமேந்தி
மன்னுமந்திரத்தினன்பினிவேதித்துவலப்பானின்று. (௬௩)

நவகநகாதிதீபமேந்தியைமுகத்தூண்ணச்
சிவகமாங்கும்பங்கற்பூராந்தமாமிவையுஞ்செய்து
தகம்விரிமோடியாலவட்டஞ்சாந்தாறரியேந்தி
செவையுநாலடைவேபூசையியற்றினளோலையாளன்னே. (௬௪)

சாமகானத்திற்போற்றித்தலைவளைப்பணிந்துதேவ
ஞ்மொயிரமுதந்செப்பிநல்வினைநயந்தினபுற்று
வாமமேகலையன்ரெுன்றுமயின்றிலள்வசித்துக்காலைக்
கோமனைகெடிலம்பெண்ணைபயக்குலிழைடந்துவந்து. (௬௫)

ஜோதபாரகராமெச்சவிதிமுறைபுரிந்தமேன்மை
மாதவரின்பமெய்தவழங்கியவன்னதான
நாதனார்பொருட்டுச்செய்துநற்றவமுமையாணங்கை
பாதிரிநீழற்றங்கிப்புரிதவம்பகர்தலுற்றாம். (௩௫)

தேவிபாடலவனத்துக்குவந்தசருக்க முற்றிற்று.

ஆகச்செய்யுள் - ௪௭௩.

---

## தேவிபாடலவனம்வந்த சருக்கம்.

உலகெலாம் நிறைந்த வுயிரெலா முய்யும்பொருட்டு மாவிடத திருமேனி கொண்டெழுந்தருளி யாயிரத்தெட்டுச சிவாலயங்களிலுஞ் சென்று முழுமுதற் கடவுளைத் தரிசித்துப் பாடலி வனத்தை யடைந்த வுமாதேவியார் நமஸ்கரித்து, அஞ்சலிசெய்து ஐயன் றிருவருளைச் சிந்தித்துக்கொண்டு, பாதிரி, சுரைப்புன்னை, பலாசம், மகிழ், மா, தேமா, இலந்தை, கொன்றை, வில்வம், தெங்கு, கமுகு, கதலி முதலிய பல விருக்ஷங்கள் நெருங்கி முல்லை, மல்லிகை ஸம்பங்கி முதலிய கொடிகளெல்லாம படரப் பெறறுள்ள வழகைக கண்டு, கனி மகிழ்ந்து உள்ளே சென்றனர். அப்பாடலி வனத்தினுள்ளே தாமரை முதலிய பூக்கள் நிரம்பிப்படிகம்போல தெளிந்த நீர நிறையப்பெற்றுச் சஙகஙகள் முத்துக்களைக கரையிலே சொரிவதாகிய வளமமைந்த தடாகங்கள் பலவுற்றிடும், அவற்றின் பக்கங்களிலுள்ள பாதிரி, சண்பகம், கொன்றை, இருப்பை, தெங்கு முதலிய பல விருக்ஷங்களிலும் உட்கார்ந்துள்ள பக்ஷிகள் விபூதிதரித்த மேனியோடிருந்து, "பூதநாதனே! சிவா! சங்கரா! சம்போ! புராரி! யுகாந்தகாலத்தினு மழியாத கடைஞாழ லென்னு மிந்த க்ஷேத்திரத் தெழுந்தருளியுள்ள தலைவனே!" என்று துதிசெய்

துதையும்; யானை, சிங்கம், பசு, புலி முதலிய மிருகங்கள் பகைமை யற்றுறவாடுவதையுங் கண்டு விம்மிதமடைந்து இது அண்ணலார அனந்த கலைகளோடு மெழுந்தருளி வாழப்பெற்ற வற்புத வனமாக விருக்கவேண்டுமென்று நினைத்து அவ்வனத்தை வலம்வரு கருத் தினளாகி மேற்குமுகமாக நோக்கிச் செல்லும்பொழுது பூமண்டலத் தில் தரிசித்துவந்த க்ஷேத்திரங்களுள் ஒன்றிலுங் காணுததாய் தே வார்கமாயுள்ள சுகந்தம் வீசக்கண்டு கழிபெருங்களிகொண்டெம் பீனை நிற்புழியிடதுகண்ணு மிடதுதோளுந் துடித்தன. அதுகண்ட கவுரியானந்தபரவசளாகி யெம்பெருமா னருளுப்பாட்டை நினைந்து வணங்கி யின்னமுமுள்ளவு திசைங்களையெல்லாங்காணச்சென்றனள். அங்கே வேதவிதி வழாமற்செய்யும் யாகப்புகை மேகம்போலெழு வதைக்கண்டவவழியே செல்ல அநேகமுனிவர்கள் சித்தர் தவ யோகியர் வித்தியாதரர் முதலிய பெரியோர் குழாங்குழாமாக விரு ந்து தவஞ்செய்வதையும் அநேக சிவலிங்கங்கள் பிரதிஷ்டை செய் யப்பட்டிருப்பதையும் கண்டுகண்டு பெருவியப்புற்றுப் பாதிரிவனத் தின் நாப்பண்சென்று இதுதான் எம்பெருமான் வீற்றிருக்குமிட மாகவேண்டுமென்றங்கு மொருமுறை நமஸ்கரித்து எழுந்து வனத் தின் வடபுறநோக்கிச் சென்றனள். அவ்வனத்தின் வடபுறத்தருகே ஓடுகின்ற புண்ணிய நதியாகிய கெடிலநதியைக் கண்ணுற்று சங்கற் பஞ்செய்து அகமருஷணமந்திரபடனத்தொடு ஸ்நாநஞ்செய்து திரு நீறுதரித்து அதற்கும் வடக்கே சென்று இருகரையுமுய்யானஞ்சூழ் ந்த பெண்ணைநதியில் ஸ்நாநஞ்செய்து திரும்பிப் பாடலவனத்திற் குங் கெடிலநதிக்கும் மத்தியிலுள்ள விந்துபயக்குவி யென்னுஞ் சிவ தீர்த்தமாகிய பாலோடையில் வந்து கண்ணுதற்பெருமான்றனது திருமஞ்சனத்திற்கு வருவித்ததுபோலு மித்தீர்த்தமென்று புகழ்ந்து ஸ்நாநஞ்செய்து திருமேனிமுழுதுந் திருநீறு தரித்து உருத்திராக்க மாலைபூண்டு நித்திய கர்மானுஷ்டானங்களையெல்லா முடித்துக் கொண்டு சிவபூசைக் கெத்தனிக்குந் தருணத்தில் சிவபெருமான்

சிவயோகியர்போல் ஆகாசவீதியின் மறைந்திருந்து அம்மை செவிக்குப் புலனும்படி கூறுகின்றார். "வேறுதலங்களி லிருந்து செய்த பிரமஹத்தி, சிசுஹத்தி, வீரஹத்தி, மாதுருஹத்தி, பிதுருஹத்தி, சுற்றந்தழுவாதிருத்தல், பொன்திருடல், புறந்தூறல், பொய்பகறல், குருமனைவியை விரும்பல், வேதமோதிமறத்தல் முதலிய பாபங்களெல்லாம் இந்த க்ஷேத்திரத்தை மிதித்தமாத்திரத்தே விலகும்.' அதன்றியும் விளையாட்டாகவேனும் ஒரு வில்வபத்திரத்தாலுத்தாரேச்சுவரனைப் பூசிப்பவர்கள் இகத்தில்வேண்டிய செல்வநுகர்ந்து முடிவிலின்பமுத்தி சார்குவர்'' என்றுஆகாசவீதியிலெழுந்தருளிய சிவபெருமான் கட்டளையிட்டுப் பாதிரிவிருக்ஷத்தின் மூலத்திலுள்ள சிவலிங்கத்து மறைந்தருளினார். அதுகேட்ட பார்வதிதேவி யிவ்வற்புதக்ஷேத்திரத் தெழுந்தருளியுள்ள சிவபெருமானைப் பூசித்துப் பாவநீங்கப்பெற்று உத்தாரேச்சுவரனைத் திருக்கலியாணஞ் செய்துகொள்வேனென்று கனிவிரும்பி நாடலவணநாதரின் சந்நிதியடைந்து சிவலிங்கப்பெருமானைக்கண்டு பேரானந்தமடைந்து பணிந்தெழுந்து உச்சிக்கூப்பிய கையினளாகித் தன்னை மறந்திருந்து பின்னர் தேவதேவனைப் பூசிக்கவெழுந்து களனிப[illegible]மாரும் பணிவிடைசெய்யப் பூஜாதிரவியங்களைச் சேகரித்துக்கொண்டு சிவபெருமானுக்குத் திருவபிடேகஞ்செய்து திருவொற்றாடைசாத்தித் திருநீறிட்டுத் திருவாடைதரித்துத் திருமாலையணிந்து திருவாபரணஞ்சூட்டி வேதமந்திரத்தாலருச்சித்து மஹாநிவேதனஞ்செய்து ஷோடசோபசாரங்களும்புரிந்து பின் மும்முறைவலம்வந்து மும்முறைபணிந்தெழுந்து எதிரேநின்று ஸ்தோத்திரஞ்செய்து பின்னரங்குள்ள பிராமணர் முதலியவடியார்களுக் கன்னதானஞ்செய்து சிவார்ப்பணம் பண்ணி யடங்காப் பெருமகிழ்ச்சியோடு பாதிரிவிருக்ஷத்தின் மூலத்திலேயே யெழுந்தருளியிருந்தாள்.

## தேவிதவஞ்செய்த சருக்கம்.

பாடலேசனருமணிக்கோயிலு
ளாடகச்சிகரத்தினணித்தயன்
மாடமைந்தவடதிசைமன்னினின்
றோடவிழ்ந்தலர்பாதிரியின்னிழல். (௧)

புண்ணியம்புணர்தெய்வதபூமியி
லண்ணருமழலைவகையாற்றியாங்
கெண்ணருந்தவஞ்செய்தனளீசவருங்
கண்ணருஞ்சிவன்றன்னருள்காணவே. (௨)

அந்தரத்தினிலையினளாயயற்
பந்தம்பற்றுவதொன்றின்றிப்பரினுஞ்
சந்தமார்மலர்த்தாடரியாதுநின்
றுந்துநற்றவமோங்கவியற்றுமால். (௩)

பவனரூபிபவனமயின்றந்தப்
பவனியென்னும்பவனத்தின்மன்னியே
பவனம்போலிகணீங்கச்சரவண
பவனுந்தேடநின்றுளப்பவானியே. (௪)

பாவருந்தெரியாதவெழிலுரு
மேவியேபிரமாச்சிரமம்விழைந்
தாவியீசனருச்சனைமும்மைய
தாவில்காலமுந்தானஞ்செய்தாற்றியே. (௫)

மலர்ந்தபோதுகனிமதுவர்க்கமார்
பலந்தரக்கொண்டயின் றிறைபத்தியிற்
கலந்துகோரதவஞ்செயக்கன்னியா
நலந்தரெண்மருநற்றுணையாகியே. (௬)

வராகியாதியமாதர்களெண்மரும்
பராவுபூசனைப்பல்பணியாளராய்
விராவிநின்றனர்மேனைகைகன்னியு
மிராவதீதுபகலென்பதின்றியே. (௭)

யோகமெட்டனுறுப்பிற்புணரினும்
பாகமிக்கநிராலம்பப்பாங்கினாற்
றோகையுன்மனைச்சென்றந்தச்சோதியின்
மோகயாகிமுயன்றனண்மாதவம். (௮)

இனையமாதீவஞ்செய்துழியெம்பிரா
னினையவவ்வருளால்வந்துநேர்ந்தனர்
தனைநிகர்க்குமிருவர்தம்பத்தர்கண்
முனிவர்மாச்சிவயோகமுயன்றுளார். (௯)

அன்பராமவர்தம்மிலளவளா
யின்பமேவவிறைதலமியாவையு
முன்புபோற்றிவந்தித்தலமுன்னினார்
வன்பிலாத்தீர்த்தயாத்திரைமாண்பினார். (௧0)

சீடன்தேசிகனென்னச்சிறந்துளார்
கூடவந்தரன்கோயில்வலஞ்செய்து
பாடலேசர்ப்பணிந்தஞ்செழுத்தையு
நீடவேசபித்தாங்கணிலாயினார். (௧௧)

ஆகமத்தின்வழிவிற்றரிசித்ததே
யேகநாதன்முன்முன்னவிருந்துழிப்
பாகமுற்றமாணுக்கன்குருபரற்
கோர்மகேயோடுமுணர்த்திப்பணிந்தனன். (கஉ)

அருள்விளங்கித்தலத்தற்புதமெலாந்
தெருளவேயெனத்தூர்ச்சடிசெப்புவான்
பொருளினேதப்பிரமசன் மாபுத்தி
மருளுறுவகைகேட்டிமதித்தரோ. (கங)

வேறு.

வேதவேதாந்தமன்னிவிளங்குமித்தலத்துமேன்மை
யோதுவோர்கேட்போர்மாயபிறப்பறவுமையாள்கோனைக்
காதலிற்கலப்பர்நீயுநகருத்தொருங்குற்றுக்கேட்டி
பூதநாயகனும்பாடலேச்சுரன்புகழையென்றான். (கச)

பாடலவனத்தின்பாங்கர்பஞ்சிமம்யோசனூந்தங்
கூடலர்புரங்கள்வேவநகைத்தருள்வீரட்டேச
னேடவிழ்கறைப்பூஞ்சோலையுதிகைவீரட்டமாலுந்
தேடருந்தலமொன்றுண்டாங்கதன்குணக்கெனலாஞ்செப்பில். (கரு)

மூவராய்நின்றமூர்த்திகடவுளர்முனிவர்மற்றைத்
தேவரும்போற்றநின்றதிருவகீந்திரமுங்காமன்
மேவியேபோற்றுங்காமீச்சுரமெனுந்தலமுமேன்மை
பூவலர்பொழில்சூழ்வாலுகேச்சுரம்புடையிற்சூழ. (கசு)

சக்கிரபாணிபண்டுவாமனவுருவந்தாங்கிப்
புக்குமாபலியைச்செற்றபழியகல்பொருட்டாற்பூசித்
தக்கணியிறைபாலன்புகலந்தவத்தலமாம்வேதந்
தொக்கவாமனப்பேர்தாராபுரமிவைசூழ்ந்துமன்ன. (கஎ)

ஞானவாகாசமேமசபைநிருத்தாநந்தத்
தானமாம்புலியூர்சத்திசிவாலயந்தருமபீட
மேன்மைசால்கோயில்செந்தேன்விரிதருதில்லைக்கான
மானமங்களநாமஞ்சொல்சிதம்பரந்தென்பாலாக. (கஅ)

வடதிசைச்சுராரும்போற்றமன்னுமாத்தலம்யாதென்னிற்
குடசமாவனமென்றியாருங்கூறுமத்தலத்திற்றென்பாற்
படர்நதிக்கெடிலம்பெண்ணைசேருமப்பொராவங்கீழ்பா
லடைவினாற்றிசையுமன்னித்தலங்கடைஞாழலாமே. (க௯)

அரியயன்முதலாந்தேவர்நரர்மருத்துவராதித்தர்
விரவியேபூசித்தேத்திவிழாவணியெடுக்குமேன்மை
புரிதருமாகமாதம்பூரணைத்தீர்த்தவாரி
திருவிழாமுடிவினீசனெழிற்சியிற்சென்றுசேர்ந்து. (உo)

புண்டரீகத்தோன்றீர்த்தமெனப்புகழ்புணரிமூழ்கி
யண்டருமிந்திராதிலோகபாலர்களுமன்பி
னெண்டிசைமாக்கள்சித்தர்யோகிகள்கணங்களியாருந்
தொண்டையங்கனிவாய்ப்பங்கனருளினைத்துதிக்கின்றாரால். (உக)

இத்திறமாண்டுதோறுமாகமாவிழாவியற்றிப்
புத்தியின்மறையோர்க்கின்பப்பொருடுகிலுதவிப்போத
வித்தகர்ஞானயோகருளம்வியப்பெய்துமாறு
பத்தியாற்பூசித்தன்புவிரவவேபணிந்துபின்னும். (உஉ)

கனிவினுத்தாரேசன்கருணைசெய்முறையாற்பட்டுப்
பனிதருமுத்தரீகம்பொற்பணிப்பூண்பந்தர்
நனிநிழற்கொடைகண்ணாடிசாமரந்தைசாந்தாற்றிப்
புனிதவத்தினைத்தினீந்தோர்க்கயிலையிற்புணர்வர்மாதோ. (உங)

மந்திரசமுகந்தேவமந்திரவுருவநித்த
மந்திரவிதியாற்றேவர்வழிபடுவுருவஞ்சிந்து
மந்திரத்திருந்துனானுனந்தமுமவழுகத்தீர்த்த
மந்திரமுறைப்போமூழ்கமாயுமும்மலமுமாதோ. (௨௪)

தினமொன்றுமாதமொன்றுமாதமூன்றுகத்தீர்த்தத்
தினமுறைவிதித்துமூழ்கினியற்றதிபாதகங்கள்
பணிபதங்கனைக்கீண்டாற்போற்பாறுமாபஞ்சபாவத்
துணியறுமெனிலத்தீர்த்தத்துயர்வையார்சொல்லவல்லார். (௨௫)

மணலொருலிங்கமாகவியற்றீர்த்தந்தன்னிற்
புணர்தரமூழ்கினனனைகாததுயபுறதிரப்பே
றிணையும்பெண்மலடுநீங்குஞ்சுரமவமிருத்துகல்கூர்ந்
துணவறல்லியாதிசோராக்கினிபயமுறுதென்னும். (௨௬)

வசியமாகருடனுதிதம்பனசித்திமன்று
நசியுநீர்விடமேற்றுள்ளமிருகத்துண்ணுதொன்றும்
பசியுநீர்வேட்கையாதிகுரோதமிஞ்சுகமும்பற்று
வசிமுதலாயுதத்தின்மரணம்வந்தடையாதாங்கே. (௨௭)

தன்றிருமேனியாகுந்தலங்களிற்சிறந்ததென்று
மென்றுமித்தலத்தினீங்காப்பூரணவாசமெய்தி
யீன்றதொட்டின்றுகாறுமனந்தமாமாடல்செய்து
நின்றனனெவர்க்குமேலாநிருமலகருணைமூர்த்தி. (௨௮)

எய்தருஞ்சரிதையாதித்திறத்தினோர்க்கன்றியெட்டா
மெய்தருந்தலத்தைமங்களாகரம்விஞசியென்று
மைதரும்பட்டத்தோனுதிசேடனும்பகருமென்னின்
மைதருகண்டன்பாடலேச்சுரமதிக்கற்பாற்றோ. (௨௯)

இருக்கிதிகாசந்தன்னில்லகுமித்தலத்திலீச
னருச்சனைவிதியாற்போற்றியந்தரியாகபூசை
விருப்பொடுநினைதல்வாக்குக்காயிகவிதியான்மேவ
வொருப்படச்செய்தோர்சீவன்முத்தராயுலவுவாரால். (௨0)

எ பூவகைத்தோற்றத்தெண்பானான்குநூறாயிரத்தாற்
றழுவியயோனிபேதஞ்சாருமெவ்வுயிரேயேனும்
வழுவிலித்தலத்திற்றோன்றிவசித்திவண்மரித்தவாயின்
விழுமியபோகமுத்திமேவுதலையமின்றே. (௨௧)

காசியிலருணையாரூர்சிதம்பரங்கண்டுபோற்றத்
தேசொடுஞ்சனிக்கவுள்ளேசிந்திக்கமரிக்கமுத்தி
பாசமதகற்றிநல்கும்பாடலவனத்தனான்கு
மாசிலாமுத்திநல்குஞ்சன்மமுஞ்சரமமாமால். (௨௨)

அசிந்திதனானபாடலேச்சுரனருணமேனிக்
கசிந்துளத்திருத்திச்சிந்தித்திறைஞ்சியேகலந்தவன்பா
லிசைந்திடத்துதித்துப்பஞ்சாக்கரஞ்சபித்தென்றுமுன்னி
வசம்பெறவலம்வந்தாங்குவசிப்பவர்முத்தராவார். (௨௩)

அனாதிமுத்தேசன்வைகும்பாடலாரணியமென்னத்
தனாதுசெஞ்செவியாற்கேட்கில்வாக்கினாற்சாற்றிற்கண்ணா
வினாதகற்பொருட்டாற்காணின்பரிசித்தக்கால்வந்தெய்தின்
முனாதுதீவினைகணீங்கிமுயங்குவர்சிவலோகத்தே. (௨௪)

அத்தலத்தீர்த்தமூழ்கினன்னமஞ்சனாதிதன்னான்
முத்தநின்முத்தனானமூலலிங்கேசற்காட்டின்
பத்தியினாந்தனாளர்க்கருச்சித்துப்பலவுநல்கி
னெத்திறத்தருமமேனுமியற்றினோர்சிவன்றாள்சேர்வர். (௨௫)

ஏயுமித்தனுவின்முத்தியெய்துமாத்தலமீதென்று
நாயகன்விதித்தவாற்றாற்சுராசுரராதிநாக
ராயுமுப்பான்முக்கோடிதேவருந்தேவயோனி
பேயுமற்றெவருமுத்திவிரும்பியீங்குறைகுவாரே. (கசு)

எண்ணருந்தீர்த்தந்தன்னுளேற்றமாங்கங்கையேபோற்
புண்ணியவருணநான்கிற்பூசுரர்வருணமொப்பக்
கண்ணியமிருகந்தன்னுட்காமதேனுவைநிகர்க்கு
மண்ணருமுலோகந்தன்னிற்பொன்னிகரெனவுமாமால். (கஎ)

நவமணிக்குழுவின்மேலாங்கௌத்துபமெனவுநன்மைத
தவநிறையன்னதானந்தானத்துட்டலைமைபோல
வவமில்சத்தியங்கொல்லாமைநோன்பினிலதிகமேய்ப்பச்
சிவமருள்ஞானமேனைஞானத்துட்சிறக்குமாபோல். (கஅ)

அற்புதப்பரிமேதாதியனைத்தினக்கினிட்டோமத்தை
முற்படக்கூறுமாபோன்முதல்வருளுருத்திரன்போற்
சிற்பரன்மந்திரத்துட்சிறந்தவஞ்செழுத்தேபோலப்
பற்பலமலரின்பில்வமதிகமாம்பான்மையேபோல். (க௯)

உளத்தழுக்கறுக்குமேன்மைமானதீர்த்தமொப்ப
விளக்குறற்பவித்திரத்துட்பூதியேமேன்மையென்ன
வளர்தவக்குரோதமேன்மைதவத்தினின்மன்னுமாபோற்
களத்தினிற்கறுத்தவீசன்கடைஞாழலதிகமாமே. (உ0)

பத்திசென்னெறியினின்றுபாவபேதத்தைமாற்றிப்
புத்திமுத்திகளையெய்தப்புகுந்தலமனைத்தினுள்ளு
மித்தலம்பாடலேசனுயிரங்கலையுமேய்ந்து
நித்தமாயிருத்தலாலேநிகழ்த்துநூலதிகமென்றே. (உக)

சித்தர்கந்தருவர்தேவர்மருத்துவர்திருந்துமியோக
வித்தகவிருடிபேதரியக்கர்கிம்புருடர்மேலா
மூத்தமராதியாகுமங்கணர்முதலாவுள்ள
பத்தர்கள்பாடலேசன்பதாம்புயம்பூசித்தார்கள். (௪௨)

பூபதிக்கிறைவனுருவாதிராசனும்பூசித்து
மேவருஞ்சித்திபெற்றுத்திருப்பணிவிளங்கச்செய்து
பாவினிலடங்காக்கீர்த்திபடைத்தரன்பதாம்புயத்தை
மேவினனனந்தரின்றும்பூசனைவிரும்பினரே. (௪௩)

அக்கினிட்டோமம்வாய்ந்தோரறுபதின்மூன்னூறு
றொக்கவெண்ணுடையோர்வேதபாரகர்துரியாதீத
நக்கனெம்பிரானைப்பூசித்தன்பினில்வழுத்திநாளு
மிக்கமாக்கயிலைசார்ந்துவிமலத்தையடைந்துய்ந்தாரால். (௪௪)

கும்பமாமுனிவிபாசன்கௌசிகன்குச்சன்கோளன்
பம்பருளெச்சவற்கன்பாரசரபரமயோக
னும்பரும்பரவும்போதாயனன்முதலுமையாள்பங்க
னெம்பிரானடிகள்போற்றுமிருடிகளெண்ணிலாதார். (௪௫)

சலந்தரனிகும்பன்பண்டாசுரன்பிலன்திரிசரரரார்
நிலந்தருதிருவினந்தகாசுரன்கயாசுரனீள்
வலந்தருசம்பரன்மாவீரியன்வியாக்கிரப்பேர்
கலந்தருமசுரனின்றோர்நாதனையருச்சித்தாரால். (௪௬)

சகரன்வைதேகன்றுந்துமாரன்மாந்தாதாமற்று
நிகரிலாப்புரூரவாச்சொற்பகீரதனிமியேயாகப்
பகரரிச்சந்திரன்பேர்நளனருடாதிபல்லோ
ரகரமாய்நின்றபாடலேசனையருச்சித்தோரே. (௪௭)

வன்னநால்வகையிலுள்ளமானிடர்தேவர்யோகர்
பன்னருமிருடிசித்தர்பாலகர்விருத்தர்மாதர்
துன்னருமிருகசெந்துவாதியாத்துதித்துப்போற்றி
யுன்னருஞ்சித்திமுத்தியடைந்தவருலப்பிலாரே. (௪௮)

சேனைதேனுவிநால்வாக்குத்திட்சிதைசோபைபத்தி
ஞாலமார்பாமடந்தைபிருதிவிநளினிசீமை
மானமார்சகதிகாயத்திரிசிவைவிராயசீசி
யேனையுட்டிணியனுட்டிபனுமதிசிரத்தையின்னோர். (௪௯)

பிரசுதிசுமதியட்டிரோகணியுத்தைபேத
மறைகலைதிருதிமத்திகையைஇகிருதியாதி
நிறைதருவிகிருதிலோபாமுத்திரைநேசம்வாய்ந்த
முறையசக்குவரிமற்றையருந்ததிமுதலாவுள்ள (௫௦)

சரணமொன்றிரண்டுமூன்றுநான்கைந்துசார்ந்தமாதி
ரிகணியமயமாமாறேழெட்டடிமாதரின்னோர்
மூரணறுமுலோகபாலபவித்திரமடவார்முடமை
யரணேரியாரனையீங்கேயரிச்சிததுக்கதிபெற்றாரே. (௫௧

ஆயிரம்பணமகுடத்தாண்டகையரசும்பொன்று
மேயநல்லுகங்களெண்ணில்காலமுமியப்பினுலு
நாயகன்பாடலேசனகர்க்கதையனறயாரென்னிற்
சேயராநரரோமுற்றுந்தெரித்திவணியம்புவாரே. (௫௨

என்றுதூர்ச்சடியாம்யோகியிருந்தவப்பிரமசன்ம
னன்றுசூர்வரமமானரகசியமுமாரதுங்கே
ளென்றுரைசெய்தானீசற்காயிரங்கலையவற்று
ளொன்றுபல்லுலகமெல்லாமவிளக்குவதுணாதியென்றான். (௫௩

அக்கலைகைவல்லியாதியதர்வசிகாந்தமாகத்
தொக்கவேதாந்தஞ்சொல்லுமுபநிடத்துணிவாலன்றி
யெக்கலையுணர்ந்தோர்தேவர்யாவருமுணரொணாதாற்
புக்கவக்கலைகளந்தம்பொருந்துவதில்லையென்றான். (௫௪)

மங்களாகரமாய்முற்றுமலினமற்றுயிர்களெல்லாந்
தங்குதற்கிடமாய்மன்னுஞ்சருவவாதாரமாகித்
திங்களஞ்சடிலப்புத்தேளுறைதருகயிலைத்தேசு
பொங்குமத்தானந்தன்னிற்பூரணகலைகண்மன்னும். (௫௫)

ஆயிரத்தெட்டென்றோதுஞ்சிவாலயமவற்றுணூற்றெட்
டேயுமாத்தலமிவற்றுண்மூக்கலையியைந்துநின்று
வாயுமாலீலைசெய்யுமற்றவக்கலைகடம்மைப்
பாய்விடைப்பாகன்ஞானம்பற்றினோரறியலாமால். (௫௬)

தேவதேவீசன்மூலாதாரமாய்ச்சிறந்ததான
நாவலன்றீவின்மற்றைத்தலத்துநாயகமாயாதி
மேவியவனாதிமூலபரமகாரணம்விரும்பி
யாவரும்போற்றுமாங்களையமென்றியம்புமின்றும். (௫௭)

புண்ணியதீர்த்தஞ்சூழ்ந்தபுராதனபுராதனம்பின்
னண்ணரும்பிரமஞானங்கொடுக்குநாதாந்தமூலத்
தண்ணலேகருணையாயிப்பாடலவனசதமாந்து
வெண்ணுமாயிரத்தெட்டாங்கலைகளோடிருப்பரன்றே. (௫௮)

இவ்வகைவேதமூலமியம்புமந்தணத்தையாமுந்
திவ்வியமமலமுத்திதாயகமென்றுசிந்தித்
தவ்வகையுனக்குமுய்யுமடைவெனவுரைத்தேனீயும்
பவ்வியவுளத்தோர்க்கன்றிப்பகர்லைபுதல்வவென்றான். (௫௯)

வண்ணமார்கமலப்புத்தேள்தேவர்கண்மதிக்குவாய்ப்ப
வண்ணலங்கயிலையேயநேர்துல்லியமதிசமான
புண்ணியத்தலங்கள்காணப்புலமையாற்றலையிற்றாக்கு
யெண்ணினவற்றினுள்ளுமதிகமேபாடலேசம். (சுo)

பொன்மலையிமவான்மாயாபுரம்விருத்தாசலஞ்சீர்
மன்னுசீகண்டங்காஞ்சிமகராசேந்திரமேகாளி
யன்னசைலமிசம்பதரிவனங்கிரவுஞ்சமண்ணன்
மன்னுமந்தரமயோத்திமாப்பிரளயகாலேசம். (சுக)

ஆலவாய்சிந்துத்தீபங்கச்சவனந்தரணியாதி
நாலுகேத்திரஞ்சுவேதசிங்கசஞ்சுசேலநாம
மேலவீர்குழலிபங்கன்பெரியகேத்திரமென்றின்ன
பாலலோசனன்கயிலைக்கிணையெனுமபாண்டவேசம். (சுஉ)

காசிவாலீசப்பிரேதாத்திரிவளர்கதலிக்காடு
வீசனூர்வைத்தியநாதம்பஞ்சகம்பாற்குணேசந்
தேசொளிபுலியூர்வில்வவனந்தனஞ்சயபுரத்தோ
டாசறுந்தருளும்புட்பாரணியங்கேதாரமாமால். (சுங)

தோடிகாகும்பகோணங்குலவெழிற்றியாகவல்லி
தேடருஞ்சுருதகானஞ்சுவேதவாரணியந்தீர்த்த
வேட்லீநகரந்தில்லாரணியமேவாருணேசம்
பாடலாரணியமபஞ்சநதஞ்சொன்னூரணியமுபாங்கால். (சுச)

வாமனூர்கோவிதாரவனமதுவனப்பிரயாகை
யேமமார்சண்டிகாக்கேத்திரமெழில்வேதநாகந்
தூமமார்யாகசாலைசுப்பிரமணியமின்ன
நாமமார்நகரம்வெள்ளிவரைக்குயர்வாகண்ணும். (சுரு

நினைக்கினுமுத்தியாமித்தலத்தையாதரவானேர்ந்து
மனத்தினித்தாகக்கண்டுவழிபடின்முத்திநல்கு
மௌனத்தலமுங்கண்டுதரிசித்தபலமுமெய்து
முனக்கினியுத்தாரேசன்சரிதமற்றுரைப்பரென்னே. (சுசு).

வேதமெண்ணிலபுராணமாகமம்விரும்பியோது
மாதவம்புரிந்தயோகர்வந்தடிபணிவதாகு
மோதுதன்மார்த்தகாமமுத்தியுமுதவுமென்னிற்
பாதிரிவனத்தைமிக்காப்பகருநூல்சரதமாமால். (சுஎ)

நித்திலங்கொழிக்கும்பெண்ணைகெடிலநீர்த்தீரத்தென்பா
லுய்த்துநாவரசைப்பௌவத்துயர்கரைசேர்ப்புற்றுமாற்று
வித்தலமுத்தாரேசமென்டரீங்கெழுத்தஞ்சோதி
லத்தருகங்காதீரப்பலத்தினுமனந்தமாமால். (சுஅ)

மூலலிங்கேசஞ்சிவக்கொழுந்தேசன்முன்னா
ரேலவார்குழலிகௌரிபெரியநாயகிமுன்மெய்திச்
சாலவாங்கிருந்துபஞ்சாக்கரஞ்சபித்தார்களாயின்
பாலலோசனம்படைத்துப்பதாம்புயம்பற்றுவாரே. (சுகூ)

முத்துமாணிக்கங்கோமேதகமுழுநீலம்பச்சை
வித்துருமங்கள்சொன்னமாடகம்வெள்ளியந்தி
பித்தளையந்தமானதத்தமக்கடுத்தபேணி
லத்தருதானந்தாமேசோடசதானமாமால். (எ0)

என்றனவுத்தாரேசன்பாடலவனத்தினெய்தி
யான்றமாமுனிவர்க்கீந்தோராடகந்துலையைவிட்டுத்
தான்றமைநிறுத்துப்பொன்னைக்கொடுத்தமாதானஞ்சார்வ
ரீன்றவர்சிராத்தஞ்செய்தோரெவ்வகைப்பலனுமெய்வார். (எக)

வெண்டுகில்கம்பளாதிபட்டுமேற்கட்டிநல்கித்
தண்டைகள்சிருங்கம்பொன்னாற்சமைத்தகோதானஞ்செய்யி
லண்டரும்வியப்பவெள்ளிவரையடைந்தனந்தபோக
மூண்டிடனிதிருப்பர்மேன்மைத்தானத்தின்பலமுமொத்தே. (எ௨)

உத்தமசிலர்ந்தணாளருக்குதவியாகச்
சித்திரயாத்திராதிபூடணஞ்சிறக்கச்செய்தோர்
பத்தியினணுவேயேனுமுதவினர்பரமதான
முத்தமர்க்குதவும்பேற்றையுறுவதுதிண்ணமாமால். (எ௩)

கயிலையினதிகயாமித்தலத்தினிற்கதியைநச்சி
யியலுமாகுதியொன்றுக்கியாகங்களனைத்துங்கைப்
பயில்வுறுதீரந்தன்னிற்புரிபலன்பலிக்குமீங்குச்
செயலுறுயாகஞ்செய்தோர்பலத்தையார்தெரிக்கற்பாலார். (எ௪)

எய்துமிச்சனனந்தன்னிலிருங்கதியளிக்குமிந்த
மையறுதடத்திற்கங்காதடாகத்தின்கரையின்வாயபப்
பொய்யில்சிந்தையிலோர்பார்ப்பான்பொசிக்குமோதனமீந்தோர்க
ளெய்துவரிலக்கமவேதபாரகர்க்கீந்தபேறே. (எ௫)

உத்தமரதமர்ஞானவுறுதியோருறுதியில்லோர்
சுத்தீலைவிதிகாகள்வேதத்தொடர்பறியார்யாரேனும்
வித்தகம்பரடலேசம்விழைந்தவர்க்கன்னமீந்த
வுத்தகுபலத்தைச்சேடனன்றியாருரைக்கற்பாலார். (எ௬)

மனனியமனத்தால்வாக்கான்மகிழ்மிக்காயந்தன்னா
மூன்னுமித்தலத்தைச்சார்ந்தோர்பாரிடையுமையாள்பாக
னென்னையாளிறைவன்வைகுந்தலங்களியாவயினுமெய்திப்
பொன்னடிவணங்குமப்பேறுறுவர்கள்புலவல்லோரே. (எ௭)

## வேறு.

காசிநிரத்தின்வறகடகாலத்திற்கலந்த
வாசில்லாதநல்லறுவகையடிசிலோடயினி
தேசுலாந்திகுளகிருதாதியுஞ்சிறக்க
வீசனன்பருக்கீவதிந்தலததவிழ்க்கிசையும். (எஅ)

வெள்ளெருக்கலர்சண்பகமாதளைவில்வம்
வள்ளவாய்ச்செழுங்கமலநீலோற்பலமரவம்
புள்ளுளர்மரைப்பாடலஞ்சண்பகமபுன்னை
யெள்ளரிசியோடருசித்தோர்கயிலையிசன்றிருப்பார். (எகூ)

குடங்கைமஞ்சனமேனுமக்கெடிலத்திற்கொணர்ந்து
படங்குலாமரவேணியார்க்காட்டிடிற்பன்னூ
தடங்குலாங்கங்கைகூபநீராயினுஞ்சாரன்
மடந்தைபாகனைப்பாட்டினபலமதிப்பரிதால. (அ0)

தயிலமாதியாசசந்தனமந்தமாயிடையிற
பயிலுமபாறதிபழமதுக்கனனலனனமுமற
றியலுங்கெவவியமுப்புடைத்தெங்கினீரிசையச
செயலின்மந்திரததாட்டுவோர்சேர்வர்சாரூபம. (அக)

ததியின்போனகமிளகன்னஞ்சருக்கரைப்பொங்கற்
புதியபாற்பரமான்னமேபுட்டமுதாதி
விதியிற்சொன்னபாத்திரத்தினிவேதித்தமேலோர
கதியின்மேம்படுகயிலையிற்காணியாய்க்கலப்பார். (அஉ)

கோசிகாதியாம்பரிவட்டங்கனகப்பூண்குலவுந
தேசுசேர்மணிமாலிகைத்தீபபாத்திரமுன்
வீசுசாமரைவிசிறியாதியவிமலனுக்கு
நேசமோடளிப்பார்கணின்மலர்களேயாவார். (அங)

விதித் தவீசனுமம்முறையருசசிக்கவிருமபுந்
துதிதநபூசனைபுரிந்துளோர்தரிசித்தோர்தூய்தாய்க்
கதித்தபோகங்களினிதுண்டுகயிலைவாழ்ந்தப்பான்
மதித்தசெஞ்சடாமகுடாசேவடியினிலவதிவார். (அச)

வேறு.

இம்மூன்றுபாடலேசதநியற்கையுமேன்மையாவுங்
கொம்மைவெம்முலைமான்கண்ணியுமையுளங்குளிரக்கொண்ட
வம்முறையுணரனனுந்தூர்ச்சடிமாணுக்கற்கு
மம்மரில்பிரமசிலன்கதையினைவகுத்துச்சொல்வான் (அரு)

தேவிதவஞ்செய்த சருக்க முற்றிற்று.

ஆகப் பாடல ருருஅ.

## தேவிதவஞ்செய்த சருக்கம்.



பாதிரிவிருக்ஷத்தின் மூலத்திலெழுந்தருளியிருந்த உமாதேவியார் அந்தவிருக்ஷத்தின் வடபுரத்தெழுந்தருளி, உணவின்றி, பாதங்கள பூமியில் பதிதலின்றி, வாயுரூபியாய், அருமைத்திருக்குழந்தையாகிய முருகக்கடவுளுந் தேட வருவமாய்; பாடலிவிருக்ஷத்தினடியிலெழுந்தருளியுள்ள சிவபெருமானை வேதாகமவிதி வழுவாமற் பூசித்து, அட்டாங்க வுறுப்பினளாகி, வராகிமுதலிய பெண்கள் எண்மருஞ் சூழ்ந்திருந் தேவல்செய்ய, நிருமல்யோசம் புரிவாளாயினள். சகலலோக நாயகராகிய வண்ணலா ருலகுய்யும்பொருட்டு அம்மை காரணமாகப் பாடலிக்ஷேத்திரத்தின் பெருமையை விரித்துரைக்கத் தூர்ச்சடி பிரமசீலன் என்னுமிரண்டு கணத்தவரை நினைத்தருளினார். உடனே யவவிருவரும் மாணிடச்சட்டை சாத்திக் குருசீடர்களாகி, யனேகக்ஷேத்திரங்களெல்லாஞ் சென்று தரிசனஞ்செய்து வருபவர்களாய், இந்த க்ஷேத்திரத்திற்குவந்து, ஆகமப்படி தரிசனஞ் செய்து, வலம்வந்து, அம்மை தவஞ்செய்துகொண்டிருக்குமிடத்திற்கருகே யுட்கார்ந்து, இத்தலமான்மியத்தைச் சொல்லுகவெனப் பிரமசன்மன் வணங்கிக்கேட்கக் குருவாகிய தூர்ச்சடி நவில்கின்றனன். பாதிரிவனமாகிய விந்த க்ஷேத்திரம் மேற்கே ஒரு யோசனை தூரத்தில் திரிபுரதகனஞ்செய்த வீரட்டேசனெழுந்தருளிய வீரட்டத்தலமாகிய திருவதிகையும், அதற்குத் தென்கிழக்கில் உருத்திசாரூபம் பெற்றுச் சோழராஜனுக்குக் காக்ஷிதந்து மூவராய் நின்ற மூர்த்தி யெனத் திருநாமங்கொண்ட விட்டுணுமூர்த்தி வீற்றிருந்தருளிய திருவகீந்திரமும, அதற்கருகில் வாமனவதாரஞ் செய்த விட்டுணு மாபலியைக் கொன்ற தோடம் நீங்கச் சிவபெருமானைப் பூசித்து வரம்பெற்ற திருப்பதியாகிய திருமாணிகுழியும், தெற்கே

ஜீவன்முத்தி க்ஷேத்திரமாகிய தகராகாசமென்னுஞ் சிதம்பரமும்
கிழக்கே பிரமதீர்த்தமாகிய சாகரமும் வடக்கே வில்வவன நல்லூ
ரென்னும் க்ஷேத்திரமும் பிநாகினியும், ஆகிய எல்லையை யுடையது.
யுகாந்தகாலத்து மழிவில்லாதது. பிரமன், விஷ்ணு, இந்திரன,
யமன், பன்னிரண்டருக்கர்கள், மருத்துவர், கந்திருவர், மற்றைய
தேவர்கள் நரர்முதலாயினோர் பலருங்கூடி மாசிமாதத்தில் பாடலே
சனுக்குத் திருவிழா நடாத்தி மகாக்ஷேத்திரமும் பூரணையுங்கூடிய
தினத்தில் பிரமதீர்த்தமாகிய வாரிதியில் தீர்த்தோற்சவஞ் செய்
வித்து ஸ்நாநஞ்செய்து பிருஹந்நாயகி சமேதராய்ப் பாடலேசன்
இடபவாகனத்தெழுந்தருளுங் காட்சியைத் தரிசித்துத் தேவரெல்
லாருஞ் சித்தர், சாரணர், சிவயோகியர் மற்றைத் தொண்டராயுள்
ளோர் பலருந் தேவதேவனைப் பூசித்துத் தோத்திரஞ்செய்து புத்தி
முத்திகளைப் பெற்றனர். இத்தன்மைத் தாயவித் திருப்பதியில்
திருக்கோயில் கொண்டெழுந்தருளிய வுத்தாரேசனுக்கு ஆண்டு
தோறுந் திருவிழா நடத்திப் பூசைக்குரிய பொருள்களும் மணி
குடை சாமரந் தீபம் தூபகலசம் தீபகலசம் திருவாபரணம் திரு
வொற்றுடை திருவாடைமுதலியவற்றைச் சேர்ப்பித்தோர் எய்து
தற்கரிய பேரின்பம் பெறுவர். மகாமந்திரங்களெல்லா மொருங்கு
கூடிநின்று போற்ற மந்திரத்திருவுருவங்கொண்ட உத்தாரேசனது
அருளைநிகர்த்த பரவையினின் மூழ்கினோர் யாவரேயாயினும் மும்
மலமொழியப் பெற்றுச் சத்திநிபாதச் செல்வராகுவர். பஞ்சமகா
பாதகராயினும் இத்தலத்தின் மூன்றுமாதமேனும், சிரத்தையோடு
ஒருமாதமேனும், அதிசிரத்தையோடு ஒருதினமேனும் வசித்து இவ
வுததியின் மூழ்குவராயின் அப்பாதகமெல்லா மிரவிமுன்பனிபோ
லொழிந்து தேவராவார். மணல்களெல்லாஞ் சிவலிங்கமாக நிறை
யப்பெற்ற வத்தீர்த்தத்தில் நியமமாக மூழ்கினோர் குட்டம் காசம்
ஈளை ஜ்வரம் முதலிய நோய்களும் அவமிருத்துவு மகலப்பெறுவர்.
புத்திரப்பேறும், செல்வமும், ஆகருடணம் ஸ்தம்பனம் மோகனம்

வித்வேஷணம் உச்சாடனம் வசியம் முதலிய மந்திரவித்தைகளும், எண்வகைச்சித்தியும், சிவஞானமும் பெறுவரென்றால் அத்தலத்தின் பெருமை யென்றற்கூறுமளவினதோ? உலகிலுள்ள சிவக்ஷேத்திரங்களிலெல்லாஞ் சிற்சில கலைகளோ டெழுந்தருளியுள்ள சிவபெருமானிந்தத் தலத்தில் ஆயிரத்தெட்டுக் கலைகளோடும் வீற்றிருக்கின்றனர்.

நதிகளுள் கங்கையும், உத்தமசாதிகளுக்குள் பிராமணரும், மிருகங்களுள் காமதேனுவும், உலோகங்களுள் பொன்னும், நவரத்னங்களுள் கவுஸ்துவமணியும், தானங்களுள் அன்னதானமும், விரதங்களுள் கொல்லாமையும், ஞானங்களுள் சிவஞானமும், யாகங்களுள் அக்கினிட்டோமமும் தேவர்களுள், உருத்திரமூர்த்தியும்; மந்திரங்களுள் பஞ்சாட்சரமும், பூக்களுள் வில்வமும், பரிசுத்தப் பொருள்களுள் விபூதியும் எப்படிச் சிறப்புடையதோ அப்படி மற்றத் தலங்களுண் மிகச்சிறந்தது கடைஞாழலென்னு மித்தலம், கருடர், இயக்கர், மற்றைத்தேவ ரிருடிகளுட் சிறந்த மங்கணர் முதலியோரும்; வராகி, துர்க்கை, சுமதி, உரோகிணி, அருந்ததி, லோபாமுத்திரைமுதலிய தேவவிருடிப் பெண்களும் பூசித்துப் பரகதியடைந்தனர். அரசர்களுட் சிறந்த ஆதிராசன் இத்தலத்திற்குவந்து ஆலயமுதலிய திருப்பணிகள் செய்து திருவிழாநடாத்திப் பலகாலம் பூசித்து முத்திபெற்றனன். இன்னுமனேக ரித்தலத்தெழுந் தருளியுள்ள சிவபெருமானுக்கு நித்தியநைமித்திக பூசைக்குரிய பொருள்களுந் தூபதீப கலசங்களும், கொடுத்து இஷ்டசித்தி பெற்றவராயினர். ஆதலின் எல்லாத் தலங்களுள்ளும் மேலானது இதுவேயென்று தூர்ச்சடி சொல்லக்கேட்ட பிரமசன்மன குருவைவணங்கிப் பிரமசீலன் கதையைச்சொல்ல வேண்டுமென்று கேட்கத் தூர்ச்சடி கவில்கின்றான்.

# பிரமசீலச்சருக்கம்.



வள்ளவளயக்கமலத்தண்ணன்மதியெனுந்தலையசற்றாக்கி
வெள்ளிமால்வரைக்குமிக்காய்விளம்புமின்னகரந்தின்னி
லுள்ளவந்தணர்க்குச்செய்தவுதவியாலகிலதானத்
தெள்ளரும்பலமுமெச்சபலன்களுமிசைக்குவாராம். (௧)

புன்னைபுண்டரீகம்பூக்கும்பாதிரிப்புலியூராங்கண்
மன்னியமறையோரீசனடியவர்வருந்தச்செய்த
வின்னலொன்றேனுந்திராரௌரவநரகமெய்தி
யன்னவர்துயருந்துன்பத்தளவையாருரைக்கற்பாலார். (௨)

கொலைகளவாதிகள்ளுண்குருமனைத்தொடர்ச்சியின்ன
வளவின்மாபாவத்தாரேட்டமர்தலைம்பாவத்தார்க்கு
முள்ளெகிழ்நலிவாறகாலத்தடைவினிற்றீர்வுண்டிந்த
வளநகாவழிக்குமுன்னோர்க்கிழைத்தவைமாறுதன்றே. (௩)

ஐம்பெரும்பாவஞ்செய்தோர்க்கடைவினிற்றீர்வுண்டண்ண
லெம்பிரான்புலிசைவாழுமந்தணர்க்கியற்றுமின்ன
லம்பிரானடியார்தீர்க்கிலன்றியேதவிரொண்ணுதா
லிம்பருமறியவுண்டோர்கதையஃதியம்புவாமால். (௪)

அக்கதையிதிகாசத்தின்விளங்குவததனையோர்ந்தோ
ரக்கிலேசத்துஞ்சாராரவமிருத்தாதியெய்தா
தக்கமாசுரங்குன்மாதிவியாதியிற்றுளங்கார்தீர்க்க
மிக்கவாயுளினோடுண்டும்வாழ்வர்சீவிருமபிக்கேட் (௫)

என்றவைபிரமசன்மனுள்ளங்கொளும்படியாவீன்ற
கன்றினுக்கீற்றாச்செய்யுங்காதலிற்கருணைகூர்ந்து
மன்றதூர்ச்சடியாமாசான்மனமகிழ்ந்துணர்த்தான்மேனா
ளின்றுமக்குரைத்துங்கேண்மினெனச்சூதனியம்பானின்றான், (௬)

பொசித்தருவளன்மசான்றசயயமகியின்கட்பொற்ப
வசிதகிடந்தகன்கணக்குச்சித்திரகுத்தன்மற்றை
விசித்திடுபாசக்கையர்வெடிகுரல்விரிபற்பங்கி
நசிப்பில்செந்தழலின்மன்னுந்தூதரைநடுங்கக்கூவி. (௭)

பாடலவனத்தினிற்றென்னாளையிற்படர்ந்தாய்க்குற்ற
ஏடவிழ்கமலத்தாரோன்பிரமசீலன்புராடெல்ய்திப்
பாடவமுறையாதன்னோற்பற்றியீங்கிடுதிரென்ன
நீடலர்விரைந்துசென்றோர்கணத்தினிநேர்ந்தாரன்றே. (௮)

நித்தியகன்மமான்றிபதிசெய்தமலன்பூசை
பத்தியிற்புரிந்துமுத்தீக்கடன்மறைவிதியாற்பாரித்
தத்திறம்விசுவதேவபூசைசெய்தனமுநீறுங்
கைத்தலங்கொண்டுகொக்கைசுவாப்பலிகருதிவந்தான். (௯)

புண்ணியந்திரண்டமேருப்பருப்பதம்போல்வான்யார்க்குந்
தண்ணியகருணைகூர்ந்ததயாநிதிசாந்திமேலோ
னுளநெகிழ்பரமபத்தனைத்தபூதலத்துமுன்றி
னெண்ணரினனவனைத்தூதர்காறப்பவீழ்த்தினார்கள். (௧0)

ஆங்கனம்வீழ்த்ததேதுவாகவவ்வுயிரையீர்த்துப்
பாங்கினிற்பூததேகப்படிவத்தனுக்கிக்கொண்டு
தாங்கியேயெண்பத்தாறாயிரமெனுஞ்சங்கைசார்ந்த
வீங்குயோசனைப்பரப்பும்விழித்திமைப்பதன்முன்சார்ந்தார். (௧௧)

மறைவலோன்கிழத்திமைந்தன்மாதுலன்மருமானாகி
யுறவினருளர்ந்துண்ணென்னவோடிவந்திறுத்துப்பார்த்திங்
கிறையினில்வீந்தானென்னவிரங்கினர்புலம்பிச்செய்யும்
முன்றகைகள்புரிவான்வேண்டுமுயற்சியிற்றுளங்காணின்றார்: (கஉ)

சார்தலுமியமலோகச்சித்திரகுத்தன்சண்ட
னாதனுமிருவர்வைகுமனைவமுன்னணுகச்சென்று
ஓகாதறுபிரமசீலற்கொணர்ந்தனமென்றுசொல்ல
மூதறிவாளனாதருமனுமுனிந்துசொல்வான். (கங)

எரிவிரிந்தனையகுஞ்சியிருங்கையின்மேனியங்கை
வரிகயிறுடையீர்மூட்மதியிலோலன்செய்தீரென்
றரியணையிழிந்துதூதர்கொடிறுடைத்ததட்டிமாட்டிப்
பரிபவம்புரிந்தான்கண்டுபகர்ந்தனன்பிரமசீலன். (கச)

ஏவலர்செய்வதென்யானீங்குமைக்காணவேண்டும்
பாவகமுடையேனென்றுபகர்தரும்பிரமசீலற்
காவனமுறையாற்பூசித்தருகுறவைத்துச்சொல்வா
னீவிரும்முலகமெய்துங்கிளைத்துரைத்தவன்வேறென்று. (கரு)

உம்மையாங்காணும்வண்ணமுறுதவம்புரிந்தேமாக
வெம்மிடைவந்தீரென்னவியமனுமுகமன்கூறித்
தம்மையொப்பரியீர்பாடலேசத்திற்சிலநாட்டங்கி
யும்மரற்றடைந்தோர்க்கன்னமுதவியேவாழ்மினென்றான். (கசு)

உரைத்தசொற்சரதமவ்வாறுறுதும்யாமியமலோகத்தி
னிரைத்தமாநரகத்தோடுநரகர்கணிலைமைகாணப்
புரைத்துவாஞ்சித்ததுள்ளமென்றலும்போகவேவி
வரைத்தயனின்றதண்டலாளர்க்குவகுத்துச்சொல்வான். (கஎ)

ஏடகேளிந்தவேதபாரக்கிமைக்குமுன்ன
நாடருநரகமன்னுநரகருட்கொடியராய
பாடகவினையார்தம்மைப்பயமுறத்தெரிவித்தீங்குக்
கோடகமிலராம்வண்ணங்கொணர்தியென்றேவிவிட்டான். (கஅ)

காரகன்மறையோன்றன்னைக்கடிதினிற்கொண்டுபுக்கு
நாரகர்நலிவுமுற்றுநரகிடைத்தெரிப்பநோக்கிப்
பாரகம்புரிந்தபாவம்பாற்றுதற்குபாயமெண்ணித்
தாரகமாகுமீசன்சிவனுமஞ்சாற்றலுற்றான். (ககூ)

எரியிடைக்கரியும்பைங்கூழ்தளிர்தளிர்த்தின்பமெய்திச்
சொரிகருமுகில்வந்தெய்துந்தோற்றம்போற்பிரமசீலன்
மருவியாங்குறுதனோக்கிரவுரவநரகமாக்கள்
புரிமுந்நூன்மார்பிரின்னகேண்மெனப்புகலலுற்றார். (உ௦)

காயிகமனத்தால்வாக்காலியற்றியகன்மபேத
மாயிடையனந்தமொன்றொன்றனந்தமாயீண்டுபல்க
நாயரிகழுகுசேனநரியராப்பிடுங்கத்தீயின்
வாயெரியீயஞ்செம்புவார்ப்பவுமாழ்கினேமால். (உக)

செக்கியந்திரத்தின்வைத்துத்திரித்திடுந்தூதரெய்த்தா
சக்கரச்சுழலரங்கிவாயினிற்றருவரப்பான்
மிக்கெரிதயிலுத்திட்டுநோக்கிடார்வெந்துநொந்து
துக்கமுற்றிவெதன்றியாவியுந்தொலைவுறாதால். (உஉ)

பன்னெடுங்காலநின்றுபழகியநரகவின்ன
லின்னலைப்புதுநோய்மானக்கணந்தொறுமெய்தாநிற்கு
மன்னவத்துயரமீசனையநும்மேனிகாணு
முன்னமேநீங்குமியாங்களுய்வகைமுயறிரென்றார். (உங)

கருணையங்கடலாநீவிர்கட்கடையதனானோக்கப்
புரிதவமுடையேம்பாவப்பகுதியானிரையம்புக்குப்
பிரிவகையணுவுமின்றியுகங்களெண்ணிலபின்னிட்டும்
விரிவினையகற்றநீரேயன்றிவேறில்லையென்றார். (உச)

இன்னனபலவேறாகவவரிவரெய்துநோக்காற்
சொன்னவையாவுங்கேட்டுத்துயரலீரஞ்சலீரென்
றன்னவரைப்பிரமசீலர்கிரமெடுத்தமைப்பநோக்கித்
துன்னியதண்டலாளர்பிரமசீலரைச்சொல்கின்றா. (உரு)

வெவ்வழற்றூணந்தோய்ந்துமிளிரியவெரியின்பாவைக்
கொவ்வைவாய்ப்புணர்ந்துஞ்சூசியாதியாற்குமைப்பநொந்து
நவ்வியாலெறிந்தும்விண்ணிலேற்றியுநலிவநோவ
திவ்வியனரகத்தென்றுமுள்ளநீரேகுமென்று. (உசு)

கணத்தினிலொருபாற்காட்டிக்கொணர்கெனக்காலனெம்மா
னுணர்த்தினனிவணீர்தாழ்க்கிலென்னவாமுமதுதேகம
பிணித்தலங்காரஞ்செய்யிற்பிழைநுமர்நோவர்போமென்
னிணக்கயில்படாளைநோக்கித்தட்டிப்பிணியம்பாணினார். (உஎ)

சம்புவேவீசதேவசதாசிவவுத்தாரேச
வம்புலியணிந்தவேணியாரணபுராணநாத
நம்பவெம்பிரான்முக்கண்ணநாரணிபாகசூலி
வம்பலர்ப்பாடலேசகெடிலதீரத்துவாழ்வே. (உஅ)

ஆரணாகமங்கள்சொல்லுநாமங்களனைத்துமிவரா
றோருணர்வாகவீசன்பதாம்புயஞ்சிந்தித்தோதக்
கோரமாநரகநீங்கித்திவ்வியதேகங்கொண்டு
வேரணிவிமானமேறிச்சிவபுரிக்கேகாநின்றார். (உகூ)

தாயுமாய்ப்பன்றியுண்ணத்தன்னியபானமீந்த
நாயகன்கருணைகூர்ந்திவ்வுருவமாய்நரகநீக்க
வேயினவண்ணமென்றேபிரமசிலரைப்பார்த்தியாரு
நேயராய்த்துதித்துச்சென்றார்நெய்யழற்கிடந்தாரைவர். (௩௦)

எக்கொடும்பாவஞ்செய்தோரிவரெனப்பிரமசிலர்
மிக்கதோரையமெய்திவேதம்வேதாந்தமியாவுந்
தொக்கதோத்திரங்களன்றோர்செவிக்குறத்துதித்துந்தீரத்
தக்கதொன்றிலாமைகண்டுசார்ந்தனர்மறலிதன்பால். (௩௧)

சித்திரகுத்தன்கூற்றனிருவருமிருந்தசெவ்வி
மத்தியினேயனூதர்வணங்கிநின்றிதனைச்செல்வா
ரித்தகுபிரமசிலர்நாரகரெவருமுய்ந்து
வித்தகவிமானமேறிச்சென்றிடவிதித்துப்பின்னும். (௩௨)

அன்றுதொட்டின்றுகாறுந்தயிலபாத்திரத்தினுங்கு
நின்றுவேகின்றவைவர்தம்மையுநிரயநீக்கி
நன்றருள்புரிவானீயகுநண்ணினரென்னச்செப்பக்
குன்றிணைப்புயங்கள்கொட்டித்தருமனுங்கூறனின்றான். (௩௩)

அதிசயமெம்முன்னோருமறிந்திலரைவர்தம்மை
விதிமுறைவிமானத்துய்ப்பவேண்டுதிராயினீர்போய்ப்
பதியினும்முட்டலம்போமுன்பற்றியாங்கிருந்துகாளை
மதியுடன்வருதிர்யானுஞ்சிலவரமளித்தேனென்றான். (௩௪)

நன்றெனக்கணத்தினீங்கிப்பாடலவனத்தினண்ணித்
தன்றனித்தேகந்தன்னிற்சார்ந்தனன்பிரமசில
னின்றவைக்கிளைஞரார்த்தார்நித்தியகன்மமுற்றி
மன்றினினடித்ததாளைத்தொழுதுவாழ்ந்திருந்தானன்றே. (௩௫)

சயயமணியின்கட்டாம்போய்ச்சார்ந்ததுந்தருமராச
ஞெய்யுராந்தூதர்தம்மைகோவுறப்புடைத்தவாறும்
பையவேநரகம்யாவும்பார்த்துளமிரங்கியீசன்
செய்யதாள்பரிசிநாமத்தோத்திரஞ்செய்தவாறும். (கசு)

கடூரகத்தோர்பாவக்கலக்கநீத்தின்பமெய்தி
மடவரலரம்பைமார்கோர்விமானத்தின்மன்னியெய்திப்
புடவரவணிந்தவீசன்கயிலையிற்படர்ந்தவாறுந்
திடமுடன்மறலியேவப்பூமியிற்செறிந்தவாறும். (கஎ)

காதலிபுதல்வன்சுற்றமனைவருங்கருதிக்கேட்ப
மேதகுபிரமசீலனறைந்தனன்வியந்தார்பின்னு
ளாதரவுடனேசந்தியாதியாங்கடனியற்றி
நாதனையுலகமீன்றகன்னியைவணங்கினானால். (கஅ)

சித்தியேபுத்திசத்திசவுரியமெனச்சிறந்த
சத்திநால்வருக்குநாதனாகியகணேசன்றன்னை
யுத்தமகங்கைகும்பமுனிவனும்பூசித்துள்ள
வித்தகன்கன்னிவைகும்விநாயகன்றாள்களபோற்றி. (க௯)

அந்தணன்பிரமசீலதயாநிதியட்டதிக்கி
னிந்திராதியர்கள்பூசையியற்றியகணேசற்போற்றி
சந்ததமூன்றுலோகஞ்சார்வரந்தருமன்றன்னால்
வந்தவாமனங்கொண்டேகியமனமுன்மன்னிநின்றான். (உ0)

வேதனையனையவந்தனளனைவியந்துபூசித்
தேதமிற்றருமராசன்சித்திரகுத்தனின்றோர்
மாதவத்தரும்சீலனுடனரகத்துமன்னிப்
பாதகப்பெருக்காறொர்ந்தவைவரைப்பாராநின்றார். (உக)

பன்னருங்கருணைமேருவாகியபணவர்கோமான்
முன்னையநான்குவேதமந்திரமூலம்யாவும்
பின்னருமுயர்ந்தவோசையாலெடுத்துரைத்தும்பேரா
ரின்னவாறென்னென்றெண்ணிப்பிரமலோகத்தையெய்ந்தார். (சுஉ)

சண்டனும்பிரமசீலனிருவருஞ்சார்ந்தாரென்ன
வண்டர்கள்கமலப்புத்தேட்கறிவிப்பவழைமினென்ன
வெண்டகக்கொண்டுபுக்காரிறைஞ்சினரிவர்யாரென்ன
தண்டகன்றருமசீலன்செய்கையைவிளம்பினானால். (சுங)

மற்றையத்தயிலத்தீயின்மருளுறுங்கொடியோர்தம்மை
யிற்றையிவவைகல்காறுமுணர்ந்திலமறையோனவெள்ளிய
பொற்றையங்கயிலைக்கேகாணின்றனம்போதிராங்கே
யுற்றவக்கொடியோர்செய்கையாவையுமுணாவோமென்றான். (சுச)

சென்றனரயனுந்தன்மராசனும்பிரமசீலக்
குன்றின்மாதவனும்வெள்ளிவரையினைக்குறுகியேக
நின்றயற்றிசைவிளங்குங்கதிர்மணிவாயினேர்ந்து
நன்றருணந்திதேவரிருக்கையைநணுகச்சென்றார். (சுரு)

சண்டனுமயனுமந்தமூளனுந்தருமரூபங்
கண்டனர்சுரிகையோடுவேத்திரங்கரத்திற்றாங்கிப்
புண்டரநுதலிற்றீட்டிச்சிவனெனப்பொலியுமேன்மைத
தொண்டர்கள்பணியுநந்திபதாம்புயந்தொழுதனர். (சுசு)

புன்னகைகருணைநோக்கம்புரிந்தயன்வதனநோக்கி
மன்னியபிரமசீலன்யமனொடுவந்தவாறிங்
கென்னெனவினவநந்திமலரவனெடுத்துச்சொல்வான்
றன்னையொப்பரியநாததேசிகசரணமென்று. (சுஎ)

முதுமறையவன்கூற்றுமொடியிணைவணங்கிமுன்னின்
றதிசயமொன்றுண்டிருந்தவந்தணர்பிரயசீலர்
பதியுறைபாடலேசமிவரையப்படர்பேர்மாற்றான்
மதிமயக்குற்றுப்பைய்யயமணிடைக்கொண்டுவந்தார். (சஅ)

கண்டனன்றருமராசன்றூதரைக்கனன்றுசொல்ல
வெண்டீகப்போற்றிநும்மூர்ச்செல்லுதிரெனலுநன்று
[illegible]ண்டையுபாவபோதர்வருந்துதல்பார்க்கவாசை
யுண்டெனவுரைப்பவாங்குத்தெரிவிப்பவுற்றுநோக்கி. (சகூ)

இரங்கியவுளத்தராகியின்றிருநாமமுற்றும்
வரங்கொளத்துதித்தலாலேநரகமாக்களுய்ந்தா
ரரக்கைதமேலானவைவர்தயிலத்தியழன்றரன்றோ
பரந்ததீவினையுந்தீர்வும்பகர்கவென்றிவண்வந்துற்றார். (ரு0)

எனவெடுத்தியம்பக்கேட்டுச்சயிலாதியிசைப்பாமூத்தர்
வினையிலாப்பிரமசீலர்பாடலேவணத்தின்மேவி
நினைதருமுத்தாரேசந்தரிசனநியதரால்யா
மினையவைப்புகழவேண்டுமென்றின்னுமியம்புகின்றார். (ருக)

பாடலைப்புலியூர்வாழும்பனவரைநாளுநாளுந்
தேடனஞ்செய்தானன்னோர்க்குறுபொருடரேந்தான்மறறவ
வேடவிழ்தாரோர்க்குற்றபொருளையேயெடுத்துக்கொண்டா
னூடகப்புரியுமீசன்பொருள்கொண்டானைகைசெய்தானால். (ருஉ)

ஆகியவைந்துபேருமனந்தகற்பங்கண்மன்னி
யேகுதலிலராய்நோவாரன்னரீடேறும்வண்ணம்
போகுதல்செய்யச்செவ்வேள்விநாயகனுமையாள்பூதி
யாகமதுடையவெம்மால்வயிரவராலுமாகா. (ருங)

இங்ஙனமுரைத்துவைகுமேல்வையின்முருந்தனேடெங்
கங்கைவார்சடையெம்மண்ணல்கணங்கள்சூழ்தரவந்தற்றா
பங்கயனந்தியாதியனைவரும்படியில்வீழ்ந்து
செங்கரங்கூப்பிநிற்பத்திருநயனத்தானேக்கி. (ருச)

முந்தியமறைகளாலுமறியொணுமூலமூர்த்தி
நந்தியையிவன்யாரென்னத்திருக்கரநயத்தாற்கேட்ப
வந்தவாறனைத்துநந்திவணங்கிவிண்ணப்புஞ்செய்ய
வெந்தையார்மறையோன்றன்னைக்கடைக்கணித்திரம்புகின்றார். ()

புன்னகைபுரிந்துமின்னுஞ்சினையினைநேர்க்குமம்பொறபி
னன்னதோர்தெய்வநோக்கானுண்ணயம்பரலித்தண்ண
றன்னையொப்பரியநாதன்றருணவெண்பிறையோன்சம்பு
மன்னுமாமறையோர்க்கின்னவருத்தனன்கருணையாலே. (ருக)

சத்திமண்டலத்தின்மேனஞ்சகத்திரகலையுமன்ன
நித்தமாய்ப்புத்திமுத்தியுதவுமந்நிலைமையாலே
கொத்தலர்பாடலேசங்குளுஉமணிக்கயிலையொக்கு
மத்தலத்துறையாணினறமர்களிலதிகனியாம். (ருஎ)

அயர்விலாவன்பின்வாய்ந்தோயருச்சனைமுறையின்மேலாய்
துயருறுமெமவரேயேனுந்தொடர்வினைகருணைசெய்வோய்
பெயருறுகடைலாழும்கண்வாழுதிபிரமசீல
வியலுறும்வேதம்வல்லோய்நின்பொருட்டுரைக்கிச்சொல்வாம். (ருஅ)

பண்ணைவாய்க்கமலத்தோட்டுப்பணிலமுாத்தினுழாமை
யண்ணலம்புலிசைவாழுநமக்குநமன்பரான
புண்ணியமறையோர்கட்குமிடர்செய்தபுல்லரன்றே
றெண்ணைவெந்தீயினெந்தகற்பங்களொன்னுறுதால். (ருகூ)

நினைப்பினுந்துயருமைவர்பாதகர்நிரையநீங்கி
மனக்கினிதாகவழுமாற்றமொன்றுரைத்துங்கேட்டி
தனக்கிணையுயர்வில்பாடலேசத்திற்சார்ந்துநீயு
நினக்கினிதான்வேதபாரகர்சதருநேர்ந்து. (௬௰)

சிவகரதீர்த்தமென்னுந்தெய்வதத்தடத்தின்மேவித்
தவநிலைத்தனஞ்சந்திசமைத்தொருகும்பந்தாபித்
துவமையிலுமையோடெம்மைவிதிமுறையருச்சித்தேயென்
னவயவமுதலாம்வேதமுருத்திரமனைத்துமோதி. (௬௧)

அக்கடதீர்த்தமெண்ணெரியினில்வருந்தாநின்ற
தொக்கபாவியர்கடம்மேற்புநோக்கணந்துலங்கச்செய்த
தெக்கணமக்கணத்தேபாவநீத்தேய்வர்பண்பிற்
றக்கவர்சாரும்வெள்ளிப்பருப்பதத்தகைசால்கோயில். (௬௨)

என்றருள்புரிந்துமேலுங்கருணைவாரிதியாமீசன்
குன்றனதவத்தாய்சன்மமினியுனக்கில்லைகோதற்
றென்றனையடையுமுத்தியந்தியத்தெய்துவாயென்
றன்றவர்க்கருளிச்செய்தானாரணவுருவாய்நின்றான். (௬௩)

இரணியகருப்பன்சண்டன்மறையவனிவர்கடங்க
டரணியிற்பூதங்கடம்மிற்சாருறக்கலடக்கணல்க
வரிணமுன்றட்டநாதனடியிணைவணங்கிச்சென்றார்
பூரணமுமுகுந்தன்மேல்வைத்திறையவன்கோயில்புக்கான். (௬௪)

பூமலிநமுதியோன்பாடலேசத்தின்வந்திங்கியாவுந்
தாமமார்மூன்றான்மார்பரனைவற்கும்வணங்கிச்சாற்றி
யாமவரனைவரோடோங்காரசதீர்த்தத்தினண்ணிச்
சேமமார்கலசந்தாபித்தருச்சனைவிதியாற்செய்து. (௬௫)

கும்பநீர்கொண்டுசைவர்யமனிடைக்குறுகியாங்கு
வெம்புறுமைவர்மேனிவிளங்குறத்தெளித்தானன்றே
ரும்பரில்விமானமேறிச்செல்பவருரையினாலே
தம்பிரானாகவெண்ணித்துதித்தனர்மறையோர்தம்மை. (சுசு)

அவ்வுழியாகாயத்தேயெழுந்ததுவரன்றன்வாக்குச்
செவ்வியபாடலேசமறையவர்காசதீர்த்த
மிவ்விருவடிவும்யாமேயென்பதுதெளிந்தமேலோ
ரவவியற்றடாகத்தாடியருங்கதியடைகுவாரால். (சுஎ)

அருமறைமுனிவரன்னோரகமகிழ்வகையாற்பூசித்
தொருமையினின்னோரைவர்க்குறுவினைபாவநீங்கிப்
பெருமையபதங்களெய்திநம்பதம்பெறுகவென்ன
மருவியவாணிகேட்டுமகிழ்ந்தனர்மறையோரெல்லாம். (சுஅ)

அம்மறையவர்களோடுந்தருமனதனுஞ்ஞைபெற்றிங்
கிம்மெனவந்துபாடலேசத்தினெய்தியன்னோர்
தம்மனைபுகுதமற்றைப்பிரமசீலனுமிற்சார்ந்து
செம்மையவாழ்வின்மன்னிச்சிறந்துவீற்றிருந்தான்மாதோ. (சுகூ)

சங்கற்பசிருட்டிசெய்யுஞ்சதாசிவன்கர்த்தாற்செய்த
துங்கமாதீர்த்தமேன்மையாவரேசொல்லவல்லார்
கங்கையும்வன்னிக்கோவுங்கரசமென்றுரைக்குமேன்மைப
பங்கயவாவிமூழ்கிப்பரிபவந்தீர்ந்தாரன்றே. (எ0)

ஒருங்கியபிரமசன்மனுளங்குளிர்ந்துவக்குமாற்று
னெருங்கியகேள்விவல்லதூர்ச்சடிகிகழ்த்துகாதை
மருங்குறுசவுனகாதிமுனிவரர்மகிழச்சூத
னொருங்குடன்பிரமசீலன்சரிதமுற்றுரைத்தான்மாதோ. (எக)

பிரமசீலச்சருக்க முற்றிற்று.

ஆகச்செய்யுள் - சுகக.

---

உ

சிவமயம்.

# பிரமசிலச்சருக்கம்.

பதுமாசனத்தி லெழுந்தருளியுள்ள பிரமதேவன் முன்னொரு காலத்துக் கைலாஸத்தையும் இந்தத் திருப்பாதிரிப்புலியூரென்கிற க்ஷேத்திரத்தையும் தனது புத்தியாகிய தராசினால் நிறுத்துக் கைலையிலும் மிக்க மேன்மையுடையதென்று நாட்டிய இந்தத் தலத்தில் வசிக்கும் அந்தணர்களுள் ஒருவருக்கு ஒருதவி புரிந்தால், மற்றத் தலங்களுள் செய்த அனந்த தருமபலனும், யாகபலனும், சித்திக்குமென்று பெரியோர் கூறுவர். இத்தலத்தில் வசிக்கும் அந்தணர்க்குஞ் சிவனடியார்களுக்கும் ஏதேனுந் துன்பங்களைச் செய்தோர், மற்றெந்தத் தலங்களிற் சென்றாலும் அந்தப் பாவம் நீங்கப்பெறார்; அன்றியும், ரௌரவமுதலிய நரகங்களிலிருந்து பலகாலமும் வருந்துவர். பிறதலங்களிலிருந்து பஞ்சமகா பாதகத்தைச் செய்தோர் இத்தலத்தை யடையின் தீர்வுண்டாம். இததலத்து வதிவோர்க்கின்னலியற்றில், அப்பாபம் பஞ்சமகாபாதகத்தின்மேலாய் என்றுமெங்குந்தொலைவுறா. தலைவராகிய பாடலேச னெழுந்தருளியுள்ள புலிசையென்னும் இந்த க்ஷேத்திரத்தில் வாழும் அந்தணர்களுக்கு ஒருவன் துன்பமியற்றினால், அந்தப் பாபத்தை இத்தலத்தில் வைகுஞ் சிவனடியாராலன்றி மற்றெவராலும் நிவர்த்திக்கமுடியாது. அந்த வற்புதத்தை யாவருமறியததக்க ஒருகதை யுண்டு. அக்கதை சிவரகசியமாகிய இதிகாசத்துள்ளது. அக்கதையைக் கேட்டவர் யாவரேயாயினும், ஏவ்வித கிலேசத்தையும், அபமிருத்தியு முதலிய அரிட்டங்களையும், வேறு வகையால்வரும் துக்கங்களையும், ஜ்வரம், குன்மம், முதலிய நோய்களையும் எய்தார். தீர்க்காயுவோடு பல்

வகைப் பொருளும் இன்பமும் பெறுவர். ஆதலின் அக்கதையைக் கேளென்று தூர்ச்சடி, பிரமசன்மனுக்குச் சொல்லிய வண்ணம் சொல்கின்றேனென்று சூதர் மற்றைய இருடிகளுக்குப் பகல்வாராயினர்.

என்றும் நீங்காத வளத்தோடுங் கூடிய யமபுரத்திலிருந் துலகிற்பிறந் துழலு முயிர்களின் காலவெல்லையைக் கணிக்கும் சித்திரகுப்தன் என்னுந் தேவன், பாவான்மாக்களை யிறுக்கிக்கட்டும் கயிறும், இடியை நிகர்த்த பயங்கரமான வெடிகுரலும், மிகவும் நீண்டு வளைந்திருக்கும் பற்களும், தீச்சிகைபோன்ற சிகையும், தீக்குழிபோன்ற கண்களும் உடைய யமதூதரை யழைத்துப் பூவுலகத்திலே பரதகண்டத்தின் றென்புறத்தே பிநாகினியின் றென்பக்கத்தேயுள்ள புண்ணியத்தலமாகிய பாடலீ வனத்திலே வசிக்கின்ற வந்தணனாகிய பிரமசீலனை வருத்தாமற் கொணர்கவென்றேவினன். அத்தூதர் உடனே மிக விரைந்துசென்று பாடலிவனத்தில், சிவகர தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து சந்தியாவந்தனம் முதலிய நித்திய கர்மங்களையும், ஔபாசன முதலிய அக்கினி கருமங்களையும் முடித்துப் பின் விதிப்படி யாவரண பூசையோடு சிவபூசைசெய்து முடிவில் வாயசபலி, சுவானபலியிடுதற்காகக் கையிலன்னமுந் தண்ணீருங்கொண்டு வெளியே வந்தவப் பிராமணனைக் காலோடு கால்தட்டிக் கீழே விழும்படிசெய்து, அதுகாரணமாக வவ்வுயிரைப் பூதசரீரத்திலடைத்து இமைப்பதற்குமுன் யமபுரி சேர்ந்தார்கள். புண்ணியந் திரண்டா லன்னமேனியும், சிவகாருண்ணியமும், தயையும், வாய்மையும், சாந்தமும், திருநீற்றுச் செல்வமும், கனவிலுங் கண்ணுதற் பிரானையன்றிப் பிறரைக் கருதாத திண்மை நிறைந்த வுண்மையுமுடைய பிரமசீலனென்னு மவ்வந்தணனிறந்தானென்பதைத் தெரிந்த சுற்றத்தாரெல்லாம் நிரம்ப மனங்கலங்கி மிகத் துயருற்றுச் சமானமற்ற விப்பெரியோரை யினிக் காண்ப தெங்ஙனமென நினைந்து சோகமுற்றனர். இவர் செய விதுவாக.

இயமபுரிக்குச் சென்ற தூதர் பிரமசீலரைக் காலன்முன் கொண்டு நிறுத்தினர். அவன் கண்டு தான்சொன்ன பிரமசீலன் வேறாக விருக்க விப்பெரியோரைக் கொண்டுவந்து விட்டார்களேயென்று நடுங்கி முன்னொரு சிவபக்தரால் தான்பட்ட பாட்டையும் நினைந்து பயந்து மிகுந்த கோபத்தோடே யெழுந்து எதிர்நின்ற தூதரை இருகன்னத்திலு மிடித்துக் கோபித்தனன். அதைப் பார்த்திருந்த பிரமசீலர் "ஐயா தருமரே! யான் வெகுகாலமாய்த் தங்களைக் காண வேண்டுமெனகிற விருப்புடையனா யிருந்தமையா லின்றைக்குப் பாடலீபுர நாதன் றிருவருளாற் காணப்பெற்றேன்" என்று கூறினர். அவ்வுரைகேட்ட தருமதேவன் மிக மகிழ்ந்து அவரைப் பூசித்துத் தன்னருகிலிருத்தி "உம்மைக் காணப்பெற்றமையாற் பாடலேசனைத் தரிசித்தவனாயினேன்" என்று பல வினியமொழி கூறிப் பின் "நீர் திருப்பாதிரிப் புலியூருக்குச் சென்று சித்தேசனென்னுந் திருநாமங்கொண்ட சிவபெருமானைத் தரிசித்துக்கொண்டு [illegible] நோயற்றார்க் கன்னதானஞ்செய்து வாழுமின்; யாமு மிங்குப் பூதவுடலோடு வரவுஞ் செல்லவும் வேண்டும் வரங்களைத் தருகின்றேம்" என்று கூறினன். அதைக்கேட்ட வந்தணர் "ஐயா தென்றிசைக் கதிபரே! இந்த வுலகத்தையு மிங்குள்ள நரகமென்னு மிடத்தையும் பார்க்கவேண்டும்" என்று சொல்லினர். உடனே மறலித்தேவன் தூதரை யழைத்து "இப்பெரியவருக்கு நொடிப்பொழுதிற்கு ளிவ்வுலகத்தையுஞ் சிவநிந்தை செய்தாருறையும் நரகத்தையுங் காட்டி வருக" என்றனன். அத்தூத ரப்படியே பிரமசீலருக்கு நகர முற்றுங் காண்பித்துப் பின் நரகத்தையுங் காண்பித்தனர். பிரமசீலர் நரகத்திருந்து வருந்துவோரைப் பார்த்து மனமிளகிப் பாவத்தின் கொடுமையென்னே யிருந்தவாறென்று வருந்திச் சிவத்தியானஞ்செய்து நின்றனர். அவ்வாறு சிவத்தியானஞ்செய்து நின்ற பிரமசீலர், அந்நரகத்திருந்து வருந்துவோர் பூதலத்தியற்றிய பாவமகலுமாறுகருதி, அவர் செவிப்புலனும்படி சிவநாம மோதினர்.

அதைக்கேட்ட நரகர், வேதனையொழியப் பெற்றோராய், எரியாலெரிந்த மரம் மேகம் பெய்த மழையாற் குளிர்ந்து தழைப்பதுபோல் செழிப்படைந்து பிரமசிலையைப் பார்த்துக் கைகுவித்து, அன்புமிகப் பெற்றோராய், "புராரியனைய வேதியரே! உமது கடாக்ஷ வீக்ஷண்யத்தால், இந்த நரகத்துன்ப மகலப்பெற்ற யாங்கள், பூதலத்திற் பூதகாரிய உடலோடு கூடியிருந்து, மனம், வாக்கு, காய மூன்றினாலுஞ் செய்த சிவாபராதத்திற்காக யுகங்களநந்த மாகியும் நீங்காத வித்துன்பத்தை யடைந்தோம். ஜீவகாருண்ணியமுள்ள தாங்கள் எங்கள்பாவிரங்கிக் காக்ஷிகொடுத்தருளினமையா லிப்பொழுது துன்ப மகலப்பெற்றோம்; ஆதலால் ஏழையாகிய அடியேங்களை மூற்றுங் காக்கும் கடன் உங்களதே" என்று கூறினர். அவ்வாறு கூறிய நரகவாசிகளைப்பார்த்து "அஞ்சாதீர்கள்" என்று கையமைத்தனர். அதைக்கண்ட யமபடர்கள் "இந்நரகத்தில் காய்ச்சிய தைலத்திலும், கற்செக்கிலும், தீயிலும், இன்னோரன்ன பல வகைப்பட்ட துன்புந்தரும் பொருள்களாலும் பாவம்செய்தவர் வருத்தப்படுவர்; இதைப் புண்ணியம் புரிந்தோர் பார்ப்பது முறையன்று; அன்றியும், தருமதேவர், தூரவிருந்து காண்பித்து விகாடிகோரத்திற்குள் ளழைத்து வரும்படியுங் கூறினர்; அன்றியு முமதுதேகத்தை சுற்றத்தாரனலிலிட் டெரித்துவிடின் என்செய்வீர்? ஆதலாற் றாமதியாது வருக" வென அழைத்தனர். அப்படி யழைத்த படர்களைப் பார்த் ததட்டிக் கோபித்துப் பின் சொல்கின்றார்.

சம்போ! சங்கரா! சதாசிவா! உத்தாரேசா! சந்திரசேகரா! வேதப்பிரதி பாத்தியா! நாதா! நம்பா! எமபிரானே! முக்கண்ணு! நாரணிபாகா! சூலி! பாடலேசா! கடிலதீரத்து வாழ்வே!" என்று வேதாகமங்களிற் சொல்லிய சிவநாமங்களையெல்லாம், பாடலேசனது திருவடியிற் பொருத்திய மனத்தோடு ஓதினர். அந்நாமமாகிய மகா மந்திரங்களைக்கேட்ட நரகவாசிகளி லொருவரொழிய மற்றை

யர் எல்லாரும், எரியிலிட்டெரிக்கு மெண்ணெய்க் கொப்பரையிலிருந்து கிளம்பித் திவ்யதேகத்தை யடைந்து, சிவகணங்களாகித், தேவ விமானமேறி, முன் பன்றிக்குட்டிகளுக்குத் தாயாகிப் பாலூட்டிக் காப்பாற்றிய பிரமசிவனே யின்று நம்மைக் காப்பாற்றுவதற் கிவ்வுருவங் கொண்டுவந்தனரென்று போற்றிச் சிவலோகஞ் சென்றனர்.

பிரமசீலர், எரி யெண்ணெயிற் கிடக்கும் ஐவரும் என்னபாவஞ் செய்தனரோவென்று வருந்தி, மகா மந்திரமாகிய சிவநாமங்களைச் சொல்லியும் துன்பமொழியா திருக்கின்றாரென்று கருதினவராய், சித்திரகுப்தனும், யமதருமனு மிருக்குமிடத்தை யடைந்தனர். அப்பொழுது யமதூதர்கள், "இப்பிரமசீலர், நரகத்திருந்து வருந்திய பாவிகளில் ஐவரொழிய மற்றெல்லாருந் தேவர்களாகிச் சிவலோகம் போகச்செய்தனர்; அன்றியும், வெகுகாலமாய் நரகத்தில் எண்ணெய்க் கொப்பரையிலிருந்து வருந்தும் ஐவரையுஞ் சிவலோகமனுப்புங் கருத்தோ டிங்குவந்துள்ளார்" என்று சொல்லக்கேட்ட தருமபுத்திரன் மனமகிழ்ந்து சொல்லுகின்றான்.

"ஐயா! பிரமசீலரே, என் முன்னோர்களு மிவவைவர் நரகத்திற்கு வந்ததை யறியார்கள்; இவர்களையுங் காப்பாற்ற நினைப்பீரேல், விரைவிற் பூலோக கைலாசமாகிய பாடலிவனத்தை யடைந்து, நாளைக் குமது தேகத்தோ டிங்குவாரும்; அதற்கு வேண்டிய வரங்களை நான் கொடுக்கின்றேன்; பெற்றுக்கொண்டு செல்லும்" என, அவ்வாறே, வேண்டும் வரங்களைப்பெற்றுப் பாடலிவனத்திலுற்ற தன் தேகத்தைச் சார்ந்து, சுற்றத்தாரெல்லாம் நிரம்பச் சந்தோஷிக்க எழுந்து, சிவகரதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து உத்தரேசனைத் தரிசித்து, மிக்க இன்புற்றவராய், தனது சுற்றத்தார்க்குத் தான் இயமபுரிக்குச் சென்றதும், தருமன் படர்களைக் கோபித்ததும், தனக்கு ஸ்நேகமானதும், நரகலோகத்தைக் கண்ணுற்றதும், அங்கு வருந்துவோர்க்குப் பரகதிசித்திக்கச் சிவநாம ஜபஞ்செய்ததும், சிவ

கணங்களாகி நரகவாசிகள் சிவலோகஞ் சென்றதும், இன்னமைவர் அங்கிருந்து வருந்துவதும், தான் தருமதேவனால் நினைத்தபொழுதெல்லாந் தேகத்தோடங்குச் செல்லவுமீளவும் வரம்பெற்று வந்ததும் கூறியிருந்தனர்.

பின்னாள் பிரமசீலர் காலையிலெழுந்து சிவகரதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து சந்தியாவந்தனம் முதலிய நித்தியகருமங்களை முடித்துக்கொண்டு, ஆலயத்திற் சென்று, அம்மையப்பராகிய பாடலேசனையும் பிரகந்நாயகியையும் தரிசித்து, சித்திபுத்தி யென்கிற சக்திசமேதராகிய வலம்புரி விநாயகரைத் தரிசித்து, வையகமெவறிந்தவைவே லொருபெருங் குமாரக்கடவுளைப் பணிந்து, அருள்பெற்று, இயமலோகத்தைச்சார்ந்து, தருமனை யுடைந்தனர். அத்தருமன் மிக மகிழ்ந்து அவரோடுசென்று, நரகத்தில் எண்ணெய்க்கொப்பரையில் வருந்துகின்ற ஐவர்முன் நின்றனன். அப்பொழுது பிரமசீலர், கேட்டபொழுதே யெவ்வகைப்பட்ட பாவங்களையும் நீக்கும் சிவமந்திரத்தைப் பலமுறை நவின்றும், கேளாராகி யிவர்வருந்துங் "காரணம் யாதோ" வென்று தருமனை வினவ, அவனும், இவவநிச்சயத்தை யானறிகிலேன்; பிரமதேவனிடஞ் சென்று வினவுவாம் வருக" என்றழைக்க, இருவரும் பிரமன்பாற் சென்று வணங்கி நின்றனர். பிரமதேவன், தருமனால் பிரமசீலரைத் தெரிந்து, "பாடலிவனத்தில் வசிக்குமும்மைக் காணப்பெற்றமையால், நிரம்பப்பாக்கியம் பெற்றவனானேன்" என்று புகழ்ந்து பின் "நரகத்திருந்து வருந்துமைவரின் வரலாறியானுமறியேன்; அது திருக்கைலாஸபதியாகிய சிவபெருமானிடத்து விண்ணப்பித் தறியத்தக்கது; நானுமுடன் வருகிறேன்" என்றுகூற மூவருமாகத் திருக்கைலைக்குச் சென்றனர்.

அங்குத் திருவணுக்கன் திருவாயிலில் திருக்காவல் பூண்டருளும் திருநந்திதேவர் திருவடியில் வணங்கி நிற்க, அவ்வபரசம்புவும் பிரமனைப்பார்த்து, இவர் யாரென்று பிரமசீலரை வினவினர். பிர

மதேவனு மவர் வரலாறு முற்றுங்கூறிக் கைலைக்குவந்த செய்தியை யும் கூறினர். அதைக்கேட்ட சைலாதியும், பிரமசீலரைப்பார்த்துப் 'பாடலிவனத்தில் வசித்துப் பாடலேசனைத் தரிசிக்கப்பெற்ற வும் மைப்போற் புண்ணியபுருஷர்கள் வேறு யாவருளர்? நீர் எம்போ ல்வாரால் புகழப்பட்டவரே; நாமு மும்மைக்காணப் பெற்றமைக்கு நிரம்ப மகிழ்ந்தோம்.'' என்று பிரியவசனஞ் சொல்லி யவ வைவ ரின் பாவக்கொடுமைகளைக் கூறுகின்றார்:—

''பாடலிவனத்தில் வசிக்கின்ற புண்ணியர்களாகியஅந்தணரை இகழ்ந்தானொருவன்; மற்றொருவன் அந்தணர்க்கு வருமூதியத்தைக் கெடுத்தான்; மற்றொருவன் அவர் பொருள்களை யபகரித்தான்; மற்றொருவன் ஆநந்தத்தாண்டவம் புரியும் ஸர்வேசனது பொருளை யபகரித்தான்; மற்றொருவன் அத்தேவாதிதேவனை யிகழ்ந்தான்; ஆதலின் இவ்வைவரும் அநந்தகற்பங்களாக நரகத்திலிருந்து வருந்து கின்றனர். இதைத்தீர்க்க வெவராலுமுடியாது'' என்று செ... ... கொண்டிருக்குந் தருணத்தில் இடபவாகனரூடராய், ஒரு பாலுமா தேவியை யுடையராய், இருசார் விஷ்ணுமூர்த்தியும் மற்றொருசா. தேவர்களும், முன்னும் பின்னுஞ் சிவகணங்களும் பூதகணங்களும் புடைசூழ்ந் தரகர முழக்கஞ்செய்யச் சிவபெருமான் அவவிடத் தெழுந்தருளினர்.

அப்பொழுது சச்சிதாநந்தத் தனிப்பிழம்பாகிய சிவபெருமா னைப்பிரமன் றருமன் பிரமசீலர் நந்திதேவர் முதலினர் வணங்கச் சிவபெருமான் அபரசம்புவின்பாற் கடைக்கணித்துப் பிரமசீலரை யாரென்று வினவ அவர், ''இவர் பாடலி வனமென்கிற புலிசைநக ரின், முன்னைத் தவத்தாற்பிறந்து பாடலீநாதனைத் தரிசிக்கும் புண் ணியம் நிரம்பியவந்தணர். இவரை மறலியின் றூதர்கள் பேர்மாறாட் டத்தால் இயமபுரிக்குக் கொணர்ந்தவிட்டனர். இவரைக்கண்ட நடு வரவரைக் கோபிக்க வப்பொழு திவ்வந்தணர், யமலோகத்திலுள்ள

நரகத்தைப்பார்க்க விருப்பமிருக்கின்றதென்று வேண்ட, அப்பொழுது காலன், படர்களைக்கொண்டு அவவிட முற்றையுங் காட்டி விரைவிற் றொண்டுவரும்படி யுத்தரவுசெய்ய வவ்வண்ணமே தூதர்களோடு சென்று நரகத்தைநோக்க, அதிற்கிடந்து வருந்துவோரைக் கண்டு மிக விரங்கிப் பாடலிவனநாதன் றிருநாமத்தைச் செபித்தனர். அதைக் கேட்ட நரகரில், ஐவரொழிய மற்றையரெல்லாம் வேதனையொழிந்து, சிவகணர்களாகி, விமானமேறிச் சென்றனர். ஐவர்மட்டில் இந்நாமத்தைச் செவியேற்று வருந்துவதற்குக் காரணந் தெரியவில்லையென்று மனக்கவலையுறக் கூற்றுவன், 'நீர் பாடலிவனஞ்சென்று மீளின், பின்னர் விசாரிக்கலா' மென்று, ஈண்டு வருதற்குரிய வரந்தந்து விடுத்தனன். அவ்வாறே சென்று, தேவாதிதேவனைத் தரிசித்து மீட்டு மிங்குவந்து, சண்டன் பிரமன் முதலாயினரோ டிங்குத் தரிசனத்திற்கு வந்துள்ளனர்" என்று விண்ணப்பித்தனர்.

அப்பொழுது, உலகநாயகராகிய வெங்கள் கண்ணுதற் கடவுள் புன்முறுவலுடையராய், "நாம் அனந்த சத்திகளோடு, கைலையிற் சிறந்த சிறப்புடன் வீற்றிருக்கும் பாடலிவனத்தில் நம்மைத் தரிசிக்குங் கடமைபூண்ட நீ நமதடியாரின் மிக்காயாதலின் நின்விருப்பத்தை முடிக்குமாறு உரைக்கின்றோம். நீ பாடலிவனத்திற்குச்சென்று அங்கு நம்மாலுண்டுபண்ணப்பட்ட சிவகரதீர்த்தத்தை யொரு கடத்திலெடுத்து அந்தக் கடத்தில் நம்மையும் நமதருட்சத்தியாகிய வுமாதேவியையும் ஆவாஹித்துப் பூசித்து, அந்ததீர்த்தத்தைக் கொண்டுவந்து புரோக்ஷித்தால் அவவைவர் பாபமு நரகவேதனையுமொழிந்து நமதுலகடைவர் எனத்திருவாய் மலர்ந்து பின் நீயிவ்விதங் கருணையோ டிங்கிலிருந்து பின்னுள் நமது திருவடியை யடைக" வெனக் கட்டளையிட் டெழுந்தருளினர். உடனே பிரம்சிலர் திருநந்திதேவர், பிரமன், யமன், முதலிய தேவர்களிடத்து விடை

பெற்றுத் திருப்பாதிரிப்புலியூரையடைந்து சிவகரதீர்த்தத்தைக் கீடத்திற்பூரித்து, வேதியர்களோடு ஸ்தாபநம்பண்ணி யுருத்திரபாங் கிரபடனஞ்செய்து சிவம்சத்தியாகப் பாவித்துப் பாடலீவனநாதனை வழிபட்டு, அந்தத்தீர்த்தத்தை யெடுத்துக்கொண்டுஇயமபுரிக்குவந்து, எண்ணெய்க்கொப்பரையில் எரிந்து வெகுகாலமாய்வருந்திய வைவர்மேற் புரோக்ஷித்தனர். அவர்கள் பாவமொழியப்பெற்றுச் சிவகணங்களாகி, வானின்று, பரசிவமாகப் பாவித்துப் பிரமசீலரைத் தோத்திரம் பண்ணிச் சிவலோகஞ்சென்றனர். அப்பொழுது பரசிவகிருபையால் ஆகாசத்தில் "பிரமசீலரே! சதாசிவ மூர்த்தியா லுண்டு பண்ணிய சிவகரதீர்த்தமானது பார்வதி பரமேசுர வடிவமென்று நினைப்பாயாக; அதில் ஸ்நாநஞ்செய்து அநேக முனிவரர் முத்தியடைந்தனர்" என்று அசரீரி யெழுந்தது. அதைக்கேட்டவரெல்லாம் நிரம்பமகிழ்ச்சிகூர்ந்து, பாடலேசுவரனைத் தொழுது வணங்கினராய்த் திரும்பினர். தருமனிடத்தில் விடைபெற்றுக்கொண்டு பிரமசீலர் திருப்பாதிரிப்புலியூரையடைந்து, காலந்தோறுஞ் சிவகர தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து பாடலவனேசனைத் தொழுது வாழ்ந்திருந்தனர். சதாசிவமூர்த்தி கிருபையினுல் உண்டுபண்ணின காஜ தீர்த்தத்திற் கங்கையு மக்கினிதேவனும் ஸ்நானஞ்செய்து தங்கள் பரிபவமகலப் பெற்றாரானு லத்தீர்த்தத்தின் மேன்மையை யென்னென் றெடுத்துரைக்க வல்லேன் என்று பிரமசன்மனுளங் கொளத் தூர்ச்சடியாகிய ஆசிரியன் சொல்லியவண்ணஞ் சவுனகாதி முனிவர்களுக்குச் சூதமுனிவர் சொல்லினர்.

---

## பாடலேசர்சித்தராய்விளையாடியசருக்கம்.

இங்ஙனம்பிரமசீலன்மாக்கதையியம்புதூர்ச்சடியிணைப்பத
பங்கயம்பிரமசன் மறுந்தொழுதுபகர்வணக்கரசமேன்மையுங்
கங்கையென்றுரைசெய்முத்திதீர்த்தமொடுவன்னியுங்கரசமலனிமே
தங்கடவிளையகன்றவாறுமருளென்னவை யனவைசாற்றுவான். (க)

வேதமாதியவொருங்குணர்ந்தவுளவித்தகப்பிரமசன்மகேள்
பூதமாதியசகத்தனைத்துநிலைசெய்துபின்றுடவைபோக்கிய
நாதனேநறைசெய்பாதிரிப்புலிசைடென்னமன்னுகடைஞாழலி
னேதொணுதவெழின்மன்னுசித்தவடிவாகியாடல்செய்துவந்தனன்.

நீடடாவட்டவெயதென்னுமத்தருணவருணசூரியரெனச்சுடர்
விட்டிலங்குதிருமேனிநெறறிகரமார்புதாட்டுணைவிளங்கிய
பட்டநீற்றிலகுபுண்டரந்திகழவக்கடாமணிபரித்தருட்
சிட்டராயொருமணிப்பிரம்புகரபங்கயத்தெழில்சிறக்கவே. (ஙூ)

கோடிமன்மதன்வனப்பைபவென்றதிருமேனிவாய்ந்தெழில்செய்குஞ்
னேடவிழ்ந்தகரவீரம்வம்பலர்செய்தும்பையம்புயமிணைத்தனர் [சியி
பாடகம்பொருவுபன்னிறக்கருவிரித்திரட்பரவுவாலுகத்
தோடுறற்றிரளும்வற்றறற்றிரளையொத்தபல்லுரியுரத்ததே. (ச)

உலகமூன்றையுமொருங்குவென்றதமர்நீதியார்துலையுணர்த்திய
விலகிவில்லுமிழுமாரணத்துருவமானகோவணம்விளங்கவே
யலகில்பேரொலியராத்திரட்கடிதடத்துகாண்மிசையசைத்தன்
நிலகுபுன்னகையினெவ்வுயிர்த்திரளுமவசமாயடியிறைஞ்சுமால். (ரு)

சித்தனைத்துமொருவைப்பெனத்திகழ்நீற்றெழிற்சிறியபொக்கணம்
வைத்ததோளின்மிசையோகபட்டமொடுபூணுநூலிடைதுயங்கவே
முத்தமொத்தொளிர்செய்படிகமாலையெழிலுதரபந்தனமுயங்கவே
கைத்தலந்திகழுமாத்திரைக்கோலொடுகேறங்குநூபுரமலம்பவே. (சு)

வாலசூரியரெதிர்ந்தெழுந்தநிலைமன்னுகுண்டலம்வயங்கவே
பாலலோசனமறைத்துமவ்வொளிபடர்ந்தடாண்மையெனநெற்றியிற்
கோலமாதிலகமின்னமேனிமிசைமுத்தெனக்குறியவேர்வெழக்
காலகாலனெனவீரகண்டையணிகலின்கலினெனவரற்றிட. (எ)

ஆரணங்களெனவாகமங்களெனவவையிரண்டுமடிவாகிய
பூரணந்திகழுமேனியாவியுமொருங்குதாங்குவதுபொற்பவே
காரணங்கருதுசத்திபீடமிசைநிலவியேர்தியகலப்பிறு
ஞாணன்றருவொணுதபாதுகையினண்ணிபாடல்புரிகின்றனர். (அ)

கண்ணிலார்செவிடருமைநாணிலிகள்பங்குகாலிலிகளாகிய
வெண்ணிலார்களும்வனப்புவாய்ப்பவவைபாவுமெய்தியுறுமாக்கவே
வண்ணவாய்மலர்வர்பூதியீவரொளிர்வேத்திரத்தினைமலர்க்கையா
னண்ணவேதடவிநகைபுரிந்திடுவர்நாளுமின்னபலபுரிகுவார். (கூ)

வடக்குமேற்கொடுகுணக்குநாற்றிசையுமாறிமாறிவருகின்றனர்
குடக்குநீண்மலைகுணக்கதாவுதிவானெழுந்தலைகொழிக்கவே
படக்கும்வாயுவினைமனனியூர்வர்மிதநடனகீதமுநவிற்றுவா
ரடக்குவார்மலையனைத்துமங்கையினெல்லியங்கனிபதாகவே. (க0)

வேறு.

மன்னுமாண்மைதீர்ந்தலியெனுமுருவமாய்வயங்கிப்
பின்னும்பெண்ணுருவாணெனத்திரிந்துயிர்பிறங்கத்
துன்னுமாமகத்தருணராய்ச்சொற்பயின்றிருக்க
வன்னகாளையாவிருத்தராய்த்தண்டின்மீதசைய. (கக)

குதிரையாலையுங்கோட்டொடுமுலாவிடக்கொடிஞ்சி
யெதிருமாவிரதங்களுஞ்சலத்தெதிர்க்தேற
வதிருமாக்குரலானைகளாரணமுழக்க
முதிருமன்பினிற்கிள்ளைகேட்டானந்தமூழ்க. (கஉ)

இந்தவையகத்திரப்பவர்செல்வரொன்றிலரா
யுந்தியன்புறவாடகப்பூமியீண்டுய்த்துக
கந்தவார்குழற்கன்னியர்காளையர்புணரின்
வந்திபாவருமறியொனுவிஞ்சைகள்வருத்தும். (கங)

கரியகல்வினைச்செம்பினைப்பசும்பொனுக்கூட்டி
யுரியதீங்கனியெட்டியிலிலவினிலுதிக்கும்
பெரியவானையைக்குடத்தினிலடக்கிமுன்பெதிர்ந்த
கரியவெற்பினைவழிகண்டாங்கப்புறங்கலந்தும். (கச)

இருதுபேதங்களின்றியேபாதவமெவையுங்
கருதுகன்னிகைபோதொடுகாய்கனிகாட்டிப்
பருதிமண்டலமதியமண்டலத்தினும்பரவ
விரிவுசெய்குவர்விரிக்கினவ்விசித்திரமனந்தம். (கரு)

மேடமேமுதற்கன்னிமாதாந்தமும்விரும்பி
யாடல்செய்தனர்யோகிகள்சித்தர்களமரர்
பாடலந்தருவனத்தினிற்படர்ந்தவர்யாரு
காடகம்புரிபதாம்புயஞ்சேர்ந்துநன்குற்றார். (கசு)

யோகராச்சிரமங்களுஞ்சித்தர்வாழுழிய
நாகநாட்டினும்பாதலலோகத்துநயந்து
காகநேத்திரம்போற்சுழன்றிவர்வருங்காலை
மோகமாக்கண்டுதுதிப்பர்களெண்ணிலர்முனிவர். (கஎ)

புன்னைபொன்னவிழ்பாடலநாயகன்பொருவின
மன்னுசித்தராயூரயிரங்கலையொடும்வயங்கி
யின்னதன்மையாலாடல்செய்காலையினெதிர்ந்தார்
மன்னுமாணிக்கவாசகயோகியாம்வரதர். (கஅ)

வாதவூரராமாணிக்கவாசகமறையோர்
நீதிமன்னரிடபாண்டியன்மதுரையைசேர்ந்து
சோதின்முந்திரிவருக்கத்திற்பெரியராய்க்குலவி
நாதனாலவாய்ச்சுந்தரேசரனடிநயந்து. (கக)

சொன்னபங்கயத்தடத்திறுமூழ்கிநாடோறு
மன்னலாகியவங்கயற்கண்ணிமீனாட்சி
பொன்னடித்தலத்தாமரைப்போதுகள்வணங்கிப்
பன்னுமன்பினிற்பணிந்தருட்படிவமாய்வந்தார். (உ௦)

மன்னனேவலினளவிலாநிதிக்கணம்வாரி
யின்னநீர்ப்பரிக்கணங்களையீட்டிவாரனெழுந்தாங்
கன்னம்வைகியதிருப்பெருந்துறைவரைப்பண்மி
யென்னையாளுடைக்குருந்தமூலேசனையிறைஞ்சி. (உக)

ஞானபோதமும்பக்குவபாகத்தினயந்து
மோனமுத்தராமடியரோடினிதறமுயன்று
தேனுலாந்தொடைக்குருபரனேவலிற்சிறந்து
வானமீக்கெழுமண்டபங்கோபுரம்வகுத்தும். (உஉ)

ஆண்டநாயகனுத்தரகோசமங்கையினும்
வேண்டும்வண்ணமேபுரிந்தருட்டிருவருள்விளைந்து
தாண்டவம்புரிசேவடியிறைஞ்சவான்சார்ந்து
காண்டகுந்தலம்யாவையுமடைவினிற்கலந்து. (உங)

அங்கங்குள்ளசீரடியவரட்டமங்கலத்தோ
டெங்குமுன்பெதிர்கிறைஞ்சவந்தடைந்திருந்தடமும்
பொங்குமானதிவருக்கமும்சூழ்கிமுன்போந்து
கங்கைவேணியருமைப்பதாம்புயங்களைக்கண்டு, (௨௪)

அஞ்செட்டங்கமும்புணர்தாவகக்கணிந்திறைஞ்சிப்
புஞ்சச்செந்தமிழ்மாலையாற்புணர்தரப்போற்றிக்
கஞ்சச்சேவடிவருந்தவேபன்னகர்கடந்து
நெஞ்சக்கோயில்கொணிருத்தனார்சிதம்பரநேர்ந்து. (௨௫)

எண்ணில்கோபுரமேருவைநிகர்ப்பப்பொற்றெயில்கள்
கண்ணகன்றபல்சக்கரவாளமாய்க்கவின
விண்ணெலாங்குழீஇயிருந்தெனமாடங்கள்விளங்கப்
புண்ணியம்புணரிருடிகடேவர்கள்போற்ற: (௨௬)

ஆரணாகமவெள்ளியருவகன்கடைமறுகிற்
றோரணந்தொடைபூரணகும்பமுந்துலங்கக்
காரணங்களுங்கடந்தபேரானந்தங்கலந்து
வாரிணங்குசெப்புமைவிழிகுளிர்தரமலர்ந்து. (௨௭)

இருவராகியபெருந்தவர்கண்செவிக்கினிய
பொருவில்மாலயனிரணியவன்மனும்போற்றக்
கருவிநல்லியநீதுந்துபியாவையுங்கறங்கப்
பொருவிலாடலிற்பல்லுயிர்க்குழுக்களும்புகர. (௨௮)

பருமணிக்குழைப்பவுதிகவிராட்டிறைபதுமத்
தருவமாமுளப்பொன்னவையோங்கலிலோங்க
மருவுபுண்டரீகத்திடைமன்னியதகரப்
பெருகுமாடலில்விளைதருமானந்தப்பெருக்கில். (௨௯)

உள்ளமின்புறவைம்புலமுக்குணமொருங்கத்
தெள்ளும்வாய்மையைப்போதமும்போதத்திற்றெளிந்த
கள்ளமும்மலக்கட்டகல்காட்சியுங்கருணை
வெள்ளநின்றவந்நிலையமாம்படிகண்டுவிரும்பி. (ௌ0)

பாசபாசமாம்பாசத்திற்றீர்தருபரம
தேசுதேசுலாஞ்சிவத்தினிலொன்றென்றிற்சிறந்த
லேசமாகியவொன்றிரண்டற்றதோர்நிலையைப்
பூசுரப்பிரான்போற்றினர்வாதவூர்ப்புனிதர். (ௌக)

அருவமாயருவுருவமாயுருவுருவகன்ற
வுருவமாகியபரவெளிபெரும்பற்றப்புலியூர்த்
திருவருட்டிறமருவியாங்கிருந்துதீம்புனலூர்
மருவுமுத்தரபுலிசைமாநகர்தொழவந்தார். (ௌஉ)

சந்தனத்தருமங்களுமகில்களுஞ்சரளச்
சுந்தரத்தருமங்களுந்தொலைவில்பல்வளனுஞ்
சிந்துரத்துருக்கேசரிவயப்புலித்திரளும்
கொந்துகொந்ததாய்க்கொடிலமாநதிகொணர்தருமால். (ௌௌ)

வாரிமூத்தமுங்கயமருப்பபற்புதமணியும்
வீரிமிக்கெழுங்கொடிலமாநதியள்ளிவந்து
வாரிமிக்கபல்கலன்களுமேற்றுதன்மான
வேரிமிக்கநீர்க்காலெனவெதிர்தருமேல்வை. (ௌச)

தென்னகன்கரையிருந்தனர்யாவருஞ்சிறந்த
மன்னுமுத்திரதீரத்தின்வகைகுறித்தார்க்குத்
தன்னையொப்பருங்கலங்களுந்தெப்பமுஞ்சாரா
வன்னபேருடற்கும்பத்தினணைத்தவுமணையா. (ௌரு)

மூன்றுவைகலுமின்னணமக்கரைமுயங்கி
நான்றசென்னியர்வாடியவுளத்தராய்நவைதீர்த்
தேன்றநாதனைவாதவூரடிகளுற்றிருப்ப
வான்றவழ்ந்தபாதுகையினிற்சிததரும்வருவார். (௩௬)

முனிவர்சித்தர்களகடவுளர்மூத்தமூதறிவோர்
கனியின்வாய்ந்தசொற்கன்னியர்காளையர்காதற்
றனையர்செல்வர்கள்குழாங்குழாமாகப்பின்சாரப்
புனையும்வேடத்தர்சிததருகதிக்கரைப்போந்தார். (௩௭)

போந்தசித்தருமெழுதருந்திருவடிபுனைந்து
நீந்தரும்புனன்மிசைநடந்தக்கரைநிலவிச்
சார்ந்துபின்னருமிக்கரையேகுமத்தலைமை
வாய்ந்தயோகரைமாணிக்கவாசகாமருவி. (௩௮)

உத்தரத்திருப்புலிசைமாநகர்தொழவுற்றேன்
றத்துவெண்புனல்சாகரத்தோடெதிர்தயங்கி
முத்தம்வாரியெற்றலைகளுமலையெனமுயங்கச்
சித்தசாமியிவவாறிடைதடுத்ததென்செய்வேன். (௩௯)

யோகமந்திரவலியினாற்பெரியராமொருநீ
ரேகுவிக்கவும்வல்லரென்றெண்ணுமென்னுள்ள
மாகிமுப்பொழுதணவிலாதயர்தருங்காய
மாகமுற்றிடுபோடலேசுரனடிவணங்க. (௪0)

உயிரும்யாக்கையுமகிழ்விக்கும்வல்லபமுடையீர்
தயிரின்வெண்ணெய்போன்மறைந்தருளிறைவர்நீர்தர்மே
செயிரறுத்தெனையக்கரையேற்றுதிர்சேர்ந்தோ
ரயர்வருக்குமக்கரையேறவிட்டவராவீர். (௪௧)

இன்னபற்பலமொழிகளாலிறையவர்செவியிற்
சொன்னமாற்றங்களுளுங்கொண்டுசோதிமண்டபத்தின்
மன்னுமாணிக்கவாசகவாவெனவழைத்து
முன்னரேகப்பின்னேருதலஞ்சினர்முனிவர். (சஉ)

அஞ்சிவெள்ளத்தினப்புறநின்றதுபார்த்து
நஞ்சயின்றருள்சித்தருசுயந்தவுத்தரத்தாற்
பஞ்சிரிப்பொடுமருளுவார்பயந்தனிர்போலும்
விஞ்சையாம்புரிவிண்ணத்தைநோக்குதிர்விரைந்து. (சங)

பத்திமேம்படுபத்தரிலொருவர்முன்பரவிச்
சொற்றவாசகத்துதிகளிற்றென்கரைத்தோன்றி
யுற்றகோயிலருரைத்தசொலுண்மையதாக்கி
நித்தநித்தலுமாலயத்துத்தரநிலவ. (சச)

கெடிலமாநதிபாடலேசுசுரனிகேதனத்தின்
வடதிசைக்கணேமன்னுவித்துமைக்கொடுபோதும்
புடவிதன்னிடைத்தாட்டுனேயூன்றியேபோந்து
கடவுளாலயங்கண்ணுறீஇவழிபடுமென்றார். (சரு)

சொன்னசொற்குறித்தீசரேயிவரெனத்துணிந்து
தன்னையொப்பருமாணிக்கவாசகர்சீரெனன்
றுன்னுமுள்ளத்தையுணர்ந்தனர்சித்தர்யாம்யோகி
யென்னையெண்குணத்திறையெனநினையலையென்றார். (சசா)

அட்டசித்தியும்புரிகுவோமாதலினுமக்கா
மிட்டம்யாவையுஞ்செய்குதுமெனவுரைத்திரைத்த
மட்டவார்புனல்வடதிசைமருவவேத்திரத்தாற்
றொட்டுநீக்கின்ரவவழியேயினதுனேநீர். (சஎ)

கரைகடந்துசெல்பிரளயக்கடும்புனல்கதித்த
விரைவினப்புலிமுனிவரன்பன்னகமேலோன்
மருவிவாழ்தருமாச்சிரமத்திடைமன்னக்
குரிசில்காவெனத்தாட்டுணைபணிந்தனர்குறுகி. (சஅ)

அன்னராமிருமுனிவரர்க்கபயமீந்தப்பான்
மன்னுதீம்புனல்வடதிசைமருவிடப்புரிந்து
முன்னமேகிப்பின்வரவருள்செய்தனர்முனியைப்
பன்னுசித்தர்பின்மாணிக்கவாசகர்படர்ந்தார். (சகூ)

வந்துபாடலநாயகன்கோயிலுண்மருவி
யைந்துமெட்டுமாமங்கமுற்றிறைஞ்சிபலைபுற்று
முந்தைவேதமுந்தென்றமிழ்மூலமுமுழக்கி
யெந்தையாரடிபரவியேயங்ஙனமிருந்தார். (ரு0)

இருந்தமாணிக்கவாசகயோகரையின்பம்
பொருந்துநற்கனிகந்தமூலாதிபோக்கியங்க
ளருந்துமன்னவிவ்வனத்தனவெனவுரைத்தையர்
விருந்துசெய்தனரயின்றிளைப்பொழிந்தனர்மேலோர். (ருக)

அன்றிராத்துயின்றுதயத்தினதிக்கரையணைந்து
குன்றவில்லியார்பூசனைக்குறைமுடித்தணையா
நின்றயோகரைச்சித்தரும்பிரிவிலாங்கியதத்
தொன்றவெம்பிரான்கோயில்புக்கிறைஞ்சிமுன்னுற்று. (ருஉ)

இக்குநான்கினுமாணிக்கவாசகச்செல்வர்
புக்குநோக்கினரன்னதுபொருந்தவேசித்த
ரொக்கநோக்கிநீர்குறித்தவாறென்னெனவுரைப்பார்
மிக்கபூந்தடஞ்சந்நிதிமருங்கொன்றுவேண்டும். (ருங

கெடிலமாநதிசேய்த்ததாய்க்கெழுமுவதன்றி
யுடையநாயகனலயத்துறையுநீர்க்கூப
மடைகொள்வாவியுமிலவெனில்வசதியின்றவற்றைத்
தடைபடாதிவணருளவேண்டுவதெனச்சாற்ற.	(ருச)

சைவமாதவத்தலைவநீவேண்டியதரும
முய்யயாவர்க்குமுறுதியாம்படித்ததுசெய்து
மையலற்றிவணுக்கெனக்கரத்தினல்வகுப்ப
வைதுபட்டதோர்தீர்த்தமுண்டாயதற்புதமாய்.	(ருரு)

பங்கயத்துணர்ச்செங்கழுநீர்க்கயல்பருமீன்
சங்கமிப்பிகள்சலஞ்சலங்கச்சபஞ்சார்ந்து
பொங்குமோகைசெய்தீர்த்தத்தையாவரும்போற்றக்
கங்கையாதிதீர்த்தங்களையழைத்ததிற்கலந்தார்.	(ருசு)

சித்தர்விஞ்சையீற்சிருட்டிசெய்தீர்த்தத்தைநோக்கி
முத்தரும்பியவிழியினர்புளகிதமுதிழ்த்துக்
கைத்தலங்களைச்சென்னிமேற்குவித்தினர்கருணை
நித்தர்யோகர்தாடொழுதின்பவாரியினேர்ந்தார்.	(ருஎ)

அன்னதன்மையர்யாரையுநோக்கினரயலே
மின்னுமாணிக்கவாசகயோகரைமதித்தே
யின்னம்வேண்டுவகேண்மின்களெளிதின்யாந்தருது
முன்னஞ்செய்தனகுறித்தனிர்மொழிமின்களென்றார்.	(ருஅ)

வீரதவூரருந்திருவுளமகிழ்ச்சியான்மலர்ந்து
பாதசேகரராகியபத்தர்தங்குழுவோ
டோதமார்த்தனவுரைத்தனருவப்புடனீங்குப்
பாதவங்களும்பின்மிருகாதியும்பாற்றி.	(ருகூ)

அங்கதங்களுங்கதம்புரிகூளிகளனைத்து
மங்கமங்களமாடமாளிகைவளவனப்பும்
பொங்குசித்திரத்தெற்றிகளாவணம்பொதுவி
லெங்கும்வைகியநகரமாய்த்தருதிரென்றிசைத்தார். (சுo)

அன்னதாகநீர்விழிபுதைத்திருமெனவருளி
முன்னம்வேத்திரத்தால்வரைந்தும்மெனமொழிந்து
பின்னர்நீற்றினைச்சிதறினர்பெருநகராக
மன்னுஞ்சங்கற்பஞ்செய்தனர்சித்தராமறையோர். (சுக)

இனிவிழித்துநோக்குதிரெனவிம்மெனவழித்தார்
பனிமதிக்கொழுந்துரிஞ்சியகோபுரப்பரப்புந்
தொனிமயங்கியவேழெயில்வீதியுஞ்சுரர்கண்
முனிவர்சூழ்ந்தியமுன்றிலுங்கண்களானமுகந்தார். (சுஉ)

கண்களெண்ணிலபடைப்பினுநான்முகன்காண
வெண்கொளாவெழிலிந்நகர்வனப்பினைவிரிக்கிற்
பண்கொள்பாவினுமடங்கிடாப்பாரதிசேடன்
விண்கொளுவலர்விளம்பினுமுடிவுறாதனவே. (சுங)

இன்னதாகியவிடைபுடைநடுநகர்வனப்பை
முன்னம்யாமுமுற்றறிந்தவாறுரைத்தனமுனிவ
ரன்னசித்தரைநோக்குழியற்புதவடிவாய்
மன்னுமூலலிங்கத்தினிற்கரந்தனர்மாதோ. (சுச)

தேவதுந்துமிமுழங்கினவிண்ணெலாஞ்சிறக்கப்
பூவலம்புபொன்மதுமழைசொரிந்தனபுவியோர்
யாவருந்திசைதிசைதொறுமிறைஞ்சினரிறைவர்
மூவருந்தவமுனிவருந்துதித்தனர்முறையால். (சுரு)

## வேறு.

மாலாயுயனுயரனுகிமகேசசதாசிவவடிவாய்க்
காலமூன்றுங்கடந்தசுத்தகாலநிலைபால்வருஞ்சுத்த
கோலவழிவாமீசுரமென்றுரைக்குமார்க்கங்கொடுநடத்துஞ்
சீலவடிவாஞ்சிவக்கொழுந்தேசிதநினக்கோரரிதாமே. (௬௬)

வஞ்சமலரவறிவிழந்துமயங்கித்திரிந்தபெற்றியதா
னெஞ்சமழியநேர்ந்தெழுநிமலவடிவாஞ்சுத்தநிலை
யுஞ்சினதீதாந்தமயமழியாவீட்டினடையவருள்
கஞ்சமலரும்பாடலமூலத்தின்வாழுங்கலாநிதியே. (௬௭)

போகமுத்திபுணர்ப்புருவம்பொருந்திப்பொருந்தாதளித்தாண்ட
யோகமுதலையோகியர்க்குமட்டாவட்டவுருவாகி
மாகமருவுபாடலமாவனத்திற்சித்தவடிவமுமா
மேகமொடியிற்சிருட்டிசெய்துமறைந்தாயென்னவதிசயமே. (௬௮)

அனுதியுயிரிற்கலந்தனைநீயனுதியுயிரின்மறைந்தனைநீ
யனுதியுயிரிற்கரந்திருந்துமவைகள்கரவாதளித்தனைநீ
யனுதியுயிர்ப்பாசம்பறியவனுதியாதித்தொடர்பினைத்தங்
கனுதியகலாதவையகற்றிடித்தாயஃதோரற்புதமே. (௬௯)

பூதம்பூதசாரமிகுபூதபரிணுமப்புணர்ப்பென் [ன்
றோதுமியோனிபபரப்பனைத்துமொன்றையொன்றுயொருகணத்தி
வேதித்தகற்றுஞ்சிதகியற்றும்விமலதிருப்பாதிரிப்புலியூர்
நாதவெல்லாம்வல்லசித்தநாங்கணினதாட்கடைக்கலமே. (௭௰)

இன்னபலவுந்துதித்திறைஞ்சுந்தேவர்முனிவர்க்கிரங்கியிறை
மன்னுங்கருணைநகையருளமகிழ்ந்தார்வாதவூரடிகள்
பின்னுஞ்சிலநாள்வைகியிருந்தகன்றூர்பெரும்பற்றப்புலியூர்க்
கண்ணசித்தாகதையுரைத்தாமப்பாற்கங்கைவரவுரைப்பாம். (௭௧)

பாடலேசர்சித்தராய்விளையாடிய சருக்கமுற்றிற்று.

ஆகச்செய்யுள் ௯௯௦.

---

# பாடலேசர் சித்தராய் விளையாடிய சருக்கம்.

படைத்தளித் தழிக்கவல்ல பரமன், திருப்பாதிரிப்புலியூரென்கிற புண்ணிய க்ஷேத்திரத்தில், ஆன்மாக்களுய்யவேண்டித தனது கருணையால் பதினாறுவயது நிரம்பிய பாலசூரியனைப்போன்ற திருமேனியும் நெற்றி மார்பு கரங்கள்முதலிய விடங்களில் தரித்த திரிபுண்டரமும் சிரம் கண்டம் செவி கரமிவ்விடங்களில் தரித்த உருத்திராக்ஷவடமும் திருக்கரத்தில் வேத்திரப்படையும் திருமுடியில் நறுமலர்மாலையும் வேதாகமங்களாகிய இரண்டு பாதுகை திருவடியிலும் வேதமாகிய கவுபீனம் இடையிலும் எல்லாச்சித்திகளும் தரும் விபூதிப்பையும யோகப்பட்டிகையும் திருத்தோளிலும் படிகமாலையும் உதரபந்தனமும் மாத்திரைககோலும் இரண்டிரவிகளென்ன விளங்கும் கர்னகுண்டலமும் பாலலோசனம் மறைத்த திலகமும் உடையவராய் காலகாலனெனக் கூவாநிற்கும் நூபுரமணிந்த திருவடியில் தரித்த பாதுகையோடு திருவீதியி லெழுந்தருளி திருவிளையாடல் புரிவாராயினர். கண்ணிலார் செவிடர் ஊமையர் மூடவர் குறளர் தீராநோயினர் இவர்கட்கு விபூதிதந்தும், பிரம்பினல் வருடியும், வாயான்மொழிந்தும், கண்முதலியன கொடுததும், நோய்முதலியன தீர்த்தும், மலடிகளுக்கு மகப்பேறும் விருத்தருக்கு இளமையும் குதிரைகட்குக் கொம்பும் கொடுத்தருளி பொன்னுலகு இரவிமண்டலமுதலிய விடங்களிலுலாவியும், சித்தர் யோகர் முதலியோர் ஆச்சிரமங்கட் கெழுந்தருளியும், ஆங்காங்குத் தம்மைக்கண்டு வழிபடமெடியாரோடுகூடி யருள்புரிந்து விநோதலீலைபுரியுந் தருணத்தில்; அருந்தவக்கொள்கை யகத்தியமுனிவர் இலக்கணேபதேசம்பெற்ற செந்தமிழ்ப் பாண்டிவளநாட்டில் திருவாதவூரில் அமாத்திய பிரா

மணகுலத்தில், திருவவதாரஞ்செய்து வாதவூரரெனப் பிள்ளைத்திருநாமம்பூண்டு, வேதாகமாதி பதிநூலில் வல்லுனராய், அரிமர்த்தன பாண்டிய னவைக்களத்துத் தலைமையமைச்சுரிமை பூண்டோராய்த் திருப்பெருந்துறையில் பரமபதியாசிரியராக வெழுந்தருளி யுபதேசிக்க நான்காஞ் சத்திநிபாதச் செல்வராகி, திவ்யபரஞானனுபவியாய், குருமூர்த்தமாய் எழுந்தருளிய ஐயன்திருவடிக்குப் பாமாலை சார்த்தி, மாணிக்கவாசகரென நம்பனருளிய நாமம்பூண்டு, அங்குத் திருவாலய பணிபுரிந்து திருவுத்தரகோச மங்கைக்கெழுந்தருளி திருப்பணிபுரிந்து திருப்பாமாலை சார்த்தித் திருவாலவாய்க் கெழுந்தருளி தேவதேவனை வழிபட்டுப் பாண்டியன் கடன்தீர்த்துச் சோமசுந்தரமூர்த்தியின் திருவருள் பெற்றுத் தில்லைச் சிற்றம்பலமென்கிற தகராகாசப் பெருவெளியில் துரியாதீதானந்த தாண்டவம்புரியும் தாண்டவமூர்த்தியைத் தரிசிக்கவெழுந்தருளி யங்குள்ள முனிவரரோடுஅற்புதமூர்த்தியின் குஞ்சித திருவடியைத் தரிசித்துச் சஞ்சிதமொழிந்து, நீங்காத பேரானந்தத்தில் மூழ்கிப் பரவசராய் அங்கு வதிந்து, பின் வடபுலியூராகிய திருப்பாதிரிப்புலியூரி லெழுந்தருளியுள்ள பாடலேச மூர்த்தியைத் தரிசிக்கும் விருபபினராய்க் கெடிலநதியின் தென்கரையி லெழுந்தருளினர்.

அப்பொழுது பிரளயகாலத்தில் வாரிபெருகுவதுபோல் கெடிலநதி வானமும் பூமியும் ஒன்றாகப்பெருகி மலை மரம முதலியவற்றையும் பேர்த்துக்கொண்டு வருவதைப்பார்த்து வடகரைக்கு வரமுடியாமல் மூன்றுநாள்வரையிலும் உணவுமுதலியனவின்றிப் பாடலேசன் றிருவடியை நினைந்து வருந்துறும்பொழுது பாடலேசன் விளையாடல் செய்துள்ள சித்தவடிவத்தோடு அங்கெழுந்தருளினர். அவரைக்கண்ட மாணிக்கவாசகர் எல்லாம் வல்ல சித்தராகிய கடவுளே அடியேனை யக்கரையிலுள்ள பாடலவனநாதனைத் தரிசிக்கும்படி கிருபைபுரிய வேண்டுமென்று நனிவேண்டினர். அப்பொழுது சித்தர் வாதவூரரின் றிருவுளத்தையறிந்து நான் எண்குணத்திறையுமேலன், எல்லாஞ் செய்யுஞ் சித்தன், நீவிர் இந்நதியிலிறங்கி வாருமென்று கட்டளையிட்டுத் தாம் முன்னேசென்றனர். மாணிக்கவாசகர் பின்னால்,வரப்பயந்து அங்கேயேநிற்க சித்தர்கண்டு அஞ்சினீர் போலுமென்றுகூறி உமக்காக விந்நதியைப் பாடலிவனத்திற்கு வடபுறமாக வெகச்செய்வேன். நீர் பயமின்றி இவ்விடத்திற்குவந்து

தரிசனஞ்செய்யுமென்று கட்டளையிட்டுத் திருக்கரத்திருந்த வேத்திரத்தால் நதியை வடபுறம்வர வேவினர். உடனே யந்நதி வடபுறமாக வரக்கண்டு மகிழ்ந்த மாணிக்கவாசகர் பாடலிவனத்திற்குள்புகுந்து சிவபெருமானைத்தரிசித்துப் பரவசராய் அவ்விரவு அங்குள்ள முனிவரரா லுபசரிக்கப்பட்டு மறுநாட்காலையில் அவ்வன முழுமையும் வலமாகச் சுற்றிப் பார்த்துக்கொண்டு வரும்பொழுது இவ்விடத்தில் ஒரு தீர்த்த தடாகமொன்று வேண்டுமென்று நினைத்தனர். அப்பொழுது சிவபிரானாகிய சித்தர் நீவிர் வேண்டியதெதுவோ அதைக் கேளுந் தருகிறோமென நதிஅருகே யின்மையால் இவ்விடத்திலொரு தடாகம் வேண்டுமென்று வேண்டினர். உடனே சித்தர் தமது திருக்கரத்தால் பூமியைத்தொட அமுதத்தினும் மிக்க சுவையுடைத்தாய தீர்த்தத்தோடு கூடிய தடாக மொன்றுண்டாக வதில் கங்கைமுதலிய நதிகளையும் வருவித்துக்கலந்து முனிவரரோடு மாணிக்கவாசகருக்குக் காட்டியருளினர். அதைக்கண்டு மிகப்பமகிழ்ந்து மாணிக்கவாசகரும் மற்ற முனிவரரும் நிற்கும் சமயத்தில் இன்னும் யாது வேண்டுமோ அதையும் கேண்மின் என்று சித்தர் அருள்புரிந்தனர். அப்பொழுது மாணிக்கவாசகர் கழிபெரு மகிழ்ச்சி யுடையராய் இவ்வனத்தில் அரியநகர மொன்றுண்டாகும்படி கட்டளையிட வேண்டுமென்று இரந்தனர். உடனே கண்ணைமூடிக் கொள்ளுங்கள். கணநேரத்திற்குள் உண்டாக்குவேனென வுத்தரவு புரிந்து திருநீற்றைத் தூவி மனத்தால் நினைத்தருள அதிவிசித்திரமாகிய உப்பரிகைகளோடு கூடிய நகரமுண்டாயிற்று. உடனே கண்ணைத் திறந்து நோக்கும்படி சித்தர் கட்டளையிட்ட உடனே மாணிக்கவாசகர்முதலிய முனிவரர் கண்டு அடங்கா மகிழ்ச்சி பூண்டனர். பாரதி ஆதிசேடனும் உரைப்பரிய நகரச்சிறப்பைப் பார்த்துக்கொண்டிருந்த மாணிக்கவாசகர் சித்தரை நோக்கினர். சித்தராகிய சிவபெருமான் சிவலிங்கத்து மறைந்தருளினர். மாணிக்கவாசகர் எல்லாம்வல்ல தேவனாகிய உனக்கிது வோ ரற்புதமோ சுவந்தர்ப்பேதமான தேவதேவாவென்று பலமுறையாகத் தோத்திரஞ்செய்து சிலநா ளங்கிருந்து பின் சிதம்பரத் தெழுந்தருளினர் என்று தூர்ச்சீடி பிரமசீலனுக்குச் சொல்லினன்.

---

# கங்கை தவஞ்செய்த சருக்கம்

கரசமெனும்பெருந்தீர்த்தவரவுமுற்றுங்
கணித்துரைத்ததுர்ச்சடிதாட்கமலம்போற்றிப்
பரிவினொடுயிரமசன்மமுனிவன்சொல்வான்
கங்கையுபாகீரதியும்யாவந்தீர்த்தத்
துரிசகலித்தடமூழ்கியுத்தாரேசன்
றுணைப்பதாம்புயந்தொழுததாகச்சொன்ன
விரிவனைத்துந்தெரிந்துரைக்கவேண்டுமென்ன
வியந்தடிகளக்கதையைவிரித்துச்சொல்வார். (க)

முன்னமொருகாலம்வைவசுவாமன்னன்
முறையியற்றும்யுகங்கள்பலவற்றுண்மூழ்தி
மன்னுகிருதாயுகத்தின்வளத்தின்மேலாய்
மதிப்பரியபுட்கரக்கேத்திரத்தின்வாய்ந்து
பன்னுமறையங்கமுதலனைத்துமோதிப்
பதினன்குவிதையைனும்பரப்பின்மூழ்கித்
தன்னிணையின்முனிதருமாகரப்பேர்யோகி
மறையவனத்தலத்துள்ளான்றவஞ்செய்கின்றான். (உ)

ஐயழலினிராதாரவடிவமாகி
யாயிரமாண்டியற்றுதவத்தழல்சென்றுற்றுப்
பையரவப்பள்ளியினுங்கமலபீடப்
பருமணியாசனத்திடையும்பரந்துசென்று
செய்யதழலெனப்பரக்கும்வண்ணம்பார்த்துத்
தேவர்கோனயர்வெய்திக்கிடுக்கமுற்று

னையுழுளத்தினனுகிநமக்குமாறுய்
நண்ணுவன்கொலித்தவத்தினலத்தாலென்று. (ந)

சிந்தனைசெய்தக்கொடியதவத்தைமாற்றித்
திரிவிக்கத்தேவர்கோன்றெரிந்துநோக்கிப்
பந்தனையதனமதியவதனம்வாய்ந்து
பருமமணியகலல்குற்பதுமப்பாவை
யந்தியசாதியின்யவனபுணர்ப்பாற்ருேன்றி
யனங்கனுழிகைநிகர்க்கும்யவனதேசச்
சுந்தரிபேர்சதமாயையென்பாள்வேதன்
றனைமலர்த்தாடொழுதவனப்பணிந்ததோளக். (ச)

அன்னநடைமடப்பிடிமென்கிள்ளைமஞ்ஞை
வனையகோகிலமிழற்றுமமுசகும்பந்
தன்னையினைதனகொடிமின்னிடைப்பூண்மங்கை
தனைச்சார்ந்துசதமாயைமயிலேகேட்டி
யுன்னைநிகர்ப்பவரில்லைதேவமாத
ருருவசியுமுனதெழிலுக்கெவ்வாள்பொன்னுந்
தன்னைநாணுறப்புரியும்வனப்பின்மாதே
சாற்றுவலொன்றதுசெய்துதருகவென்றான். (ரு)

அம்மொழிகேட்டடிவணங்கியவனமங்கை
யமரேசகடவுளர்கட்கதிபவைந்தாஞ்
செம்மலர்த்தாருவஞ்சங்கநிதியுங்காம
தேனுமணிபதுமநிதியேவல்செய்யு
மும்மனத்துக்குவப்பாகப்புரியுமேவ
லுளதாகிலதுபுரிவேனெல்லையன்ன
மம்மரகல்பணியருள்வீரென்னலோடும்
வலாரியவளுளந்தெளியவருத்துச்சொல்வான். (சு)

விண்ணுலகாண்டமரர்களுக்கிறைவனாகி
　　வினைகண்முடித்தசுரர்கணம்வெருவநோக்கி
யெண்ணமிகவீற்றிருக்குமெமக்குமாறா
　　யிருந்தவஞ்செய்வான் றருமாகரனென் றுள்ளான்
புண்ணியபுட்கரத்தலத்தின்மறையோன்றேவ
　　போக்கியமவேட்டுத்தழலிற்பொருந்திப்பன் னா
ளண்ணரியசுகம்புரியுமதனைநீபோ
　　யழித்திடுதியுனக்குவரமளிப்பேனென்றான். (எ)

நன்றெனச்சென் றவைபுரிவேனென் றுநேர்ந்து
　　நளினமலர்த்திருவினுமேலானநங்கை
குன்றிணிணைதனத்துணைநுண்ணிடையைவாட்டக்
　　கொடியினைசைந்தவனத்திற்குறுகிநின்று
தன்றுணையாத்தேவர்கோனேவவந்து
　　சார்ந்தவசந்தனுமவளுந்தருணம்பார்த்து
மன்றல்கமழைங்கணையுமாரனேவ
　　மதனலீலைகள்பலவும்பழங்காநின்றார். (அ)

பருநகனைமுகையவிழநறுந்தேனூற்றப்
　　பமரமிழற்றக்குயிலுங்கீதமபாடக்
கருமுகிலும்வெண்முகிலுங்கலந்துவைகக்
　　கஞ்சநீலோற்பலஞ்செங்கழுநீர்முல்லைத்
தருமலர்வாசங்கமழவனங்கள்வந்து
　　சார்படைவீடெனக்கானந்தயங்காநிற்பப்
பொருவிலிரதிக்கிணையாமதனமாயை
　　பூங்கொடியினுடங்கியெதிர்பொருந்தாநின்றாள். (கூ)

மெல்லவடியொதுங்கிநடந்தொருபானின்று
　　வித்துருமப்பாவையெனவீணையேந்திப்

பல்லிசையுமோகனமுந்தொடுத்துப்பாடிப்
பரிவினவிநயம்பலவும்புரிதல்பார்த்துச்
சொல்லரியதவப்பயன்போலிங்குவந்த
தோகையாரெனமனதிற்றுளக்கமெய்தி
யல்லனையகாரளகச்செருக்கினுள்ள
மலமந்தான்சதமாயையருகுசார்ந்தாள். (க0)

சார்ந்தமடமங்கையுமம்முனியும்பண்டைத்
தங்கள்வினைப்புணர்ப்பினாலுயிரொன்றாகிக்
காந்தனொடுகாந்தையுமாய்க்கலவியின்பக்
கரைகடந்தவாரிதியிற்படிந்துபன்னா
ணீந்திலராய்வருடநூற்றளவுங்கூடி
நெக்குருகியகங்களிக்குநிலையரானா
ரேந்துபழவினைத்தொடராவந்துற்றகாலை
யீடழியாரெவரேயிவ்வுலகத்தம்மா. (கக)

கண்டுகேட்டுண்டுயிர்த்துற்றறியுமின்பக்
கலவியினுமட்டிடவுண்கருணையானும்
பண்டருமாடகவிபஞ்சிமுழக்கினானும்
பாடகநூபுரச்சரணஞ்சதிக்கொப்பாகக்
கொண்டுநடித்தவிநயஞ்செய்கோலத்தானுங்
கொங்கையிணைக்குடக்கனியின்கொம்பனாளை
வண்டுறைமலர்மருவியகலாவாறு
வாஞ்சித்தான்முனிதருமாகரன்முன்மாதோ. (கஉ)

வனப்பனைத்துந்திரண்டதிலோத்தமையின்மேலாஞ்
சதமாயையுபாங்கத்தான்மருண்டானேனுந்
தினத்தசத்திற்பட்சமொருமாசந்தன்னிற்
றெளிந்தொருநாட்சிவபக்கவற்கீகைகன்னி

ணினைப்பரியவிபூதியொடுவிசுவரூப
நின்மலவத்தியாயத்தினைசமாகித்
தனக்கிணையிலவைகளையேதுதித்துக்காலந்
தனைக்கழித்தான்முனிதருமாகரனுமேலோன். (க௩)

சண்டாளிசதமாயைபுணர்ப்பினாலுஞ்
சந்திபுரியாப்பதித்தன்மையானு
முண்டாட்டுக்கிணங்குமதுநுகர்ச்சியானு
மொண்ணொடியோடனவரதமுறுதலானும்
பண்டைமறையோததொழிந்தபாவத்தானும்
படர்பெரும்பாவந்தருமாகரனைப்பற்று
தண்டகவோதியபூதிவிசுவரூப
மின்னவதிபாதகத்தையேற்றவன்றே. (க௪)

அண்ணல்பெருவடிவானவிசுவரூப
வத்தியாயமவ்விறைவிபூதியாய
புண்ணியவத்தியாயமவையிரண்டும்பாவப்
புணர்ப்பினாற்கறுத்துளமும்புல்லென்றஞ்சி
யெண்ணமினியெமக்கெவ்வாறுய்யும்வண்ண
மெனப்பலகாற்றேர்ந்தவைகளிம்மென்றேகி
விண்ணவர்நாயகன்விசுவநாதன்காசி
விரும்பியன்னவடிவினவாய்மேவிச்சென்று. (க௫)

கடவுளர்தேவர்களிருடிகணங்கள்சித்தர்
கதிநான்கின்மருவுமுயிர்கிருமிகீடந்
தொடருணரீப்புற்புதலாதியயாதேனுந்
தொன்மைவினைமலமாயைத்துவக்குநீங்கிப்
படர்வரியபேரின்பமுத்திவீட்டிற்
பர்போகத்துறுமாக்கைப்பதனகாலத்

துடலதனைமடியணைத்துப்பிரணவாதி
யுபதேசம்புரியிறைதாளுற்றவன்றே. (கசு)

நித்தமும்வைகறையெழுந்துநியதிசெய்து
நிமலபரசிவசொருபநினைந்துசென்று
கைத்தலத்திற்கோகனகாதிகளாம்போது
கலந்தேந்திக்கங்கைநதிக்கரையிற்சென்று
வைத்துவிதிவத்தாகப்பிராணயாம
மஞ்ஞுசகளீகரணம்வாய்ப்பச்செய்து
சுத்தசிவமயமாகத்தனைக்கங்கா
தோயத்தைநினைந்ததனிற்றுலங்கமூழ்கி. (கஎ)

அத்திரமாசந்தியனுட்டானமற்றை
யகமருடமார்ச்சனமுமடைவேசெய்து
பத்தியினந்திரியாகபூசையீசன்
பதாம்புயத்திற்கற்பூதமாம்படியசற்போற்ற
முத்தியவிமுத்தத்துக்கங்கையாதி
மூர்த்திகளையருச்சித்துமுன்றாட்போல
வெத்தனைநாளுறைவதவணந்தநாளு
மிவவண்ணம்புரிந்தனங்களிருந்தவன்றே. (கஅ)

இன்னமுறையேவிபூதிவிசுவரூப
மிமயமயில்விசாலாட்சியவிமுத்தேசன்
பொன்னடித்தாமரைபரவிமூன்றுகாலந்
திரிபதகைதனின்மூழ்கிப்பாவம்போக்கி
மன்னுமிருசதவருடம்வைகித்தேசு
வாய்த்தெவர்க்கும்பலமுதவவல்லவான
வன்னவற்றின்பாவத்தைக்கங்கையேற்று
ளாதலின்மெய்வளஞ்சுருங்கியயர்ந்தாளன்றே. (கக)

அறுதிமுத்தத்துவாதீதசுத்த
வருட்பிழம்பின்சடாமகுடாங்கத்தினின்றுந்
தறுதுதிருவருளாலிவ்வுலகமுய்யச்
சார்ந்தபாகீரதியும்பாவச்சார்பா
லிறுதடைந்துசுழித்தலைக்கும்வெள்ளமாறி
யிருகரையுஞ்செலுவுவரவுடைத்தாய்ச்சேரும்
பறுநிகளினுறிவிழந்தாங்கவலமெய்தி
வனப்பிழந்துகந்தித்துமருண்டாண்மாதோ. (உ0)

இங்ஙிலைமந்தாகினியாமுலகமாது
மெவ்வுயிருமகிழ்ச்சியுறவியங்குங்காலை
மன்னருமயாழ்நாரதமாமுனிவனறேவ
விருடிகளின்மேலானபரமயோகி
தன்னியல்பிற்றேவகதிவசத்தாலாங்குச்
சார்ந்தனனத்திரிபதகைதன்மையாவு
முன்னரிசிவயோகக்காட்சிதன்னு
ணுணர்ந்துமனங்கொண்டிதனையுரையாநின்றான். (உக)

மங்களையாயுலோகபாவனையாமுத்தி
வளங்கொழிக்குநாயகிகல்யாணிமாதே
கங்கையுலகனைத்தையிதுகேட்டிநின்பாற்
கலந்தகொடுந்தீவினைக்காரணங்கள்யாவு
மங்கவற்றுனீமலினமடைந்தவாறு
மடைவினறிந்தனமவற்றையகற்றுமாறும்
பொங்குபுனற்பண்டையினுமேலாமாறும்
புகலுதுங்கேளெனக்கங்கைபோற்றிச்சொல்வாள். (உஉ)

பங்கயாசனன்புதல்வர்தம்முண்மேலாம்
பண்ணவமுற்றுணர்யோகப்பகவவென்பாற்

றங்கினதீவினையுணர்ந்தாய்நீர்வெவ்வாறு
சாற்றுதியவ்வண்ணமேசரிப்பதல்லா
லிங்கெமக்குவேறுளதோவுரைத்தியைய
வெனப்பலகாலிரந்துரைப்பயாழ்வல்லோனுஞ்
சங்கரன்பாதிரிப்புலியூர்க்கரசதீர்த்தத்
தனிக்கதையெடுத்தவட்குச்சாற்றுகின்றான். (உ௬)

பூலோககயிலாசதகரஞான
புரஞ்சிதாகாசந்தெனபுலியூரென்று
மாலோகதேவமுனிகணங்களெல்லா
மன்னிவழிபடுந்தில்லைவடபால்மெய்யோ
ஞலோகவுதயகதிர்பரப்பும்பௌவ
வணிபகுடதிசைக்கெடிலத்தருகுவைகுஞ்
சாலோகமுதஞன்குநல்குமுத்தித்
தலந்திருப்பாதிரிப்புலியூரென்னலாமால். (உ௭)

நித்தியமங்களவடிவமெவைக்குமேலா
நிரதிசயானந்தசுகநிலயம்பாரிற்
சித்தியதிரகசியகால்வேதவாசந்
தேவமுனிகணங்களனுதினமும்வந்து
பத்திபுரிந்தருச்சித்துப்பரவியேத்தப்
பாசவிமோசனம்புரிந்துபரவுமுத்தி
யத்துவிதநிலையருளுங்கலைகளான
வாயிரத்தோசனவணமருமாதோ. (உ௮)

அம்பிகையெம்பிராட்டிபராபரைமாமாயை
யனந்தகலியாணகுணவடிவேதேவி
கும்பகனதனமடமானிமயவல்லி
கோமளைஞானச்செல்விகுலப்பூங்கொம்பு

தம்பெருமானேவலினிற்சார்ந்துபன்னாட்
டவம்புரிந்துபாடலேசுரன்பாற்சார்ந்த
வமலையுமைபெரியநாயகியாமன்னை
யகங்கரத்தெவ்வரமுமருளாநிற்கும். (உசு)

எண்ணரியசிவலிங்கம்விசுவலிங்க
மெனத்திகழுமங்கரினிருநீர்யாவும்
புண்ணியதீர்த்தத்தடமங்குறைவோர்யாரும்
பூசுரரும்புங்கவருந்தருக்கள்யாவு
நண்ணரியகூவிளபாடலங்களாகு
நான்மறையாகமமுழங்குந்தொனிகள்யாவு
மண்ணருமக்கடைந்நாழநிபுலிசைமூதூ
ரடைந்தரனையருச்சிப்பாயகலுமென்றான். (உஎ)

சித்தவடிவாமீசன்கரத்தாற்செய்த
தீர்த்தத்திற்சாகரத்திற்கெடிலதீர்த்தத்
துத்தமமாமவைகாசியாடிமூசி
யொளிவளர்கார்த்திகைமீனமுதலாமாதத்
தத்தகையபருவநாண்மூழ்கினோர்க
ளாயிரஞ்சன்மந்தொடரும்பாவபேதக்
கொத்தகன்றுபோகவிதம்பொருந்திமேலாஞ்
சிவலோகத்தேஞ்ஞான்றுங்குலவுவாரே. (உஅ)

முக்காலசித்தவிழாப்பட்சமாத
முழங்குவிழாவருடவிழாவிழாவின்மேலாய்த்
தக்கோர்கள்பணியிடபமூர்ந்துவீது
சார்ந்துவருபவனிவிழாத்திருத்தேர்தன்னி
னக்கரவமணிந்தபிரான்பவனிசையபு
மவ்விழாத்தரிசித்துத்தோத்திரிப்

புக்குவாரிதிமூழ்குமவர்கட்கெய்தும்
புண்ணியப்பேறெவராலும்புகலற்பாற்றே. (உகூ)

ஆரணமுந்தெரிவரியகலைகளான
வாயிரநதோடீசனவனுறைதலாலப்
பூரணநாடகன்புலிசைத்திருவிழாவிற்
பொருந்திவசித்தபிடேகமுதல்பொற்பா
லேரணவரும்விழாவணிதல்சிறப்பித்தன்ன
தானபானீயமுதல்யாவுஞ்செய்து
காரணனுஞ்சிவனடியார்மகிழப்பூசை
கற்பித்தோர்புத்திமுத்திகலந்துவாழ்வார். (௩0)

இன்னபலவெடுத்தியம்பாவளவிலாத
விருஞ்சுருதியாகமநூல்புராணமுற்றுஞ்
சொன்னமுறைமறுத்துரையாதுரைத்துமின்னுந்
துலைவிலாப்பெருஞ்சீர்த்தித்தலத்தினிசென்
றன்னைமூவம்புரிகவெனவிடைகொண்டேகிக்
கன்னிகையாய்த்தலங்களெல்லாமணைந்துபோற்றிக்
கன்னிவனத்தருகணைந்தவ்வெல்லைபோற்றிக்
கடைஞாழற்காசத்தின்கரைவந்துற்றாள். (௩க)

வந்துசகளீகரணமார்ச்சனாதி
வகுத்தவிதிமுறைபுரிந்துதானஞ்செய்து
சந்திபுரிந்தனுட்டானஞ்சபந்தியானந்
தாரணைமுன்னும்யோகஞ்சமைத்துப்போற்றிக்
கந்தனைமுன்விநாயகனைப்பணிந்துள்ளேகிக்
கரகமலமஞ்சலித்துக்கங்கைகங்கை
சுந்தரப்பொற்கோயில்வலம்வந்துநந்தி
துசபலிபீடத்தருகுதொழுதுபோற்றி. (௩உ)

அன்புருகவட்டாங்கபஞ்சாங்கத்தி
னடைவிணமக்கரித்தெழுந்தஞ்செழுத்துமோதித்
தம்பெருமான்முன்னணைந்துபூசித்தின்ப
சர்மகானத்துதியாற்சரணமபோற்ற
வும்பரினோர்வாக்கெழுந்தமாசித்திங்க
ளுயர்பருவதினந்நீராத்தமுவக்குமாற்று
லெம்பெருமான்றிருவிழாவெழுச்சிசெய்வித்
திருங்கடலிற்பிரமதீர்த்தத்தினெய்தி. (கங)

பங்கயாசனக்கடவுண்முகுந்தனுதி
பிண்ணவர்கண்முனிகணங்கண்முதலயார்க்கு
மிங்குளபூசுரராதியின்னத்தோர்க்கு
மிடபவாகனவெழுச்சிச்சேவைநல்கும்
பொங்குபூரணைத்தீர்த்தம்வரையினீயிங்
கிருந்துதானஞ்செய்துபாவம்போக்கிக்
கங்கையொருகலைக்கரசந்தன்னில்வைத்துக்
காசிமாநகர்க்கேகிக்கலிப்பரியென்ன. (கச)

விண்ணிலெழுமசரீரிவாக்கைக்கேட்டு
மெய்விதிர்த்தானந்தமலிவிழிநீர்சிந்திப்
பண்ணவர்சேர்மாசிவிழாவரையுமவைகிப்
பருவத்திற்சாகரத்திற்கரசந்தன்னி
னண்ணரியவலங்காரத்தானஞ்செய்தி
ராகுவகன்மதியமெனவிளங்கியிருந்தப்
புண்ணியநீக்தரசதத்திற்றன்போலைந்துப்
பொருந்தியொருகலையிருப்பப்போற்றிச்செல்வாள். (கரு)

வலம்வந்துபணிந்தரிதின்விடைகொண்டேகி
மானிடவாக்கையைநீங்கிக்கங்கையாகி

நிலவுந்தண் பிறையணிந்தவவிமுத்தேச
னேசத்தாற்றலம்பலவுநோ்ந்துபோற்றிக்
குலவுஞ்சங்கினமிப்பிமுத்தம்வாரிக்
கொழித்தலைக்குஞ்சுரநதியாய்க்குலவாநின்று
நலமலிந்தகாசிவிசுவேசர்ப்போற்றி
நாடொறுமெவ்வுயிர்க்குமருணல்காநின்றாள். (கசுசு)

அன்றுமுதன் மாசிமாபருவந்தோறு
மந்நியதிவழுவாதுகங்கைசோந்தே
துன்றுமலர்ப்பாடலமாவனத்தின் மன்னி
யும்பர்பிரான்றிருவிழாத்தரிசித்தோகை
சென்றுசாகரகரசதீர்த்தத்தாணுஞ்
செய்துசிவக்கொழுந்திணைத்தாடேவியம்மை
தன்றுணையாம்பெரியநாயகிதாள்போற்றிக்
காசிமாநகர்க்கென்றுஞ்சாருநாளும். (கசுஎ)

தத்துவவேதியன்றருமாகரப்பேர்யோகி
சதமாயைபுணர்ப்பிறலடைந்தபாவக்
கொத்தனைத்தும்வீழ்திவிசுவங்கங்கைக்
குலநதியிற்கழுவவவள்கோதுதீர்க்க
வுத்தரமாம்புலிசைநகர்க்கரசம்வந்த
கதையுரைத்தாமினிவ்னியொருங்கிவந்து
தத்துபுனற்கெடிலநதிப்பாடலேசஞ்
சார்ந்துதவம்புரிந்தவாசாற்றுவாமால். (கசுஅ)

கங்கைதவஞ்செய்தசருக்கமுற்றிற்று.

ஆகச்செய்யுள் எஉஅ.

## கங்கை தவஞ்செய்த சருக்கம்.

முத்திக்கு வித்தாயுள்ளது சிவகர தீர்த்தமென்று கூறிய சூர்ச் சடியிணைத் தாள்வணங்கிய பிரமசன்மன் கங்கைவந்து மூழ்கிப் பாவமகலப் பெற்ற வரலாறென்ன வென்று வினவ சூர்ச்சடி நவில லானுயினன்.

முன்னொரு காலத்திலே, வைவஸ்வத மனுவினரசாட்சியின் யுகங்கள் பலவற்றுள் ஒரு கிரேதயுகத்தில், புஷ்கர க்ஷேத்திரத்திலே, பிராமணர் குலத்திலே பிறந்தவனாய், வேதாகம புராண சாத்திரங்களில் வல்லவனாகிய தருமாகர னென்பவன் ஐந்தழலினுப்பண் அநேககாலந் தவஞ் செய்தனன். அவ்வாறு தவஞ் செய்யும் பிராமணனது தபாக்கினி பிரமலோகம் வைகுண்டம் முதலிய சுர வுலக முற்றுஞ் சென்று தகிப்ப தாயிற்று. அது கண்ட இந்திரன் அயர்வுற்று நனி நடுங்கி "நமக்கு மாறாகி விவவுலக மெய்துவன் கொல்" என்றை யுற்று, "இத் தவத்தைக் கெடுப்பதே கடன்" என்று துணிந்து, இத்தகைய வருந்தவத்தை யழிப்பதற் கரம்பையரா லு மாகாதென்று யவன தேசத்தில் அந்திய சாதியிற் பிறந்து பிரமன் பால் வனப்புப் பெற்ற சுந்தரியாகிய சதமாயை யென்பவ ளிடத்திற் சென்று, மாயையினையும் மயக்கவல்ல சுந்தரியே! உன்பாலோருதவிவேண்டி வந்தனனென்றுசொல்லினன். அதுகேட்ட சதமாயை யடியிணையில் வீழ்ந்தெழுந்து "ஐந்து தருக்களுஞ் சிந்தாமணியுஞ் சங்கநிதி முதலிய நவநிதிகளு மேவல்புரியுந் தங்களுக்கு அடிமையா லாவதுள தேல் கட்டளையிட்ட வண்ணஞ் செய்வேன்" என்றனள். அதைக் கேட்டுச் சர்வவுவந்த சதமகன் "புஷ்கர க்ஷேத்திரத்தில் தருமாகர னென்னும் பிராமணன் நமக்கு மாறாகத் தவஞ் செய்கின்றான். அதனை நீ யழித்து வருக. உனக்கு வேண்டும் வரங்கள் தருவேன்."

என்றனன். சதமர்யையு முடனே நன்று நன்றெனக் களித்து மறை யோன் தவஞ் செய்யுமிடஞ் சார்ந்து, அனங்கனு மைங்கணை யேவத் தன்னுலியன்ற மாயை பலவும் புரியாநின்றனள். அச்சத மாயை செய்த மாயை யொன்றையேனுஞ் சயிக்கத் திடமில்லாத வேதியன் அவள் வலையி லகப்பட்டுத் தவமொழிந்து "இவள் யாரோ? எவ வுலக மடந்தையோ?" என்று நோக்குவதை யறிந்த சதமாயை யருகே வர, இருவரும் மனங்கலந்த கலப்பினராகி நீட்டித்த நாளின் புற் றிருந்தனர். இவ்வாறு மையல் வலைச்சிக்கி யறிவழிந்து புலன் கெட்டும் வேதியன் இடையிடையே தன் னறியாமைக்கு மிக வருந்திப் பவமகற்றுங் காமாரியின் திருவடித் துணைகொண்டு விபூதி யுருத்திராக்கந் தரித்துச் சிவகீதை பாராயணஞ் செய்த காலத்தைக் கழிப்பா னாயினன். இவ்வாறு அவ் வந்தணன் சிவ கீதையிலுள்ள விபூதி யத்தியாயம் விசுவரூப வத்தியாய மிவ்விரண் டையும் பாராயணம் பண்ணினவளவிலேயே பாவமகலப்பெற்றுய்ந் தனன்.

பின்னர், பூசுர னோதிவந்த சிவ கீதையிலுள்ள வவ்விரண்டத் தியாய வதிதேவர்களு மந்தணன் றவ் புங்கமடைந்த பாவந் தங்களா லகலப் பெற்றமையின் அது தங்களைச் சாராவண்ண மன்னா வடிவங் கொண்டு வாரணாசிக்குச் சென்று விசுவநாத னடியிணையில் வண ங்கிக் கங்கையின் மூழ்கிப் பரி சுத்த மடைந்து மீண்டார்கள். கங் கை அப்பாவத்தான் மிகச்சுருங்கி வளங்குறைந்தது. அத் தருண த்தில் தேவ விருடியாகிய நாரத முனிவ ரங்குவந்து, மந்தாகினி பாவத்தால் வருந்துவதைக் கண்டு, நனியிரங்கி, "குடைந்தோர் பாவமகற்றுந் தாயே நின் பாவமகல வேண்டுதியேல் தகராகாசமா கிய திருச்சிற்றம்பலத்திற்கு வடபுறமாய் தேவர் முனிவரர் வசிக் கப் பெற்றதாய், பூலோக சிவலோக மென்றடியர் வழிபட்ட தேவாதி தேவன் அனந்த கலைகளோடு வீற்றிருக்கப் பெற்றதாய், தேவி தவ ஞ்செய்து திருமணம் பெற்றதாகிய திருப்பாதிரிப்புலியூ ரென்கிற

தலத்தில் ஐயன்றனது திருக்கரத்தால் உண்டுபண்ணப்பட்ட சிவகர தீர்த்த மென்றொன் றிருக்கிறது. அதில் வைகாசி, ஆடி, கார்த்திகை, மாசி, பங்குனி, மாசங்களின் மூழ்கிப் பரகதி யடைந்தார் பலர். ஆதலி னங்குச்சென்று நீயும்மூழ்குக'' என்று கூறிய நாரதமுனியின் சொற்படி பாகீரதியும் தனதுவடிவத்தோடு சிவகர தீர்த்தத் தருகே வந்தனள். வந்த அக்கங்காதேவி, ஸ்நாநஞ் செய்து, நித்தியக் கடன்களை முடித்துக்கொண் டருகேயுள்ள சிவாலயத்தின் முன்னர் வந்து, மண்ணுற வீழ்ந்து, எழுந்தஞ்சலித்து உள்ளே புகுந் தாலயம் வலம் வந்து,தேவன சந்நிதியில் அட்டாங்க பஞ்சாங்கமுறப் பணிந்து, சாம வேதத்தாற்றோத்திரஞ் செய்தனள். அப்பொழுது சிவக்கொழுந்தீசர் அசரீரியாய்க் கட்டளையிடுகின்றார்.''மாசிமாதம் பௌர்ணமியி லரிபிர மேந்திரருங் கண்டு களிப்படைய விடப வாகனத்தி லெழுந்தருளுவோம். அதுவரையிங்கிருந்து நமது சிவகர தீர்த்தத்திலும் பிரம தீர்த்தமாகிய வாரிதியிலும் அனறு ஸ்நாநஞ்செய்து, உன தாயிரங் கலைகளிலொரு கலையை யிச்சிவகர தீர்த்தத்திற் கலக்கும்படிச் செய்து நமமைப் பூசித்துக் காசிக்குச் செல்வையேல் இப்போதுள்ள பாவமகலப் பெறுவதோடு உன்பாலடைந்துமூடைவோர்கள் பாவமுமென்றுமணுகாம லிருக்கும்படி யருள் புரிவேம்'' என்று கட்டளை யிட்டனர். அதைக் கேட்ட மாத்திரத்தே கங்கை மிக மகிழ்ந்தவவாறே மாசி மாசம் பௌர்ணமியி னடக்கும் பிரமோற்சவங் கண்ணுற்றுப் பௌர்ணமியன்று சிவகர தீர்த்தத்திலும் வாரிதியிலும் மூழ்கிப் பாவமகலப் பெற்றுத், தன்னொரு கலையை யச்சிவகர தீர்த்தத்திற் கலக்கும்படிச் செய்து சிவகர தீர்த்தங் கொண்டே பாடலேசன் பிரகந்நாயகியைப் பூசித்துக் காசிக்குச் சென்றனள். அக்காலந் தொடங்கி யின்றும் மாசி மாசபௌர்ணமியில் கங்கைவந்து மூழ்கு கின்றனளென்றா லத் தீர்த்த மேன்மையென்னால் புகல லாவதோ வென்று கூறிப்பின் அக்கினி தவஞ்செய்த கதையையுஞ் சொல்லத் தொடங்கினர்.

---

## அக்கினி தவஞ்செய்த சருக்கம்.

அடிகளாகியதூர்ச்சடி, முடிவிலாக்கதைமுற்றவும்
படியின்மீதுபரப்பினன், மடியின்மாணன்மகிழவே. (க)

பிரமசன்மனும்பெட்பினற், கரமுகிழ்த்துக்கனிந்துபின்
வரமுற்றனன்வன்னியென், றுரைசெயக்கதையோதென். (உ)

வன்னியென்பவன்மாண்பினற், பின்னர்மூவரும்பேறுற
வன்னதாமவிப்பாகமே, மனனியேந்திமதியினல். (௩)

தேவர்யாவருஞ்சோவிடம், பாவகக்கணம்பார்த்தவர்
யாவராயினுமேந்தியீந், தாவலாதியகற்றுவார். (௪)

இன்னவாறிவர்செல்வுழிச், சொன்னநாள்கடொகுதலா
லன்னபாவகராகிப்போயப், பின்னர்மாய்ந்தனர்பேறற. (௫)

அன்னர்தங்களுக்காங்கடன், முன்னமியாவுமுடித்தபின்
வன்னியென்பவனமாண்பினற், றன்னதாகிச்சரித்தனன். (௬)

எண்ணில்காலமியற்றிய, வண்ணவாரழல்வானவன்
பண்ணவர்க்கிப்பணிசெய, கண்ணுறுதெனநாடியே. (௭)

ஓடிவாரிதியுட்புன, னேடொணவகைநீங்கின
ஞடினார்பெருவானவர், தேடொணதிகைத்தனர். (௮)

கண்டுதேவர்கலங்குவ, தண்டர்கேண்மினிவவத்தியி
னுண்டுவன்னியொளித்தனன், மண்டிநீர்வளைமின்னென (௯)

மகரமென்னுமணிக்கய, னிகரில்தேவரைநோக்கித
புகலவாங்கதுபுந்தியி, விகலறமகிழ்ந்திருந்தினர். (க௦)

அன்னசொல்வழியாடியே, வன்னிதேவனைமன்னியே
பின்னரீர்த்துப்பிடித்தனர், துன்னிவன்னியுஞ்சொல்லுவான். (கக)

எய்ந்துவந்திவணுற்றன, ளித்தலுஞ்சுமைநேர்கிலே
னெத்திவேனிஃதின்னணந், துய்த்துநீரிவைசொல்லுவீர். (கஉ)

என்றுகூறியிழுக்கினுன், மன்றன்மாலைமணந்தவர்,
சென்றுநோயினைத்தீர்க்குது; மன்றநோயெவன்மற்றென. (கங)

இன்றியாவையுஞ்சீரண, மொன்றிடாதவையொன்றிட
நன்றுசெய்குதிர்நானினி, யொன்றுவன்பணிக்கும்பரே. (கச)

என்னவேலுமிமையவர், பன்னுகின்றமருத்துவன்
னைநீதவிரென்னிலு, மன்னுவனதுதீர்த்தனன். (கரு)

தேவர்யாவருஞ்சேர்ந்தெழிற், பாவகர்க்குப்பகருவார்
யாவையும்பொசித்தின்புறுந், தாவினல்வரந்தந்தனம். (கசு)

இன்றுதொட்டவியாவையு, மன்றவேந்திவழங்குவா
யென்றுரைத்திடனேவிஞர், நன்றெனத்தீநயந்தனன். (கஎ)

மகரமீனெனுமற்றத, னிகலில்கண்ணிமையாவர
நகவிலாவகைநல்கியே, புகல்செய்தேவருமபோயினர். (கஅ)

வேறு.

திக்குபபாலரில்யாவர்க்குமுதவியாய்ச்சிறந்து
முக்கணெம்பிரானங்கையினமுழங்கழல்வடிவாய்த்
தொக்கதேவநேமுதலநாற்கதிகளுந்துய்க்கு
மிக்கபோகமுன்னுண்டுபின்னளிக்குமம்மேலோன். (ககூ)

தேவரீந்தருள்வரத்திறுற்சிறந்தவுஞ்சிறவா
நாவிலேனதொணுதிடக்கரால டக்குசொன்னவையும்
பூவலர்ந்ததார்வன்னிநாயகனுண்டுபூரித்
தேவறேவர்கட்கியற்றுதல்வல்லனுயிருந்தான். (உ0)

இறுத்தரோகமுமக்கினிமாந்தமுமிவ்வா
றிறுத்துமென்படுதிண்ணியகாயத்தாலங்கி
பொறுத்துவவ்வியேயவியுணயாவையுங்கொடுபோய்
வெறுத்திடாவகைதேவர்கட்குதவுவான்வியப்பால். (உ௧)

எண்ணில்காலமிம்முறைமையாலொழுகுநாளரியை
மண்ணில்யாவருஞ்சுசியெனவழங்குதன்மாறி
நண்ணுமிவவனனவையெனக்களிபபதுகாணா
விண்ணவர்க்குள்யாம்விமலமுற்றிலமெனவெ]ஃவி! (உ௨)

கண்டகண்டனயாவையுமாசையாற்கலந்தி
மண்டியுண்டனமக்கினிமாந்தியநோயாற்
பண்டுதேவருமளித்தனரவவரம்பகுப்பா
லண்டொணாதவுமயினறதாலடுத்ததிவவசுத்தம். (உ௩)

உண்டியால்வருமொழுக்கமுமேன்மையுமுயர்வு
முண்டியால்வருஞ்சிறுமையுந்தீமையுமொருங்கே
யுண்டியால்வரும்பரகதிபாவமிவுள்ள"
முண்டியால்வருஞ்சுத்தமுமசுத்தமுமோரில். (உ௪)

அன்னதானமையடுத்ததோரசுத்தநோய்தீர
வின்னவாபுரிகுதுமெனவெண்ணினன்வன்னி
தன்னதாகியபரம்பரையடிகளைச்சார்ந்தப்
பொன்னினின்னடிவனங்கிநின்றிவைபுகல்கின்முன். (உ௫)

யாக்கைநோயினுன்மெலிந்துநொந்திடருழந்ததுவும்
வாக்கின்யாவையும்முணவரமளித்ததுமருண்டு
தாக்கினுலயின்றசுததம்வந்தடைந்ததுஞசாற்றி
நீக்கியாள்கவித்தீமைதீர்ந்தின்புறுநிலையால். (உ௬)

என்றிரந்திரந்துரைத்தனன்வன்னியாமிமையோ
னின்றுநீயினிவருந்தலைகாமெடுத்துரைத்துங்
குன்றவில்லியோனருளினுலெனக்குருமுதல்வன்
மன்றநாதனைநினைந்திருந்தின்னணம்வகுப்பான். (உஎ)

விந்தியக்கிரிசேதுவென்றெவர்களும்வியக்குஞ்
சுந்தரத்தலத்திடையுளநாட்டினிற்றென்றி
யுங்குபெண்ணைநேர்க்கெடிலதீரத்தினிலுளதா
முந்தைவேதமுமாறிவரும்புலிசைமாமூதூர். (உஅ)

வல்லியச்சரணத்தமாமுனிவனுமறையாஞ்
சொல்லிலக்கணப்பதஞ்சலிமுனிவனுந்தொழுதே
யல்லுலாவியகண்டனையருச்சனைபுரிந்தாங்
கெல்லையில்லதோர்தவம்புரிந்தினிதிருந்தனரால். (உகூ)

மத்தியந்தனமுனிவரன்மைந்தனுமறையோ
னித்தலுஞ்சிவனருச்சனைநியதியின்பயனாற்
கைத்தலங்களுங்கால்களும்புலியுருக்கலப்ப
வத்தலத்தவர்பெயரினாற்புலிசையாயினவால். (௩௦)

வேறு.

விண்ணையலங்கரித்துயருமேதக்கயவியன்கங்கை
மண்ணையலங்கரித்தொளிருநவநிதிமற்றதனயலே
பெண்ணையலங்கரித்துயருமுனைப்பாடிப்பெருநாட்டி
லெண்ணையலங்கரித்துயரும்வளநகர்மற்றெண்ணிலவால். (௩க)

நெட்டிலைமுப்புடைக்கனியநீள்தெங்கினையற்கமுகி
னெட்டியசெந்துகிர்மானுமுதிர்பழுக்காயதனயலே
கட்டிபடுகரும்பினமுஞ்செந்நெலுநித்திலங்காட்டி
யட்டநிதிவளம்பெருக்குமருளாரூருளதாரூர். (௩உ)

அவ்வூரிற்குறுக்கையர்தங்குலம்விளங்கவவதரித்துத்
தெவ்வூரையெரித்தபிரான்றிருவதிகைத்தலமடைந்து
கவ்வூதீவயிற்றுநோய்கடிதகற்றுந்தமிழ்ப்பாடி
யிவ்வூரிற்சிவக்கொழுந்தையடிவணங்கியினிதிருந்தார். (௩௩)

அன்புருவின்பிழம்பாகியமர்ந்தநாவினுக்கரசர்
முன்புமருணீக்கியராயவருகர்முதன்மையமூண்
டின்பிதெனமருண்டுபின்னுளிருந்தகாரணத்தாலே
பின்புதொடருகருந்தாயபீடித்தார்பலதிறத்தநூல். (௩௪)

நஞ்சதனையருத்துவித்துமதயானைதனை...ந்தித்
துஞ்சும்வகைபுரிவித்துநீற்றறையிற்றுதைவித்தும்
வெஞ்சினத்தாற்பலபுரிந்துஞ்சிவனருளாலவ்வல்லுமிவ
ரஞ்சுமுறையிற்றென்னவெண்ணினரப்பறிதலையர். (௩௫)

பல்லவனுமர்சனுமப்பதகருரைமருதவர்கள்
சொல்லுவதெத்திறமதுவேசெய்விக்கத்துணிகருத்தாற்
கல்லினொடுபெரும்பாசதொடர்யாத்துக்கடன்மருங்கு
வல்லபெருங்கலனேற்றிப்பெருங்கடல்வாய்மடுப்பித்தான். (௩௬)

ஏவலர்களகன்றதற்பின்கடைஞாழலிறைசரண
நாவரசருளத்திருத்திச்சொற்றுணையாந்திகப்
பாவலர்செந்தமிழ்மாலையருசெழூத்தாற்பாவினார்
மூவர்களுந்தொழுதேத்துமுதற்பொருளாஞ்சிவக்கொழுந்தை. (௩௭)

வேறு.

அன்னதாகவும்பாடலேகுரனடியகத்து
மன்னவோருணர்வாகியவப்பரைவலிந்து
பின்னுபாசங்கள்பிரிந்தனபேரமர்ப்பிறங்கும்
பன்னகாசனற்பிரிநாகபாசம்போல். (௩௮)

இருணையாதவக்கருங்கடலுதரத்தினெழுந்தாங்
கிருணசூரியராமெனவிளங்கினாரப்பர்
கருணைவாரிதியடிகளைக்கரங்களாற்றாங்க
வருணனும்பெருந்தவங்கண்முன்செய்தனன்மாதோ. (ருகூ)

முழங்குகின்றன துந்துபிதேவர்கள்மொய்த்தார்
தழங்குபல்லியமொத்தனவார்கலித்தரங்கம்
வழங்குசெந்தமிழ்வாயருமலர்மழைசொரியப்
பழங்கணீங்கியக்கல்வினைச்சிவிகையாப்படர்ந்தார். (௬0)

பாடலத்திருவனமெனும்பாதிரிப்புலியூ
ராடகச்சபைநடம்புரிசித்தர்பேரருளா
நாடகத்தினையாவரோயுணர்பவர்நரலைக்
கோடகத்துவந்தேறினர்வாக்கின்கொற்றவனார். (௬௧)

சைவவைதிகத்தலைமையோர்யாவருஞ்சார்ந்து
தெய்வநாயகன்றிருவருட்டிறத்தையேதெரிந்து
ஜநவதாகியவுள்ளத்தூராவினுக்கரசை
ஐயவகைப்பூகையட்டமங்கலத்தெதிர்ந்தழைத்தா. (௬௨)

வந்ததொண்டர்கள்வணங்குமுன்வணங்குநாயன்னார்
சிந்தையன்பினால்விழிகளினீர்மசாரிந்தணிதிருநீற்
றந்தமில்லொளியக்கமாலிகைவடமணிந்து
பந்தநீக்குகற்கலையணிந்தருந்தமிழ்ப்பாடி. (௬௩)

வந்ததூர்ந்திறைகதிர்மணிக்கோபுரவாயின்
முந்தையெட்டினோடைந்தெனுமங்கமுமியங்க
வெந்தையார்திருமுன்பணிந்துள்ளணைந்தெடுத்தார்
செந்தமிழ்த்திருப்பதிகமீன்றாளெனத்தெரிந்து. (௬௪)

வேதமங்கமாகமம்விரிபுராணத்தின்விளைந்த
போதம்யாவையும்புணரியிற்கடைந்தபுத்தமுதி
னோதியோரறிவுடலினினுற்பவமுறினும்
பாதபங்கயமறக்கொணாவரந்தரப்பாடி. (சரு

வீணர்நான்கினுஞ்சிறந்திடாவமணரைவிட்டு
நாணநீக்கிநின்றிருவடிக்கடிமையாய்நயந்தேன்
காணயாவரும்பிறப்பறுத்துனதடிக்கலப்பின்
மாணவைத்தருள்கரையேறவிட்டமாநிதியே. (சசு

என்றிறைஞ்சியநாவினுக்கரசினையிறைவ
னன்றருளினக்கடற்கரையேற்றுகாரணத்தா
லின்றுமென்றுமுத்தாரநாயகனெனுமெழிற்பேர்
மன்றவேகரையேறவிட்டவனெனமன்னும். (சஎ)

தேவர்யாவருஞ்சித்தருங்கணங்களுஞ்சிறந்த
பூவலயத்துளரசர்கண்மங்கையர்புதல்வர்
யாவரும்மையிற்றவஞ்செய்தோரவரெலாமெய்திப்
பாவுலாம்புகழ்ப்புலீசையிற்பலவரமடைந்தார். (சஅ

மன்னுமாமறையுருத்திரசன்மனெனுமறையோன்
பொன்னுலாமலர்ப்பாடலவனதனிற்போந்து
தன்னகண்களிற்குருடறப்பாவநோய்தவிர்ந்தாங்
கின்னனீக்கியேசிவகதியெய்தினனிருந்தான். (சகூ

மன்னர்யாவருந்திறையிடுமணிமுடிமன்னன்
றன்னதானையான்முறைசெயுஞ்சத்தியசந்தன்
பன்னியோடும்வந்திருந்தனன்பாடலவனத்தி
னின்னல்செய்குடர்நோயறுத்திருங்கதியடைந்தான். (ருo

இருபிறப்பினன்மார்த்தாண் டனென்பவனிணையற
றருமநாயகன்பாடலவனத்தினிற்றவஞ்செய்
தொருமையன்பினிற்கணமாருலையுமொழிந்து
திருவருட்குரியாரினிலொருவனாய்ச்சிறந்தான். (௫௧)

ஒப்பிலாவிளப்புலிசைமாநகர்தனிலோங்குஞ்
செப்பிலாமுலைப்பெரியநாயகிதிருமணாள
னிப்புனேய்த்தவிர்த்தாளுநீயேகுவாயென்ன
வப்பொன்னாகியகுருபரனருள்புரிந்தனனால். (௫௨)

அருளுமந்தணமுளத்தினிலிருத்திவந்தடைந்து
மருள்சூற்றியகரசதீர்த்தத்தினினமருவித்
தெருளும்வேதத்தின்விதியினன்மூழ்கினன்செபித்தான்
பொருள்செயபூதியலக்கமாமணிபலபூண்டு. (௫௩)

ஆதிமாமறைமுடியினுமறியொணாவமலச்
சோதிநாயகனகரையேறவிட்டசுந்தரனை
மாதுபாகனைமூலலிங்கேசனைவணங்கிப்
பாதபங்கயந்துதித்தனன்சுடரெரிப்பகவன். (௫௪)

தொழுதுமும்முறைவலம்வந்துகன்னியிற்சுரர்க்கு
முழுதுமிவ்வுலகனைவர்க்குமருள்புரிமுன்னோ
னெழுந்தாணுத்திருமேனியில்வலஞ்சுழித்திருக்கும்
விழுவகற்றுசீர்விநாயகன்றிருவடிவணங்கி. (௫௫)

அரத்தினத்தினிற்சித்திரித்தவிரொளிபரப்பப்
பரித்தசிங்கத்தின்சுவலுறைப்பதுமபீடத்தின்
விரித்தமுத்தணிவிமானத்தின்விளங்குநாயகியுந்
தரித்ததேவியுமகிழவுற்றிருந்தருடலைவன். (௫௬)

கங்கைசென்னியிற்கரங்களின்மானமழுக்கவினத்
திங்கடங்கியவேணியன்சிரித்தபுன்னகைய
னெங்கணாயகன்பாடலபுரேசரனிமையோர்
தங்குழாம்பணிபுலிசைநாயகன்சரண்பணிந்தான். (ருஎ)

போற்றிமற்றுளதீர்த்திபேதங்களும்புலிசைக்
கேற்றமாகியவருந்தவநாயகியிணைத்தா
டோற்றுமன்பினிற்பணிந்தனன்சூழ்வலம்வந்தாங்
கேற்றநாயகன்றிருமுன்புபணிந்தனனிருந்தான். (ருஅ)

அற்றைநாளுபவசித்திருந்தருணன்வந்துதிப்ப
மற்றைநாட்பெண்ணைகெடிலநீர்வாரிதிகரச
முற்றதீர்த்தங்கள்யாவையுமாடினனுவப்பான்
முற்றுதானங்களனைத்தையும்புரிந்தனன்முறையால். (ருகூ)

மூன்றுகாலமுஞ்சிவக்கொழுந்தீசன்முன்பெய்தித்
தோனறுமூலலிங்கேசனையிருக்கினுற்றுதித்தாங்
கின்றணியகன்றெனவிதிர்ப்புற்றன்பினிருந்தாங்
கான்றவேதியர்க்கருததிப்பின்னயின்றனனனலோன். (கூ0)

அன்னனாகியவன்னிபஞ்சாக்கினியதனிற்
றுன்னியேதவம்புரிந்தருங்கோனடையிற்றுளங்கான்
பின்னுநாள்சிலகழித்தனன்சீதநாட்பெருநீர்
மன்னிவைகியேயருந்தவம்புரிந்துவந்தனனால். (கூக)

ஆயமாதவமளவில்காலங்கள்செயன்றோன்
றூயனும்வகைத்திருவுளத்தடைத்தனன்றொல்லை
மேயநான்முகன்மலர்த்திருமுடிவிண்ணிற்றேடச்
சேயதாகியோன்வன்னிமுன்றிருவுருத்தோன்ற. (கூ௨)

உத்தரீயமுநுதலணிபுண்டரத்தொரியும்
பத்திபூத்தியாயக்கமாலிகையணிபரப்புங்
கைத்தலத்தணிதண்டமும்புரிமுந்நூற்கவினுஞ்
சித்திரத்திருவுருவவேதியனெனச்சென்று. (சுரு)

யாதுவேட்டுநீதவம்புரிகின்றனையெனலு
மோதுவான்வன்னிபொசிப்பிநுலுற்றமேதாரசுத்தத்
திறுநீங்கயான்புரிதவமெனவெனதெரிந்து
வேதவேதியர்க்கொடுமுதல்விரித்துரைத்தருளும். (சுஉ)

கும்பமாதத்திற்றிருவிழாவெழுச்சியிற்கும்பிட்
டெம்பிரான்போற்றுமம்மதிமகத்துதத்தியின்மூழ்கித
தம்பிரானமுனங்கரசநீர்த்ததிறனுஞ்சாரந்தங்
கிம்பர்போற்றியவலங்காரததானமுமியற்றி. (சுங)

நித்தியக்கடன்முடித்தனேவினேத்தொகைநீங்கிச்
சுத்தனுகுதியெனவுரைத்தருளவுத்தொடர்பா
லத்தகைத்திருவிழாவரையவணிருந்தனனன்
மைத்தகாக்கடற்கரசநீர்மூழ்கினன்மகிழ்ந்து. (சுசு)

படவமேகங்கணீங்கிடவிரிகதிர்ப்பானுச்
சுடரின்வன்னியுஞ்சுத்தனுயொளிவிரித்திருந்து
மட்டைமநீக்கவந்தருளியமறையவவுருவாங்
கடவுளைத்துதித்திருந்தனன்வன்னியங்கடவுள். (சுஎ)

எழுந்துசென்றுபாதிரிவனத்திருந்தருளிறைவன்
றெழுந்தண்கப்பதாம்புயங்களிற்பணிந்துதோத்திரித்தே
யழுந்துமன்பினனரிதினின்விடைகொண்டாங்ககன்று
தொழுந்தராவெழுவன்னியாய்க்குலவித்தன்னுலகில். (சுஅ)

ஏவரேவர்களியற்றவீற்றிருந்தனனென்றும்
பூவலம்புதண்கிடங்குசூழ்பொங்கரம்புலிசைக்
கோவிலாதுவந்தொளிர்விழாதரிசனம்புரிந்து
மேவும்வன்னிலோகத்தினின்வியப்புடனிருந்தான். (சுகூ)

என்றுதூர்ச்சடியுரைத்தவக்கதையெல்லாமிறைவி
யன்றகந்தழீஇயமுதமுண்டெனச்செவிப்பருகிக்
குன்றவில்லியார்க்கினியவாமிவையெனக்கொண்டு
மன்றவம்முறைபுரிகுவதாமனங்கொண்டாள். (எ0)

வன்னியென்பவன்பாடலவனத்திடைவந்து
முன்னைநோயறச்சுத்தனாகியவிதமொழிந்தா
மென்னையாளுடைநாயகிக்கிறையவனவிடைமேன்
மன்னிவந்தருள்புரிந்ததைவகுத்துரைசெய்வாம். (எக)

அக்கினிதவஞ்செய்தசருக்கமுற்றிற்று.

ஆகச்செய்யுள் எகக.

# அக்கினி தவஞ்செய்த சருக்கம்.

வேதத்திற் கூறிய தேவர்களுட் சிறந்தவனான அக்கினிதேவன், தன்னுடன் பிறந்தார் மூவரோடு மறைவழி யியற்றும் யாக முதலிய கருமங்களிற் கொடுக்கு மவியைச் சுமந்து, தேவர்களுக்குக் கொண்டு போய்க் கொடுக்குந் தொழிலைப் புரிந்து வந்தனன். அனற் கடவுளின் சகோதரர் மூவரும் பலநாளு மவிசுமந்தமையா லிளைத்து வருந்தி யிறந்தனர். பின்னர்க் கனற்றேவன் தானேசுமந் தொவ்வொரு தேவரிடமுஞ் சென்று கொடுப்பானாயினன். அவ்வாறு செய்வுழித் தினந்தோறும் பற்பல தேவர்களுக்குங் கொடுக்க வேண்டிய மிக்க அவியைச் சுமக்கலாற்றாது யிளைத்து மிக வருந்தி யெவ்விடத்தேனு மொளித்தாலன்றி யுய்ரோ டிருத்தல் கடினமென்று கருதிப் பயோ ததியிற் புக்கொளித்தனன். அஃதறியா தசுரர், அவியுணவின்றி வாடி யங்கியை யெவ்வுலகத்திலுந் தருவியுங் காணாமையால், வாரிதியருகேவர வவர்களைக்கண்டு கடலிலிருந் தோர்மகரமீன் வந்து "ஐயரே நீங்கள் தேடும் வன்னியீண்டொளித் துள்ளனன்" என்று கூறிச் சென்றது. அதைக் கேட்ட நிராசனர் மிக மகிழ்ந்து சாகரத்துட் புகுந்து தேடி யனலனைக் கண்டழைத் தவிகொணராமலேயொளித்தனையென்று வினவ "எல்லாராலுங் கொடுக்கப்படு மவியையுண்டமுதமாக்கிப் பின்னுங்களுக்குத் தரவேண்டி யிருத்தலாலத்து முடியாம னோயினால் வருந்தி யொளித்தனன்" எனத், தேவர் நோயினைத் தீர்க்கின்றே மென்று மருத்துவனை வேண்டி வனனோயினைத் தீர்த்தனன். உடனே யமர ரெல்லாரு மெரிக்கடவுளுக கவிசுமக்கு மாற்றலு மெவ் வகைப்பட்ட பொருளையு மெரித்துச் சுத்தமாக்கும் வரத்தையுந் தந்து நீக்கடவுளைக் காட்டிய மகரத்திற் கிமையாத நாட்டமுதலிய வரங்களு மளித்து முளரித் தேவனையவிசுமக்கக் கட்டளையிட்டுத் தத்தமலகஞ் சென்றனர்.

பின்பவ்வண்ணமே தீத்தேவன் தேவர்களுக் கவிசுமந்து தருவ
தோடு இக்குப்பாலகரி லொருவனாய் மிக்கசிறப்புமதுகையும்பெறறு
வாழ்ந்திருந்தனன். இவவாறு வனனித் தேவன் பொனனுலகத்தா
ர்க் கவி சுமக்குந் தொழிலி லிடையறு தொழுகுநாளில், சுரர் நரர்
பலரு மங்கியைச் சுத்தனென்பது தவிர்ந் தசுத்தனெனப் புகலா
நின்றனர். சித்தசுத்தி, சற்கருமம், ஞானம், வீடு, இவற்றைப் பெறு
தற் கின்றியமையாத் துணையாவது நல்லுணவாதலி னந்நிலையின
றிப், புகலொணு வுணவையு முண்டமையால் வந்ததித் தீவகென
றுணர்ந், திதை யகற்றவல்ல குருபரனை யடைவேனென்று தனது
பரம்பரைக் குருவாகிய பிரகஸ்பதியை யடைந்து சுரர்களுக் கவி
சுமக்கமாட்டாது மறைந்தது மவாக்னேய் ீத்து மதுகை தந்தது
மிப்பொழு தசுத்தனென் றியாவரு மெல்லினறதுங் கூறி யிதை
யொழித் தருளென விரந்துநின்றான். அப்பொழுது குருநாதன்,
சிவக்கொழுந்தீசனுடைய திருவடியைச் சிந்திததுரைப்பானானன.
விந்திய மலைக்குத் தென்பாகத் துள்ளதாய் மதஙியந்தண முனிவ
ரின் குமாரர் வழிபட்டுப் புலிக்காலும் புலிக்கையும் பெற்று வியாக்
கிர பாதரென்கிற வபிதானத்தோடு பதஞ்சலி முனிவரின் நண்பின
ராகி இருவரும் பூசித்த காரணத்தாற் புலியூரெனகிற நாமமுற்றது.
பெண்ணை நதியி னருகேயுள்ள திருவாமூரிலே, வேளாளா குலத்
திலே, திருவவதாரஞ்செய்து மருணீக்கியாரெனகிற பிள்ளைத் திரு
நாமம்பெற்ற வாகீசத்திருவடிகள், அருகந்தர் வஞ்சனையாற் கருங்
கல்லிற் கட்டிக் கடலில்விடப் பஞ்சாக்கரப் பதிகததிருல் தெப்ப
மாகக் கன் மிதக்கப்பெற்றுக் கரையேறி "ஈன்றாளுமாயெனக் கெந்
தையுமாய்" என்கிற திருப்பதிகம பாடி யெப்பிறப் புறினும் நின்
றிருவடி மறவாவரந் தரவேண்டுமென்று குறையிரக்க வவவரமரு
ளிப் பாடலிபுத ருறைதலா லுத்தார புரமெனப் பெயாபூண்டது.
தேவர் சித்தர்முதலிய வடியார் பலர்வந்து தரிசிக்கப் பவநோ யகற்
றியது. வேதமுணர்ந்த வுருத்திர சன்மனென்னு மந்தணன் வழி
படக் கண் குருடோடு பாசமு மகற்றியது. முடிமனனர் வணங்குஞ்
சக்கரவர்த்தியாகிய சத்தியசந்தன், மனைவியோடு வந்திருந்து தரிசி
க்கச் சூலைநோ யகற்றியது. அந்தணனாகிய மார்ததாண்டனென்ப
வன் வந்து பூசிக்க வவனுக்குக் குடர்நோ யகற்றியது. இத்தன்மைத்
தாகிய பாடலிவனத்திற்குச் சென்று பிருகந்நாயகியுடனே டெழுந்

தருளி யிருக்குஞ் சிவக்கொழுந் தீசனைத் தரிசித்தாலிவ் வசுத்தமும் பாவமு மீகலுமென் றுறைந்தனன்.

அது கேட்ட வங்கியும் பாடலி வனத்தைச் சார்ந்து சிவகர தீர்த்தத்தை யுற்றுச் சங்கற்பத்தோடு ஸ்நாநஞ்செய்து, விபூதி தரித் தனுஷ்டானத்தை முடித்துத் திருவாலயத்திற்கு வந்து தூலலிங்க மாகிய திருக்கோபுரத்திற் கெதிரே நமஸ்கரித்துள்ளே புகுந்து வல ம்புரி விநாயகரை யட்டாங்க முறப்பணிந்து, பெரிய நாயகியாரோ டெழுந்தருளி யிருக்கும் பாடலேசரைப் பலமுறை நமஸ்கரித்துத் தரிசித்து மூன்று முறை வலம்வந் தன்றிரவு உணவில்லாதிருந்து மறுநாள் காலையிலெழுந்து சிவகர தீர்த்தத்திலுங் கெடிலநதியிலுஞ் சாகரத்திலும் மூழ்கி யந்தணருக்குத் தானங் கொடுத்தலோ டுணவு முதலிய பல வுபசாரம் புரிந்து பஞ்சாக்கினி மத்தியில் வேனிற் காலத்திலுந் தண்ணீருக்குள் பனிக்காலத்திலு மிருந்து பலகாலந் தவஞ் செய்வானாயினன். அப்பொழுதவனுக் கருள்செய்யத் திரு வுளங்கொண்ட சிவக்கொழுந்தீச ரந்தணர் வடிவத்தோ டெதிரே தோன்றி நீ யாது வேட்டனை யதனைக் கூறுகவென, வன்னியென் னசுத்தத்தை நிவர்த்தித்தருள வேண்டுமென்று வணங்கிப்பிரார்த்தித் தனன். அதற்கு ஸர்வேசுரர் நீ மாசிமாதத்தி னடக்கும நமது திருவிழாவைத் தரிசித்துப் பூரணையி னுங்கொடுக்குந் தீர்த்தோற்ச வத்திற் சிவகர தீர்த்தத்திலும வாரிதியிலு மூழ்குக. இவ்வசுத்த மகலுமென் றருளிச்செய்து மறைந்தருளினார். அவ்வண்ணமே யக்கினியும் மாசி மாதத்தில் திருவிழாத் தரிசித்துப் பௌர்ணமியிற் சிவகரதீர்த்தத்திலும் சாகரத்திலு மூழ்கிப் பாடலிவன நாதனைத் தரிசித் தசுத்த மொழிந்து தனதுலகமடைந்து வாழ்ந்தனனென்று தூர்ச்சடி மாணுக்கனுக்குக் கூறிய வற்புத சரித்திரங்களைக் கேட் டருளிய வருந்தவநாயகியார் கனிமகிழ்ந்தவ்வாறே புரிதல் சிவக்கொ ழுந்தீசனுக் குவப்புறுமாறென்று திருவுளங்கொண்டு தாமுஞ்செய்து வருவா ராயினர். இதுகாறு மம்பிகைக் கருளுமாறு சிவக்கொழுந் தீசனேவலால் வந்த தூர்ச்சடி பிரமசன்மனுக்குக் கூறிவந்தமையைக் கூறினும். இனிமே லருந்தவ நாயகிக்குப் பாடலிநாதன் காக்ஷி கொடுத்தமையைக் கூறுவாமென்று சூதர் கூறுவா ராயினர்.

---

# தேவிக்குக் காட்சிகொடுத்த சருக்கம்.

கும்பமன்னியபூரணைக்கோலமா
ரெம்பிரான்றன்விழாவணியேற்றினை
னும்பர்போற்றுமுவரிகரசநீர்
பும்பிமூழ்கவங்காரப்பரிவினோர். (க)

கோடிபாற்பசுப்பூசைக்கொடையினுற்
றேடரும்பலஞ்சிக்கெனச்சேருவா
ராடகத்துலையீர்தவரும்பலந்
தேடொணாதவண்சேருவரென்பவே. (உ)

கொய்யுளைப்புரவித்திரள்கோடியும்
வெய்யகுஞ்சரமாயிரமேதினி
யையரெய்தவளித்தவப்பேற்றினைப்
பையதானஞ்செய்வார்களும்பற்றுவார். (ங)

மாசந்தோறும்பருவத்தின்மன்னரியே
யீசன்வாரிதிகங்கையெனுமிவற்
றூசகற்றியதானஞ்செய்வார்கடாந்
தேசுமன்னித்திகழ்வதுதிண்ணமால். (ச)

மிக்கபோகமும்வேண்டியவாயுளுந்
தொக்கசுற்றம்புதல்வர்கடோமறத்
தக்கபேருணர்வோடுதழைத்திருந்
தெக்குலத்தருமீசனையெய்துவார். (ரு)

இனையாவையுந்தூர்ச்சடியெம்பிரான்
சந்நிதிக்கணிருந்துரைத்தானரோ
வன்னதோர்ந்தபிரமசன்மாவவன்
முன்னிறைஞ்சிமுகமனுரைத்தனன். (௬)

குரவன்மாணனிருவருங்கோயிற்
ஜூவியேவலம்வந்துபணிந்தனர்
புரமெரித்தபுராதனற்போற்றியே
விரவியேகினர்[illegible]மதனையோர்களே. (௭)

கன்னிமன்னித்[illegible]வ்ஞ்செயுங்காலயி
னின்னகாதைச்செவிப்புலமெய்தலா
லன்னவாறுபுரிவதழகென
மின்னனுண்மகிழ்ந்தற்புதமெய்தினாள். (௮)

மாதந்தோறும்பருவத்தினைமதித்
தோததீர்த்தத்துத்தானஞ்செய்தொப்பிலாப்
போதலர்ந்தகரசத்தும்பொங்கெழில்
வேதமந்திரம்யாவும்விளம்பியே. (௯)

தானஞ்செய்துநவையறந்தஞ்செழுத்
தானமூலமுமோதியங்கண்மியே
யீனமில்லனயாவுமுதவியே
கூனலம்பிறைவேணிக்குரிசிலை. (௧௦)

போற்றியிப்படியேபிரதோடத்து
மாற்றல்சால்சிவராத்திரியாதியு
மேற்றமாமவ்விரண்டபகாரத்துந்
தேற்றுசோமவாரத்தினந்தோறுமே. (௧௧)

விதியினனஞ்செய்தற்புதமேன்மையாற்
பதியின்மன்னியபாடலநாயகன்
பொதியவிழ்ந்தமலர்ப்பதம்போற்றியே
வதிவதாயினள்பாதிரிமாநிழல். (கஉ)

ஆண்டுநூற்றிருமையழன்மன்னியே
பூண்டுநீணற்வரியதவம்புணர்ந்
தீண்டவர்ச்சனைநாதற்கியற்றியே
காண்டரும்பொருளுன்னிக்கலந்தனள். (கரு)

இன்னவண்ணமருந்தவமெயபிரான்
றன்னையுனனிப்புரிதலுந்தாழ்குழ
லன்னமன்னவுமையவளன்பினின
மன்னுமீசன்மனத்துண்மகிழ்ந்தனன். (கஎ)

தேவதேவன்றிருவுளஞ்செய்துபின்
காவல்வெள்ளிக்கயிலையினினறெழுந்
தாவியன்னவட்காங்கருள்செய்யவப்
பூவலான்முதலாரொடும்போந்தனன். (கரு)

வேறு.

வெள்ளிமால்வரையீன்றதோர்குழக்கன்றுமேவித்
தெள்ளுநீம்பயப்பாற்கடன்மடுத்துண்டுசெவவி
யுள்ளிவாய்ந்ததோரழகுருப்படைத்துவந்தாங்கு
கள்ளிருட்கணுமொளிசெயும்விடையவனுக. (கசு)

பாதநான்கினுமரத்தினப்பணிபலவயக்கிக்
கோதகற்றுவெள்வயிரத்தாற்கோட்டணிதிருத்தி
வேதமேயுருவாகியவிடைவெரிந்மன்ன
வோதநித்திலக்கலனைவைத்திறக்கினருவந்தார். (கஎ)

பெரியகம்பலமதன்மிசைவிரித்தனர்பணிலத்
துரியகோவைவெண்கண்டையொடிடைக்கிடையுய்த்துப்
பெரியதாக்கியேகளத்தினிற்றரித்தனர்பிறங்க
வுரியபிப்பிலத்தமணியத்தொங்கலுமுய்த்தார். (கஅ)

ஆடகததருவியற்றியமுகபடாமணிந்து
கொடுத்ததோர்சுவலினிற்குச்சொன்றுநிறுவி
யேடகத்துப்பூமாலைகள்பற்பலவிணக்கி
நாடகத்தொடுகெதிபலபயிற்றுசேநண்ண. (கக)

வட்டவார்சடையிர்ந்தீவாஞெளியினில்வயங்கக்
கட்டுவேணியிற்கங்கைகையுழுதியமுங்கவின
வட்டநாகங்களெதிரதிர்மிளிர்வனவவையே
யெட்டுவார்கிரிவயக்கியகுடரெனவிலக. (உ0)

மருக்கிளர்கொன்றைகூவிளமலர்தும்பைமத்த
மருக்கமாதியபூனேந்தினவேனுமவவன்ன
நெருக்கிப்பற்பலயுகககடைநேடியுங்காணு
திருக்குமற்புதத்திருமுடிக்கொருமுடியிருத்தி. (உக)

முண்டகத்தினிற்புண்டரத்தொருவிழிமுளரி
கண்டிலாமுறைக்கவின்செயக்கன்னபூடணமாங்
குண்டலத்தொளியிருவிழிச்சுடர்களாற்குழுமி
யெண்டிசைக்கணும்பரிதிமண்டலமெனவிலங்க. (உஉ)

துண்டமாங்குமிழ்சுந்தரமதிமுகந்தோன்றிக்
கண்டகாட்சியைக்காட்டியதருப்பணக்கபோலத்
தெண்டிகைத்தலமெனச்சென்றுமணந்திறுமாக்கத்
தொண்டையங்கனிதுகிரெனவதரங்கவிலங்க. (உ௩)

தெரித்தபுன்னகைதிரிபுரயூதனுயிர்செருக்கப்
பரித்தவெந்திறற்செயற்கையைமாற்றித்தற்பண்பின்
விரித்தசாந்தியாமமுதசோணையினொளிவிளங்கத்
தரித்தராகதாம்பூலமங்கணிசெய்துதயங்க. (உச)

சங்கமாகிநிமலகதத்தணிமணிகற்பித்
தங்கமாந்தனநீலகண்டக்கவினவிரத்
துங்கநித்திலஞ்சொரிந்தனசூழ்வனபோல
வெங்கணாயகன்றாளமாலிகையெழில்செய்ய. (உரு)

சந்தனத்தொடுரோசனமான்மதச்சாந்து
சிந்தூரத்தணியணியுறச்சென்னியினின்ற
விந்திரத்தனுவொடுபலவன்னமுமிணைப்ப
மைந்திருத்தியகூர்மம்வச்சிரமெனவயங்க. (உசு)

அடுக்கலைத்தூணைபிணைத்தனபுயங்களினவிருங்
கடுக்கைகூவிளவெண்டலைமாலைகள்கவின
வெடுக்குமாயிரமணிப்பணாதரங்களாலிணங்கத்
தொடுக்குமங்கடகம்பலவளைகளுந்துலங்க. (உஎ)

தும்புருத்துணைநாரதர்செவித்துணைத்தோன்றி
பம்பவோதியகீதத்தினிசையினைப்பருக
வும்பர்நோக்குவதொத்ததுகரந்துறையருணங்
கம்பநீக்கியவொளிர்வதூகரத்துறைபரசு. (உஅ)

புண்டரீகத்தினுரிபுனைந்துதரபந்தனமு
மண்டலம்புரிந்தரவுரியதன்மிசைவரித்துக்
கெண்டையங்கணைக்காலினிற்சிலம்புகிண்கிணியும்
பண்டைவேதத்தினரற்றவெண்பாதுகைதரித்து. (உகூ)

மெல்லநந்திகைப்பற்றிவந்தருளிவெள்விடையே
லொல்லையேறியாங்கிருந்தனரும்பர்கள்வியப்பப்
பல்லியங்களுமுழங்கினமலர்மழைபரப்பச்
செல்லதிர்ந்தெனத்துந்துபிமுழக்கொலிசிவண. (௯௦)

திங்களாயிரமுதித்தெனத்திகழ்தருசங்கந்
தங்கையேற்றிடித்தூதிடக்குடமுழாத்தழங்கு
மெழுங்கணுமரபேயரொடுமுனிவரேதகெடுப்ப
பங்கயாசனன்மாதவனிருபுடைபடர. (௯௧)

பூதகாதரும்விஞ்சையர்தூழக்கணும்பொருவில்
வேதகீதரும்விண்ணிடைநிறைந்தனர்விம்மி
யோதமேழுமொன்றாகிவந்தெதிர்த்தனவொலியாற்
பாதலந்திசையந்தரஞ்செவிடுபட்டனவால். (௯௨)

வேறு.

கோடிசூரியர்காலவந்தெழுந்ததோர்கோமளக்கவின்காட்டு
நாடகப்பிரான்பருவிடைமன்னியேநடாத்தியவெழிற்றோற்ற
மாடகத்துருநவமணிமேருவோரற்புதவடிவாகிக்
கோடகத்துறையிரசதக்கிரிமிசைக்குலவியதெனலாமால், (௯௩)

இன்னவாறுவந்தெதிரெழுந்தருளியபாடலேசுரனெம்மான், ற
ன்னைநோக்கினடவநிலையாவையுந்தீர்ந்துவந்தெதிரேற்றுக், கனனி
மெய்விதிர்த்தானந்தபரவசக்காட்சியிற்கலந்தன்பா, லென்னையாளு
டைநாயகனெனத்துதித்திணையடித்துணைதாழ்ந்தாள். (௯௪)

எழுந்துமும்முறைவலஞ்செய்துபதயுகளங்களின்முடியெய்தி
பழுந்தழ்வீண்ணம்வீழ்ந்தடித்துணையிருகரபங்கயவலர்சாத்தித்
தொழுந்தகைத்திறத்தஞ்சலிசென்னியிற்சூட்டினடுணைத்தேவி
விழுந்தபாடலிப்பன்மலரருச்சித்துவிரவியேதுதிக்கின்றாள். (௯௫)

அனாதிநித்தியவேதவேதாந்தமுமறிவரும்பரஞ்சோதி
மனாதிவாக்கிறந்தட்டமூர்த்தததினுமன்னுநிர்க்குணவாழ்வே
யனாதிதீவினைவயிரியாய்க்காமனையெரித்தநின்மலத்தேவ
தனாதிசத்தியாம்பாடலநாயகசரணபங்கயம்போற்றி. (௫௬)

வேதரூபமாமாயிரஞ்சிரத்தினும்விரவியநிராதார
சோதிஞானவானந்தமாமகேசுரநிரீசுரசுகவாரி
பேதவாதமுமபேதமும்பேசியேபிதற்றியவுரைநீக்கி
நாதரூபமாம்பாதிரிவனத்துறைநாதநின்சரண்போற்றி. (௫௭)

சித்தர்போயொருமாணிக்கவாசகர்க்கருளியதிறம்போற்றி
பத்தரைக்கடற்கரையேறவிட்டநினபதாம்புயத்துணைபோற்றி
யத்தராய்க்கடைஞாழலிலெனையுமாண்டருளபதிறம்போற்றி
முத்தர்போற்றியசிவக்கொழுந்தீசுரமுதல்வநினபதம்போற்றி.

சுருதிநாயகபுராரியீசானவெண்பிறைக்கொழுந்தணிசோதி
பருதிவானவனிராக்கதிர்வனனியுமபரித்தபார்வையபைங்க
ணரியணிந்தவோயரவமூடணங்களாவணிந்தனையடியேனுந்
தெரிவுறாதுசெய்பிழைபொறுத்தேனுதிபுலிசையெம்பெருமானே. ()

காலவேனிலும்வாரியுங்கனலினக்காலீங்கலுஞ்சீதப்
பாலதாயினவனறிவேறொருசெயல்பரிப்பவரிலையன்றே
ஞாலநாயகபாடலப்புலிசைவாழ்நாயகவெனையாளுங்
கோலநாயகவடியனேன்பிழைபொறுத்தாள்வதுனகுணமாமே. (௬௦)

இன்னவாபலதுதித்திரந்தேத்தியவிறைவியானனநோக்கி
நின்னின்வேறறக்கலந்திருப்போமுனைநீங்கலநீசத்தி
யென்னதாகநீயானுனக்குயிரதாயிருப்பதுமுணர்ந்தாயே
லனனியம்பிறவுரைப்பதென்னிவவுரையடாதெனவருள்செய்து. ()

முன்னமாங்கணக்கயிலையிற்றிருநல்விளைந்தவம்முடிவோரி
னன்னதீவினையுனைவந்தடுத்ததுந்தவத்தினலவைநீங்கப்
பின்னைநீவிமலேசுரியாயிவண்பிறங்கலுமுணர்காலை
யின்னமாத்தலப்பாடலவனத்தினைவிளக்கியவியல்பாமால். (௬௨)

ஆனதன்மையாற்பற்பலவுரைப்பதெனம்பிகையாளாய
மேன்மைசாலுருவாகியேயொருகலைவிளங்கியிந்நிலயத்தின்
ஞானமன்றமார்கோயில்கொண்டியாவரும்வேண்டியவரநல்கித்
தானுமாயிவண்வாலையாய்க்கன்னிகைவடிவமாய்த்தழைப்பாயால்.

முத்திவித்துமாய்ப்போககாரணங்களாய்முளைத்தபாதிரிநீழ
லித்தலத்துநீயருந்தவம்புரிதலாற்றவமன்றமிதுவாமிச்
சத்திமன்றமென்னாளுமிங்குள்ளதித்தலத்தினினிலயஞ்செய்
கெக்கலத்திலுறையுயிர்கட்குமெளிதினிலின்பம்வீடருள்வாயால். சச

ஆயவோரகலையாலிவணுறைதிமற்றளப்பருங்கலையோடுந்
தூயசுந்தரப்பெரியநாயகியெனுஞ்சுடர்த்தொடியுமையாகி
மேயபல்லறம்புரிகுவைலீலையாலுனைமணவிதியாலே
நேயமாமணம்புரிகுதுமென்றனனிலைவருஞ்சுடர்ச்சோதி. (சரு)

எனவுரையாளிறையென்றுணர்தயாளியற்றியவபராதந்
தன்னைநீத்திவண்பண்டுளகருணைசெய்தருளுதியெனச்சாற்ற
முன்னைலீலையாற்புரிந்தவைமறந்தனனினையனீயெனமுற்று
முன்னைவேறறக்கலந்தனமெனப்பெருங்கருணையாலுரைசெய்து. ()

கன்னிநாயகியம்பிகைக்கரத்திணைக்கரமலராற்பற்றி
யென்னையாளுடைப்பாடலநாயகர்மூலலிங்கத்தினிலேகி
மன்னிவீற்றிருந்தருளினர்பூமழைமேவர்கண்மருவித்தார்
துன்னுமோசையிற்றுந்துபிமுழங்கினதேவர்கடுதித்தார்கள். (சஎ)

இந்திராதியர்யாவருமதிசயித்தித்தலந்தனின்மன்னிச்
சிரத்தையின்புறுதவஞ்செய்துபூசனைசெய்தனரிருந்தார்கள்
சந்திரப்பிறைச்சேகரனவர்க்கெல்லாந்தண்ணருள்சுரந்தன்பா
லிந்தமாநிலமுய்யவிப்பாடலப்புரிசைவீற்றிருக்கின்றான். (சஅ)

வெள்ளிமால்வரைக்கண்புதைலீலையின்வினையினாலுமைவந்து
தெள்ளுபாடலவனத்தினிலருந்தவஞ்செய்தபராதந்தீர்ந்
தின்னிமாக்கதையுரைத்தனம்யாவருமருந்தவவுமையாளைப்
புள்ளலம்புபாடலவனநீழலிற்பூசித்ததிறஞ்சொல்வாம். (சகூ)

தேவிக்குக்காட்சிகொடுத்தசருக்கமுற்றிற்று.

ஆகச்செய்யுள் அசஅ.

## தேவிக்குக் காட்சிகொடுத்தசருக்கம்.

வீசுவெண்டிரைவாரிதி சூழ்ந்தவையகத்தி, வாசகலவேண்டினோர்; மாசிமாதத்திற் பௌர்ணமி திதியில் கராஜதீர்த்தத்திலும் பிரமதீர்த்தமாகிய பயோததியிலும் மூழ்குவாராயி, னதுகாறுஞ் செய்திருந்த பாபமுற்றுமகலுவதோடு தீர்க்காயுளுஞ் செல்வமும் தேற்றியும் மகப்பேறும் வீட்டின்பமும் பெறுவரென்ற தூர்ச்சடியும்; கேட்டுவந் தாசிரியன் றிருவடிகளி லட்டாங்க முறப் பணிந்தெழுந்து புகழ்ந்து நின்ற பிரமசன்மனுந் திருவாலயத்தை வலம்வந்து பாடலிநாதன் பாதாம் புயத்திற்பணிந்து பிரியாவன்புட னசலாநின்றனர்.

பாதிரிமரத்தினருகே யிருந்து தவஞ்செய்து கொண்டிருக்கு முமாதேவியாரிக்கதையினைத் திருச்செவி சார்த்தியருளி யிவ்வண்ணமே புரிதுமெனத் திருவுளங்கொண்டு மாதந்தோறும் வரும் பவுர்ணமியில் ஸாகரததிலுஞ் சிவகட தீர்த்தத்திலு மகமருடண மந்திரபடனத்தோடு ஸ்நானஞ்செய்து விபூதிதரித் துருத்தி ராக்ஷவடம் பூண்டு நித்தியானுஷ்டானத்தை முடித்து மறையவர்க்குத் தானங்களைத் தந்து பாதிரிமூலத்தையடைந்து சிவக்கொழுந் தீசனைப்பணிந்தும், ஸோமவாரம் பிரதோஷம் மாதசிவராத்திரி யாகிய விப்புண்ணிய தினங்களிலு மவ்வாறே செய்தும், பஞ்சாக்கினி மத்தியிலிருந்து நாளுண்டுதவமபுரிந்தும். பாடலிநாதனைத் தரிசிக்குங்கருத்தோடு வாழ்ந்திருந்தனர். எல்லா மறிந்தவரு, மெல்லாம் வல்லவரு, மெங்கு நிறைந்தவருமாகிய பாடலிநாதன்; திருக்கைலாயத்தில் திருவோலக்கத் திருமணி மண்டபத்தி லெழுந்தருளியுள்ள திருக்கோலத்தோடு தருமதேவனாகிய விடபவாகனத்தி லெழுந்தருளி திருமால்பிரமனிந்திரன்முதலிய தேவருந் தும்புரு நாரதர்முதலிய தேவ விருடிய

ருஞ் சங்குகன்னன் வாணன் முதலிய சிவகணங்களும் மற்ற வடியார்களும் புடைசூழ்ந் தரகராமுழக்கஞ் செய்யத் தேவதுந்துபி முழங்கச் சுராஜூமழைபெரிதியப் பாதிரிமூலததி லம்பிகைக்குக் காட்சிகொடுத் தருளினர். திவவிய தேஜோமயமாக வையனெழுந்தருளிய திருக் கோலத்தைக்கண்டு பரமானந்தமடைந்தெழுந்து கிரீசன் றிருவடி மலரைச் சிரமேற்புனைந் துச்சிக்கூப்பிய கையினராகி யுரோமஞ் சிலிர்ப்ப மனமிளக வுழுவலன்பு நிறைந்த வுள்ளத்தோடு ஸ்தோத்திரஞ் செய்யாநின்றனர். அப்பொழுது "உமையே! நாமுன்னோடு திருக்கைலாயத்திற் சூதாடியது, முன்னைத் தவம்புரியுமாறு கட்டளையிட்டதுந் துர்ச்சடியைக்கொண் டித்தலமான்மியத்தைப் புகலுவித்தது மித்தலப்பெருமையை யாவரு முணருமாறே யென்றறிதி. நீ தவஞ்செய்த விவ்விடத்திலொருகலையோ டரகாசரூபியா யருந்தவநாயகி யென்னுந் திருநாமத்தோடு வீற்றிருந்து வழிபடுஞ் சிவ கோடிகளுக்குத் துக்கந்துடைத்து நினைத்ததை யளித்துப் பேரின்ப மளிக்குக. மற்றவனந்த கலைகள் வாய்ந்த திருவுருவத்துடன் பெரிய நாயகியென்னு மபிதானததோடு நமதறம் புரிக. நாம் வந்துன்னைத் திருமணம் புரிகின்றேம்" என்று கட்டளையிட்டனர். அதுகேட்ட உமாதேவியார் கழிபெருங் களிப்புடையராய் மகேசன் திருவடியிற் பணிந்தெழுந்து "கருணையங்கடலே! அடியேன் செய்துள்ள குற்றங்களை மன்னித் தருள்க" என்று குறையிரக்க, தேவதேவன் மகிழ்ந்தருளி "நின்குற்றத்தை மறந்தேம். உன்னை யென்பால் வேறற வீற்றிருக்கச் செய்வேம்" என்று தமது திருக்கரத்தாற் பெரியநாயகியம்மையின் றிருக்கரத்தைப்பற்றி யழைத்துக்கொண்டு சூழ்ந்திருந்த பிரமன் விஷ்ணுமுதலிய தேவர்களுக்கு மிருடியருக்கும் வேண்டும் வரமருளி யுாய ரரகாமுழக்க மெத்திசையும்போர்ப்ப, வேதமுழக்க மெங்குமுலகமு நிரம்பத், தேவதுந்துபி வானம்கின்றூர்ப்பச் சுரர்பொழியும் பூமழையெங்கும் பொதுளப் பாடலிமூலத்துள்ள சிவலிங்கத் திருவுருவி லெழுந்தருளினர். இதுகாறு முமாதேவி தவஞ்செய்து சாபமகலப்பெற்றுப் பாடலிநாதனைத் தரிசித்த கதையினைக் கூறினும். இனிமேல் பாதிரிமூலத்தி லெழுந்தருளியிருக்கு மருந்தவநாயகியை யடியார் பூசித் திஷ்டசித்திபெற்ற கதையினைக் கூறுவாம்.

---

# அருந்தவநாயகி பூசைச்சருக்கம்.



திடகடங்கியமணிமுடியாடகத்தினிலியற்றியமன்ற
மெங்கணாயகியருந்தவநாயகியிருந்திருந்தவஞ்செய்த
பொங்கெழிற்றிருப்பாதிரிநீழலின்மயனினாற்புணர்வித்துத்
தங்குதேவர்கள்யாவருமருச்சனைதனித்தனிப்புரிந்தார்கள் (௧)

சச்சிதானந்தவடிவமாயனாதியாய்ச்சனாதனியெனமன்னி
நிச்சலுந்தவமியற்றுபூரணியுமைநிருமலையகராங்கை
விச்சையாவையுங்கடைக்கணாலருள்புரிமெலவியனாதாந்தத்
துச்சிவீற்றிருந்தருந்தவநாயகியுயிர்க்கருள்சுரக்கின்றாள். (௨)

ஆனதன்மையாலம்பிகைபதாம்புயத்துணைதனையருச்சித்து
மோனமாயுளக்கமலத்தினினைந்துமூன்றெழுத்தையுமுறையாலே
ஞானவீரியசிற்சுகவடிவமாய்நவிற்றியுட்பணிந்தேத்தித்
தேனுலாந்தொடைப்புனைபவர்யாவருமிட்டசித்தியைச்சேர்வார். (௩)

வெள்ளிவாரத்திலருந்தவநாயகிவிரிமலர்ப்பதம்போற்றித்
தெள்ளுதீம்புனல்பாறயிர்சந்தனத்திரவியம்வழுவாம
லுள்ளயாவையுங்கொடுத்தபிடேகஞ்செயுத்தமரருள்பெற்று
வள்ளலாயிருந்தியாவையுமேற்பவர்க்குதவுவர்வளத்தாலே. (௪)

காலைவைகறையெழுந்திருங்கெடிலத்துங்கரசத்துமகிழ்ந்தாடிப்
பாலமாதியசானுவந்தத்தினுநீற்றினாற்பயில்வித்துக்
கோலமல்கியகண்டிகைபூண்டிருங்கோமளைவெளிரூப
வாலமந்திரமாயிரத்தெட்டின்மேன்மனங்கொளமருவித்து. (௫)

வேலைகாலையுமாலையும்வழிபடும்வித்தகர்விரதத்தான்
மாலையுண்டியற்றன்றுபவாசமுமற்றைநாட்கடன்செய்து
மேலரர்க்கியசிவனடியாரோடும்பாரணந்திளைத்துண்போர்
ஞாலமீதினில்வேண்டியவேண்டியாங்கெய்துவர்நலத்தாலே. (கூ)

மங்களத்தனிவாரத்திலருந்தவநாயகிமணிப்பாத
பங்கயங்களின்மாலையம்போதுசெம்பதுமநூற்றெட்டர்ச்சித்
தெங்குமல்கியதீபநூற்றெட்டுவைத்திறைஞ்சியதவத்தோர்க
டிங்கள்வாண்முகக்கன்னியர்சிறார்முதற்றிருவெலாம்பெறுவார்கள்.

விரும்பிமங்களநவமியுநவமியிலருந்தவவிமலேசை
பொருந்துபாடலமூலபீடத்தினிற்போற்றுவோராங்குற்று
வருந்தியேவிரதத்தினற்பஞ்சதசாட்சரிமதித்தேழும்
பொருந்துநூற்றுருசெபித்தவரெய்துவர்புந்திவேண்டியவெல்லாம்.

நவமமாகியநாள்களும்விரதராய்நவமியினுலகனைத்து ..
தவமுவந்தருள்பராபரைபூசனைசமைத்துமுன்பணிந்தோர்கள்
சினிவயருந்தவச்செல்விதனருளினாற்செல்வம்யாவையுமுற்றுப்
புவனம்யாவையும்போற்றிடவரசராய்வெண்கொடைபொலிகிற்பார்

பஞ்சபாதகப்பழவினைத்தொடர்ச்சியும்பசுவதைமுதலியாவு
மஞ்சிவந்தடைந்தவர்பொருள்கொண்டபாதகங்களுமதிபாவம்
வஞ்சனைத்திறத்தாற்பிறர்பொருள்கவர்ந்துண்டபாவமுமாறு
நெஞ்சினுன்னியேயருந்தவத்தலைவியைநித்தலுந்தொழுவோர்க்கே.

ஞானநாயகன்பாடலாதனைபெரியநாயகியன்னை
தேனலம்பும்பூந்தாமரைத்தாள்களைத்தெரிசனவிதியாலே
யானவன்பினிற்பணிந்தருந்தவவுமையடியிணைபணியாரே
லீனரப்பலமெய்துறார்கடையராயிரப்பரிப்புவியெல்லாம். (கக)

மங்குன்மாமதிலைதவரும்பாடலமூலத்தின்மணியார்ந்த
துங்கபீடத்தினம்பரரூபியாய்வாலையாயச்சுரர்போற்றத்
திங்கள்வாண்முகக்கனனியாயருந்தவத்திறைவியாந்தேவியிணைப்
பங்கயப்பதஞ்சதமகன்மாலயன்போற்றியப்பதம்பெற்றார். (கஉ)

ஈரைந்தாகியவெள்ளிவாரத்தினினிந்திரன்றனிதேவி
பாரஞ்செவவிசெய்கரசத்தினனஞ்செய்தருந்தவவுமைபாதந்
தேருமந்திரஞ்செபித்துபவாசியாய்ச்சந்தனமலர்தீப
மீரவன்பினிற்பலகனிபாகிலையிண்டைமாலிகைத்தொங்கல். (கங)

கம்பலங்கமுகரம்பைதோரணத்தினற்களபவாசமதத்தானுங்
கொம்பனார்நடங்கோலவாத்தியத்தினும்பூசனைமுறைவின்றி
யெம்பிராட்டிதாட்கியற்றினள்வலஞ்செய்தூதானமீந்தெமையாளு
மம்பைதன்றிருவருளினற்சயந்தனமைந்தனையடைந்தாளால். (கச)

முத்திநல்குபாடலமூலத்தின்முளைத்தருள்சுடர்ச்சோதி
சத்தியாகியவருந்தவநாயகிதாட்டுணையருச்சித்துப்
பத்துவெள்ளிவாரத்துபவாசியாய்த்தானம்யாவையும்பாலித்
துத்தமச்சுரரிந்திராதியரைப்பெற்றதிதியுந்தனண்மன்னோ, (கரு)

வாணிசோமைரோகணிபிருதிவிபிரகுதியாதியமாதர்
சேணுலாமலர்ப்பாதிரிமூலத்தினமபிகைத்திருத்தாளின்
பூணுமாறன்பினருச்சனைவிதியினற்போற்றினர்பெற்றார்கள்
பேணுமைந்தர்கள்கல்விசெல்வந்திருப்பெருந்தவமுதல்யாவும். (கசு)

சுந்தரத்தனத்துணையராங்கார்த்திகைத்தோகையர்கரசத்தின்
வந்துமூழ்கினர்தானம்யாவையுஞ்செய்துபாடலவனமூலத் [துக்
கைதந்தொடொன்றெனும்வெள்ளிநாளருந்தவ விறைவியைப யருசசித்
தந்தவேளினைமகன்மையாவடைந்தனர்கருதியபலன்பெற்றார். (கஎ)

கும்பமாமுனிவசிட்டன்காசிபன்பரத்துவாசன்கோதமனேனை
யிம்பர்வாழ்தருகாதியிறுதியாமிருடிகள்கரசப்பேர்
வம்புலாமலர்த்தடத்தினிறுனஞ்செய்திறைவியைவழிப்ட்டுக்
கொமபஞர்கடம்பனியரொடுந்தவங்கோதறப்புரிந்தார்கள். (கஅ)

திருதியேமதிசுருதியாதியவருத்தினதனுத்திகழ்நாமதீ
தருவைவேமரூபல்பெய்ரேமவிக்கிரகையேயலர்மாதை
பேரூருசக்ந்தைதிவவியகெந்தைதற்கையேகவுரிபொற்றொடியரூனை
மருவுருத்திரர்பதின்மரோடொருவருந்தேவிதாள்வழிபட்டார்.(கசு)

இருவர்சேர்திருபதின்மாமாதித்தர்கரசவாவியையெய்திப்
பொருவிலின்பருளலங்கரநான்மும்புரிந்திருந்தவஞ்செய்து
கருணைவல்லியாமருந்தவவன்னையைக்காலங்கடொறும்போற்றிப்
பரிவினெய்தியேசொச்சையாதியதங்கள்பாரியொடுறைந்தார்கள். ()

சொச்சைமச்சையேவிபாகரியமுகினிற்சொல்லியபிரக்கியாசு
கச்சூறுந்தனநிருமலேசாயையேகவியாணியெனுந்தேவி
விச்சைரூபையார்தருணையேதனுவொடுசுபாங்கிவிண்மணிசேரு
நச்சுலாம்விழிச்சுபையொடுமப்பிறைநங்கைமார்வெய்யோர்க்கே. உக

கனகரூபமாம்பாடலமன்றத்திற்காயத்தின்வடிவான
வனசகயூர்வர்க்கும்வரமருளருந்தவவம்பிகைப்பதம்போற்றி
வினையினீங்கியம்மெல்லியலாரொடும்வீட்டின்பமடைந்தார்க
ளளேனயரென்பதுகடன்மணலெண்ணினுமெண்ணுறுதமக்கம்மா

சுத்தமந்திரச்சொருபபாடலகிழற்றேன்றுசிற்சுகரூப
சத்திமாம்புகழெண்ணிப்பல்லுகங்களிற்சாற்றினுமுடியாதா
னிததனுகியசிவக்கொழுந்தீசனேகிரைத்துரைத்திடுமெல்லா
லெத்திறத்தினுமெமமனோர்க்கரிதெனவியாதனேயிசைத்தானல். ()

கன்னியாகியவருந்தவநாயகிகயிலைநாயகனேவ [து
மின்னாடுறோடும்போந்திருந்தவஞ்செய்தமேன்மையால்வியப்பெய்
மின்னமாபுரங்கன்னிமாநகரருந்தவவனமெனும்பேரா
மன்னயாவருந்துதிப்பர்கள்வேறுயாம்வகுப்பதென்முனிவீர்காள். ()

வெள்ளிவாரத்தினருந்தவநாயகிவிரைமலர்த்தாள்போற்றி
யுள்ளமின்புறவின்பவீடடைந்தவாறுரைத்தனமுரைக்கின்றுங்
கள்ளவிழ்ந்தலர்பாடலமூலத்தின்மேன்மையுநகனிவர்க்கந்
தெள்ளிதிற்றருமத்தருரூபமுங்கேட்பவர்சிறப்பெய்த. (உரு)

அருந்தவநாயகி பூசைச்சருக்கம் முற்றிற்று.

ஆகச்செய்யுள் அஎகூ.

# அருந்தவநாயகி பூசைச்சருக்கம்.



சிவபூசைப் பேற்றால் சுரருலக வரசுரிமையைப் பெற்ற விந்திரன் முதலிய தேவர் மயனென்கிற சிற்பியால் பொன்னான் மிக்க வனப்பமைந்த திருக்கோயில் கட்டுவித்து அருந்தவ நாயகியை யெழுந்தருளப்பண்ணித் திவ்வியாபிஷேகஞ் செய்தருச்சித்துஉலவா வின்பமுற்றனர். அருந்தவநாயகியாரு மவ்வாலயத் தெழுந்தருளி வழிபடு மடியார்க்கு அட்டமாசித்தியு மெய்துறக் கடைக்கண்ணால் நோக்கி யருள்புரியா நின்றனர். அகளங்கையாகிய தேவியின் றிருவடித் தாமரையை யிதயத் தாமரையிற் சேர்த்துக் காலையிலெழுந்து கெடிலநதியினுங் காஜதீர்த்தத்தினும் மூழ்கி லலாடமுதலிய விடங்களில் விபூதி தரித்து உருத்திராக்கமாலை பூண்டு நித்தியானுஷ்டானத்தை முடித்துச் சத்தி பஞ்சாக்ஷரத்தைச் செபித்து இரவு வுணவின்றியேனும் முற்று முணவின்றியேனுமிருந்து அம்பிகையை நறுமணநிறைந்த பூமாலையினா லலங்கரித்துச் சுக்கிரவாரத்துத் தரிசிப்போர் உலகில் நினைத்ததையெல்லாம் பெறுவர். அங்காரவாரத்தில் மாலைப்பொழுதில் நூற்றெட்டுத் தாமரைப்போதினா லருச்சித்து நூற்றெட்டுத் திருவிளக்கேற்றினோரும், புரட்டாசிமாதத்தில் சுக்கில பக்ஷத்தில் பிரதமைதொடங்கி மஹாநவமிவரையில் ஒரு பொழுதுண்டு பாடலிமூலதரி வெழுந்தருளியுள்ள அமலையாகிய அருந்தவ நாயகியையருச்சித்துப் பஞ்சதசாக்ஷரிமந்திரத்தை நூற்றெட்டுமுறை செபித்தோரும் பிரமஹத்தி, பசுக்கொலை, புறங்கூறல், கட்குடித்தல், பிறர்பொருள்வெளவல், சிவதூஷணை, சிவசாத்திரநிந்தனை முதலிய அதிபாதகங்களும் நீங்கப்பெற்று இம்மையில் இவ்வுலக வரசாட்சி யெய்தி மறுமையில் பேரின்ப மெய்தாநிற்பர். ஞானநாயகனாகிய சிவக்கொழுந்தீசனைப் பெரியநாயகியம்மையோடு அருந்தவவுமையம்

பிகையையுந் தரிசிக்காதோர் ஒவ்வொரு பிறப்பிலும் வறிஞராகிப் பல்லாரில்லந்தோறுஞ் சென்றிரவாநிற்பர். 'நாராயணன் பிரமன் வலாரி முதலிய தேவர்கள் அருந்தவ வுமையம்பிகையைப் பூசித்தே காத்தல் படைத்தல் அரசுபுரிதல் முதலிய பதவியைப்பெற்றனர். இந்திரன் மனைவியாகிய புலோமசை பத்துச் சுக்கிரவாரம் சுரபித் தீம்பாலாட்டிப் பொற்பூவா லருச்சித்துச் சயந்தனென்னும் புத்திரனைப் பெற்றனள். காசிபரின் மனைவியாகிய அதிதியென்பவள் ஈரைந்து பிருகுவாரத்திற் பூசித்தே ஆதித்தியரைப் பெற்றனள். கிருத்திகைமுதலிய பெண்களறுவரு மவ்வாறே பூசித்து முருகக்கடவுளை மகன்மையாய்ப் பெற்றார். பன்னிரண்டுருக்கரும், வசிஷ்டர் முதலிய விருடியரும் திருதி முதலிய தேவகன்னியரும் அனேக விருடிகன்னியரும் பூசித் தளவிறந்த வரங்களைப் பெற்றனர். பாதிரி விருக்ஷத்தின் மூலத்தில் கனகமயமாகிய திருவாலயத்திலெழுந்தருளிய அனகையாகிய அருந்தவவுமையம்மையைப் பூசித்து அருங்கதி பெற்றோர் என்னுமளவிடற்பாலரோ? சிதாகாசவடிவா யெழுந்தருளியுள்ள அம்பிகையின் மான்மியங்கள் புலிசைநாதனலன்றித் தம் மாலு முரைக்கமுடியாதனவென்று எம்தாசிரியராகிய வாதராயணருங் கூறினர். திருக்கைலாசத்தில் எம்பிரானைவக் கன்னிவடிவங் கொண்டு உமாதேவியார் தேவகன்னியரெண்மர் சூழத்தவஞ்செய்த காரணத்தால் கன்னிபுரமென்ற திருநாமத்தோடு இத்தலம் விளங்குமென்பதல்லதல் வேறென்னுரைக்கவல்லேன். முனிவீர்காள்! இதுகாறும் அருந்தவநாயகியைப் பூசித்து அடியார் பேறு பெற்றதையுரைத்தாம். இனிப் பாதிரிவிருக்ஷத்தின் பெருமையை யுரைப்பாமென்று சூதர் நவில்வாராயினர்.

---

# பாடல மூலச் சருக்கம்.

மந்திரங்கள்வேதம்வேதாந்தமலிசாத்திரங்க
டந்திரங்களேயுகங்கடோறுந்தனிவடிவா
யிந்திரன்மாலீறிமிருந்தேவர்க்கருள்சுரக்கும்
பைந்தருவாம்பாடலத்தின்வைகும்பராபரமே. (க)

காரணனுங்காரணியுமின்னுங்கடைஞாழ
லாரணத்தின்மாமுடியாமியாங்கிவடிவான
பூரணஞானப்பிழம்பாம்பாதிரியைப்போற்றினவர்
நாரணற்குமெட்டாச்சிவகதிக்கேநண்ணுவரால. (உ)

ஒன்றிரண்டுமூன்றுநான்காகியுகபேதத்தரு
வின்றுநிலவுகின்றபாதிரிநீழற்சபஞ்செய்
தொன்றுமனமுடையோரக்கொன்றனந்தமாயவையே
யென்றுமருள்சுரக்குமிட்டசித்தியானவெல்லாம். (௩)

அண்டபகிரண்டமனைத்தினுக்குங்காரணமா
யெண்டருஞானப்பிழம்பாமிருவருருவாகையினன்
மண்டித்தளிர்த்துவளரினுலகம்வளருங்
கொண்டவளமாறக்குறைந்துயிர்கண்மாழ்குமால். (௪)

அரியகயாதிரத்தணிகொள்வடமூலப்
பெரியவடிவாகிப்பிரானிடமாய்வைக
விரிதருபல்போகம்வேண்டுவனவீசிப்
புரியுமருள்பழுத்துப்பொற்பின்விளங்குமால். (௫)

வேறு.

கோவிதாரமாமயோத்தியின்மதுரையிற்குருமலர்த்துழாயாரூர்
தேவர்சேர்தசகூவிளாரணியத்துஞ்சீபலமெனமன்னு
மாவின்ரூபமாயம்பிகைப்பூசித்ததலமெட்டினரசாகுந்
தாவில்சிந்துரற்றுவினிற்குருக்கத்திவடிவ்மாய்த்தழைத்தோங்கும். ()

வன்னிக்கேத்திரம்பத்தினும்பலாசமாமருதமாககரெட்டிற்
றுன்னருச்சுனவடிவமாம்வன்னியாமைஞ்செனத்தொகைசெய்யுந்
தன்னையொப்பரும்வயித்தியநாதமாத்தலங்களிற்புலியூர்ற்
சொன்னபேரெழிற்றில்லையாந்தாலமாஞ்சுருதிசேர்பனந்தாளின்.(எ)

கும்பமாமுனிபூசித்தகுறும்பலாமுக்களாவேய்சூதஞ்
சம்புகொன்றையாய்க்குழலின்வாய்மொழியிறைகளாலிங்கந்தழைத்
மெம்பிரான்றிருவேகம்பஞ்சம்புலிங்கேசுரமாதிகேச [தோங்கு
நமபர்வாழ்தலத்துறைதருமதுரையிற்கடம்பெனநயந்தோங்கும்.(அ)

குருந்திலந்தையாய்ப்பெருந்துறை யுத்தரகோசமங்கையுமன்னும், விரிந்தவாலெனமருவும்வெண்காட்டினின் மகிழெனவிளிந்தோங்குந், தெரிந்தவொற்றியூர்க்கந்தத்தலத்திலோர் மூலமாய்த்திளைத்தோங்கும், பொருந்தும்பொன்னுலகத்தினிற்பாரிசாதங்களாய்ப்பொலிவெய்தும். (கூ)

உடையநாயகனருளினித்தலத்தினிற்பாடலவுருவாகித்
தடைபடாவரந்தரிசனம்பரிசனஞ்சார்ந்தவர்க்கருள்செய்து
விடையினயகனம்பிகையிருவரும்வீற்றிருந்தணிசெய்யு
விடைவிடாதவர்கலப்பினுலுறுமெனிவியம்பலாம்படித்தன்றால். (ய)

முன்பருந்தவநாயகிதவஞ்செயமுதிருமண்புருவாகி
யின்பின்வேண்டியபூக்களுமடைமுதலினமெல்லாந்
தன்பெருங்கரக்கோட்டினாலுதவியேநிழல்செயுந்தனிமூலம்
பின்பிரந்தவர்க்கிகபரபலன்களைப்பெருக்குதறிடமாமால். (௯௧)

கோங்குசண்பகம்பிச்சிவெள்ளெருக்குச்செங்குவளைதாமரைபுன்னைத்
தேங்கமழ்கொன்றைஞாழலுன்மத்தங்கான்செழித்தலர்தாழம்போ
தோங்குபாதிரிகாலைபூமாலையுமுகைத்தவிழ்ந்துமைபூசைக்
காங்குவேண்டியதருணத்தினுதவிமேற்புதஞ்சொலற்பாற்றே. (௯௨)

வாழைமாங்கனிமுந்திரிகைப்பழமாதளம்பழந்தெங்கிற்
றுமூக்கினிசணகமேவெள்ளரிவிளாம்பழந்தைநாவல்
கோழையற்றதோரிலந்தையின்கனியிவைமுதற்கனிகொண்டோங்கி
நீழல்செய்திடும்பாதிரிதேவியார்க்குதவிணைநினைதோறும். (௯௩)

மாலைநண்பகலாகியபொழுதினின்மதிமுக்த்துமையெய்துக்
கோலமல்கியபாடலமூலத்தைக்குறித்தருளொடுநோக்கிற்
பாலலோசனனருளினாற்றசவிதபண்ணியமுதவிப்பின்
னீலவலர்குழலிறைவிக்குநிழல்செயுமிந்நகர்தனின்மன்னே. (௯௪)

அருந்தவத்துமைபூசனைவிரதத்திலருந்துமற்றவைக்கெல்லாம்
பொருந்தவேண்டியபூக்கனிபட்சியம்பொலிவுறவளத்தாற்றி
லிருந்துசெய்யுமிப்பாடலமூலத்தைத்தரிசித்தோர்வினைதீர்வர்
தெரிந்துநோக்கிமுன்மங்கணர்பரிசித்துத்தீர்ந்தனர்வினையெல்லாம்.()

பாடல மூலச் சருக்கமுற்றிற்று.

ஆகச்செய்யுள் ௮௮௮.

## பாடல மூலச் சருக்கம்.

உலகெலாம் ஜபித்து உய்வதற்குக் காரணமாகிய மஹா மந்திரங்களும், வேதங்களும், உபநிடதங்களும, ஆகமங்களும், சாத்திரங்களும், இந்திரன பிரமன் விஷ்ணு முதலிய தேவர் முனிவர் முதலிய வடியார்கட் கனுக்கிரகிக்கும் பொருட்டுப் பரசிவம் கருமசாதாக்கியத் திருவுருவங்கொண்டு சுயம்புவாய் எழுந்தருளி யிருக்கின்ற கடைஞாழலெனறு காரணப்பெயர் பூண்ட கடைஞாழலூ ரெனகிற தலத்தில் நான்கு யுகங்களிலும ஒரே படித்தாய வடிவத்தோடு தளிராலும்பூக்களினாலும் நிரம்பப்பெற்ற பாதிரி விருக்ஷமாகிச் சிவலிங்கப் பெருமானுக்கு நிழல் தராநினறன. இந்த மந்திரம் வேத முதலியவைகளே இறந்தோர்க்கு முத்திதருங் கயாதீரத்தில் ஆலமரத்தின் வடிவாகிக காயத் கடவுளைத தனது ஒரிலையில் தாங்கித் தன்பால் வந்தவருக்கு வேண்டிய போகஙகளை யளியாநிறகும். அயோத்தியில் கோவிதாரவிருக்ஷமாகியும், வடமதுரையில் பசிய துளசிச்செடியாகியும், தேவர்கள் வசிக்கப்பெற்ற பில்வாரணியத்தில் ஸ்ரீபல விருக்ஷமாகியும், அம்பிகை பூஜித்த தலங்களெட்டினு மரச விருக்ஷமாகியும், சிந்துத் தீபத்தில் மாதவி விருக்ஷமாகியும், மணிக்ஷேத்திரம் பத்தினும் பலாசவிருக்ஷமாகியும், மருதக்ஷேத்திர மெட்டினும் அருச்சன விருக்ஷமாகியும, திருப்பனந்தாள் எனனும் க்ஷேத்திரத்தில் தால விருக்ஷமாகியும், அகஸ்தியர் பூசித்த திருக்குற்றாலமென்னும க்ஷேத்திரத்தில் குறும்பலாவாகியும், திருக்கருவூரில் களாவிருக்ஷமாகியும், தென்மதுரையில் கடம்பவிருக்ஷமாகியும், காஞ்சியில் மாமரமாகியும், திருவொற்றியூரில் மகிழமரமாகியும், சிதம்பரத்தில் வடவிருக்ஷமாகியும், திருப்பெருந்துறையில் குருந்தமரமாகியும், திருவெண்காட்டினில் ஆலமரமாகியும், இன்னும் மற்றுள்ள ஒவ்வொரு சிவக்ஷேத்திரங்

களிலும் பரசிவத்திற்கு நிழலைத் தரும்விருக்ஷமாகிப் பொன்னுலகிற் பாரிஜாதமாகிப் பொலியாநிற்கும். சிவபெருமானது கிருபையினால் இந்தத் தலத்தில் பாடலவடிவாகிச் சார்ந்தவர்க்கு ஞானந்தந்து ஜபம் பூஜை முதலியன செய்தோர்க்கொன்றனந்தமாகக் கொடுத்து இடைவிடாது தேவன் தேவியாகிய சிவக்கொழுந்தீசனுக்கும் பிரகந்நாயகியாருக்கும் நிழல் செய்யா நிற்கும் என்றா லதன் பெருமையை என்னுளவிட்டற்பாலதோ? முன்னருந்தவநாயகியாகிய உமாதேவி அவ்விருக்ஷத்தினடியிலிருந்து தவஞ்செய்ய, வேண்டிய பலவகைப்பட்ட மலரையும் பலவிதக் கனிகளையுந் தந்தது. பின்னுந்தன்பால்வந்திரந்தவர்களுக்கு வேண்டியதைப் பின்னுந் தராநிற்கும். காலையிலும், உச்சிப்பொழுதிலும், மாலையிலும் அம்பிகைவந்து திருநோக்களிக்க நினைத்த பலகாரங்களும் விரதகாலத் தண்ணுறுணவுகளையுங் கொடாநிற்கும். தன் நிழலிலிருந்தோர், பரிசித்தோர், இவர்கட்குப் பண்டைவினைகளைத் தொலைத்து ஞானந்தராநிற்கும். மங்கணமுனியென்போன் அந்தப் பாதிரி விருக்ஷத்தையடைந்து வினைதீர்ந்து உய்ந்தனன். அக்கதையைக் கூறுகின்றேமெனச் சூதர் நவில்வாராயினர்.

## மங்கணர் சாபந்தீர்த்த சருக்கம்.

மங்கணமுனியென்போனராவணிமதிவேணிச்
சங்கரன்மகிழ்கின்றபாடலவனஞ்சார்ந்தே
யங்கவன்வினைபோனதருள்கெனமுனிவோர்கள்
பொங்கியவருளாலேசூதனும்புகல்கின்றான். (௧)

பங்கயமலிவாவிப்புட்கரபதிதன்னிற்
புங்கவர்புகழ்கின்றபூசுரன்மதிமேலோ
னிங்குளகலைவேதம்யாவையுமுணர்கின்றோன்
மங்கணமுனியென்பான்வைகுமந்நகர்தன்னின். (உ)

அருந்தவம்வருடங்களாயிரம்புரிந்தானப்
பெருந்தவன்பிரமத்தோடொன்றியபேறுளன்
றிருந்தவிந்திரியங்கள்கரணங்கடினந்தோறு
மருந்துவதிலைகாய்களன்றியொன்றயிலாதான். (௩)

வைகறையெழுந்தோர்ந்துமறைமுதலுடிவாழ்த்திச்
செய்வினைக்கடன்முற்றித்திருந்தருச்சனைசெய்து
கைகரமில்லன்பினடகொகேனிநண்ணிக்
கொப்தனநிவேதித்துக்கொள்பவனுடோறும். (௪)

கரினமிகமன்னிக்கானதுவளமெய்த
வேனிலுந்துளிசெய்துசொரிதரும்வியப்பாலச்
சோலையின்மலிகாடுநெருங்கினதுதைவுற்றுப்
பான்மையின்முனிசென்றுபறித்தனன்பலபன்னம். (௫)

கண்டகம்பெரிதொன் றுகரத்தினிற்கா றன்னிற்
புண்டரும்படிகீறப்பொசிந்தபச்சிலைநீரே
கண்டனன்செந்நீரைக்கண்டிலன்கமழ்வுற்ற
துண்டிவ்வதீநாற்றமிலவெனமகிழ்வுற்றான்.

தம்வழியெனையீர்த்ததத் துவக்குழாமெல்லா
மெம்வழிவரலால்யாம்புரிதவமரிதென்ன
விம்மினன்கர்யத்தைப்பார்த்தனன்வியப்புற்று
நம்மையொப்பவர்யாருமிலரெனநகர்நின்றான்.

மெய்விதிர்த்தகநெக்கநபான்ந்தவிளைவுற்றுக்
கைநிலைமேற்கொண்டுகளித்தனனடஞ்செய்தான்
செய்தவமிகையாலங்குள்தரித்திராளகம்
வையகத்தவராடவாடினரொருமாதம். (அ)

தாண்டினன்மலைதன்னைத்தாண்டினன்மரமற்றுந்
தாண்டினன்கரையாவுந்தாண்டினனதிதன்னை
யாண்டொருநாடன்னிலருந்தவர்தூமப்ப
ராண்டிருந்தனரின்னோன்காறலையறைந்தன்றே. (கூ)

மங்கணன்பதஞ்சென்னியுற்றிடத்தூமப்ப
ரெங்குமன்னழலெல்லாமோரிடைச்செறிந்தென்னப்
பொங்கினர்முயல்போலத்தாண்டினைபொறியில்லோய்
மங்குடைச்சசமாகிப்படர்தியென்றுரைசெய்தார். (ய)

அவவுரைசெவிப்புக்கபோதவர்முயலாகி
யிவவிடரெனக்குற்றதினிப்புரிகுவதென்னென்
றுய்வகைதனைநாடித்தூமப்பரெனவோர்ந்து
செய்வினைப்பயன்றீரத்திருவருள்புரியென்றான். (கக)

என்றிவன்பலகாலுமிரங்கிரந்தடிபோற்றக்
குனறனதவமேலோர்தூமப்பர்குழைவுற்று
நன்றுநின்னலைதீரப்புகலுதுநாங்கேட்டி
யென்றெடுத்துரைக்கின்றார்சாபமதகலெல்லை. (௧௨)

சதமெனும்வருடங்கள்சசவுருவிதுமன்னிப்
பதமதிலொன்றூணம்படைத்தனைகாலெ.ல்லாங்
கதமொடுதிரிகின்றகாலையினேர்நாளி
விதமுறுநல்லூழ்வந்தெய்துறுகாலதனின். (௧௩)

பொற்பொதுவொளிர்கின்றபுலிசையின்வடபாலி
னற்புதனுறைகின்றவதிகையின்கீழ்பாலின
பற்பலநதிமன்னுமவாரிதிமேல்பாலின்
சொற்பயில்காமீசத்தென்றிசைத்துதைநாபபண். (௧௪)

மங்களவுருவானபாடலவளர்மூலத்
தங்குமைசிவைதேவியருந்தவம்புரிகின்ற
துங்கமதுடைத்தந்தத்தலததினிற்சுரர்போற்றச்
சங்கரனுறைகின்றானசகத்திரகலையோடும். (௧௫)

வேறு.

தாரணிக்கொருதிலகமாம்பாடலத்தனிவனநீசார்ந்தப்
பூரணப்பொருள்வைகுமத்தலத்தினப்புனத்திடைவசிப்பாய்ப்பி
ஞாரணத்தருவிறைவர்க்குக்கார்த்திகைத்திங்கள்வாரத்தன்பாய்த்
தோரணத்திபேந்தீபமாலிகையெதிர்தோன்றநீகாண்பாயால். (௧௬)

கண்டகாலையின்முன்புள்ளவடிவமுஞ்செய்கையுங்கரந்துற்றுத்
தெண்டிரைப்புனற்கரசதீர்த்தத்தினிற்சென்றுநீபடிந்தாடிக்
கொன்றைவேணியம்பகவனைத்தேவியைத்தரிசித்துக்குளிர்வாவித்
துன்றுமற்றுளதீர்த்தமுமிலிங்கமுமடைவினிற்றுதித்தாடி. (௧௭)

உத்தரப்புலிசைத்திருநகரதனிலுள தருவையுளததன்பாற்
சிததிரமூலலிங்கேசுரர்புரிதருதிருவ்ருட்சிறப்பாலே
கொத்தையானவிச்சாபமுநீங்கியமங்கணமுனிக்கோவாய்ப்
பத்திசெய்தவஞ்பராபரனருளினாற்பாகதியுறுவாயால். (௧௮)

என்றெடுத்துரைத்தருளியதூயப்பரிருங்கழல்பணிந்தன்பாய்
நினறுமுங்கணரங்குளநீர்த்தமுமிலிங்கமுநினைத்தேத்தி
கனறுமின்னருள்புரிகெனத்தூமப்பாயாவையுநவைதீர
வன்றுமங்கணருளநாட்காளுமுவகையினலன்பொமேறைகின்றார். ௧௯

பாயிரம்புணர்பாவினிலுடங்கிடாவளஞ்செய்பாடலமூது
ராகிரங்கலேட்புணாதருமற்புதமூலநாயகன்கீழ்பான்
மேயதீர்த்தமாஞ்சிவகரதீர்த்தமவ்விமலன்றன்கரத்தாலே
நேயமுற்றெழிறகருணையாற்புரிதலினிலவுமப்பெயராலே. (௨0)

ஆணவப்பெருநோய்கழித்தின்பவீடளிக்குமப்பெருந்தீர்த்தம்
பேணுமற்றுளதீர்த்தமியாவைக்குமேலாகுநம்பிழைதீர்க்குங்
காணுமங்களபோகம்யாவையுமளித்தந்தத்திறகடைஞான்முற்
றூணுவின்னடிப்பங்கயநல்குமாற்சார்ந்துமூழ்கினர்க்கமா. (௨௧)

சித்தராயருள்சிவக்கொழுந்தேசுரர்க்கக்கினித்திசைதன்னிற்
பத்திமன்னிபவக்கினித்தேவனேர்தீர்த்தம்பண்டுளதாங்கு
வித்தகந்தருமிலிங்கமுமக்கரையேவுவிததருச்சித்துச
கததமேனியாய்மூலலிங்கேசனைத்துதித்துவாழ்ந்தனனமன்னோ. ()

அத்திடஞ்செய்துமுனியுபமன்னியனளப்பருந்தவஞ்செய்து
கொத்துலாமலாப்பாடலமூலத்தினகுடலடதிசைக்கோணிற்
பத்திசெய்தருச்சித்தனன்றன்பெயரிலிங்கத்தைப்பணிந்தேத்தி
முத்தராகுவரப்பெயரிலிங்கத்தைததொழுதமூதறிவோரே. (௨௩)

கும்பமாமுனிகூப்பமொன்றுக்கியேயுத்தரகுணபாலி
னம்பனற்புதவிலிங்கமூர்த்தாபித்துநாடொறுமருச்சித்தாங்
வம்புலாமலரருச்சித்தவவிலிங்கத்தைவழுத்தியமனத்தோர்க
ளிம்பர்வேண்டியயாவையுமெய்தியேயின்பவீட்டினில்வாழ்வார். (

அலர்ந்தபாதிரியுத்தரத்திக்கினிலவிர்தருமொருதீர்த்த
மலர்ந்தபேரெழிற்கவுரிநாமத்தினன்மற்றதன்கரைதன்னிற்
பலந்தருமவசுவிலிங்கமுமுருத்திரவிலிங்கமும்பானுபபேர்
நலந்தருஞ்சிவலிங்கமும்வைகுவநாடொறுந்தொழுவோர்க்கே.(உரு)

பொன்னிநாயகனுதவுபாலோடையிலுத்தரம்புணர்திக்கின
மன்னவேயெழுமெழுவராமிருடிகளருச்சித்தமாலிங்க
மன்னதன்கரைத்தக்கிணத்தவிர்தருமசுவினிமகாலிங்க
மின்னமூர்த்திகடரிசனமபுரிந்தபேரின்பவீடடைவாரால். (உ௬)

திங்கள்வான்முடிப்பாடலநாயகனிகேதனந்திசையெட்டும
பொங்குபூந்தடமிலிங்கங்கடேவர்களிருடிகள்புணர்விதசார்
செங்கதிர்ச்சுடரெழுதருகீழ்த்திசையிந்திரன்றருதீர்த்தந்
தங்குமத்தடக்குணதிசையப்பெயரிலிங்கமுந்தழைத்தோங்கும்.(உஎ)

சித்தர்பூசித்தவிலிங்கமுத்தரத்தினிற்சிறக்குமத்தடந்தன்னிற்
பத்தியாகவேகுய்யகர்பூசித்தவிலிங்கமேல்பான்மன்னு
மத்தகைத்தடத்தென்றிசைக்கின்னரரிலிங்கமாமான்மன்னு
முத்தாபோற்றுவாரத்தடக்கன்னவர்பெயர்களுமொழிவாரால்(உஅ)

மன்னித்திக்குபமன்னியதீர்த்தத்தினக்கினிமாலிங்க
முன்னஞ்சொற்றனமவவிலிங்கத்தயல்வித்தியாதரமூர்த்தி
நூன்னுமாங்கதனயறனிலியக்கர்மாலிங்கமாஞ்சுடர்ச்சோதி
யன்னதனயற்கந்தருவேசுரருத்தியாற்பணிவாரால். (உகூ)

ஆங்கயற்கருப்பூரமாவிலிங்கமுமவிரூமத்தடமன்றே
றோங்குபேர்களூற்றுதிக்கவும்பெறுமினித்தக்கிணதிசையோரிற்
றோங்குமேதியன்றநமதீர்த்தமுமதன்கரையினிற்றருமப்பேர்
பாங்குபெற்றதோரிலிங்கமுமெழுதருமபத்தியாற்பணிவோர்க்கே. ()

யாதவாள்பணிந்தேத்தியவிலிங்கமுமெழிறருமளகேசன்
போதமன்னியநகுடனேதிலீபனேயயாதியும்புணர்வித்தார்
வேதனக்கரைத்தன்பெயரிலிங்கமும்விதித்தனனருச்சித்தா
ரேதன்மன்னுமிவ்விலிங்கங்கடரிசித்தோர்நண்ணுவார்சிவலோகம். ()

தீர்த்தமாங்கதற்கவ்வகர்பெயர்களுஞ்சிறக்குமத்தீரத்தி
னுத்தராமுபமன்னியர்தவஞ்செய்தாங்கருச்சித்தாரிலிங்கத்தைப்
பார்த்திக்கீழ்க்கரைசைகதவடிவமாம்விதிலிங்கம்பணிந்தனபா
யேத்திமற்றையவிலிங்கமுந்தொழுதவரிருமையும்பெறுவாரால். ௩௨

நிருதிகோணத்திற்பூந்தடமிலிங்கமுநிருதிசெய்தனனன்பாற
பிரமனுங்குமோர்சிவலிங்கம்பூசித்துப்பேணியேதவஞ்செய்தா
னரனையந்தகன்சம்பரன்சலந்தரன்முசியேவலனாதி
பரவிராக்கதர்தங்கடம்பெயரினாற்றாபிததேபணிந்தார்கள். (௩௩)

வருணதிக்கினிற்பூந்தடமிலிங்கமும்வருணன்செய்தனனன்பாற்
பருதிசந்திரனபூமகன்புந்திதனபொன்னவன்பணிந்தேத்திக்
கவிநுமச்சிவலிங்கங்களத்தடக்கரைதனினில்வனப்பெய்தும்
பொருவிலாதவம்மூர்த்தியைத்தரிசித்தோர்போகம்வீடடைவாரால்

மூலலிங்கத்தின்குடதிசைவருணதீர்த்தத்தின்கீழ்த்திசைமுற்றும்
பாலலோசனவிலிங்கமாம்வியாக்கிரபாதர்வந்தருச்சித்தக்
கோலமன்னுமாலிங்கமும்பதஞ்சலிலிங்கமுங்குறித்தேத்துஞ்
சீலரிம்மைமேவித்தையுஞானமுஞ்சித்தியுஞ்சேர்வாரே. (௩௫)

மாருதத்தினின் மாருதவாவியுமிலிங்கமும்வகுத்தன்பால்
யாருமிளபுறமருத்தெனும்பகவனையியற்றினன்றன்றெற்குச்
சாருமாலிங்கஞ்சனிசெய்தான்வெள்ளியுங்கேதுவுஞ்சார்ந்தன்பு
கூரவத்திசையிராகுவுந்தாபித்துக்கோதறப்பூசித்தார். (௪௬)

உத்தரத்தினிற்குபேரமாலிங்கமும்வாவியுமுளதாக்கி
நிதத்தர்பூசனைபுரிந்தனனளகையங்கடவுளுநியதத்தா
லத்திசையினிலிருடிகளனைவருமன்பினிற்பரஞ்சோதிச
சுத்தமாலிங்கமவவவாபெயரினுற்றாபித்தே துதித்தார்கள். (௪௭)

வடகுணக்கெனுங்கோணத்தினிலிங்கமுமாவியுமனத்தன்பாற்
கடவுளாமியசானதேவனேயியற்றியேகனறக்கண்டார்க்
கடைவிலுலருச்சனைமுதலியாற்றியேதுதித்தனனருள்பெற்றுன
விடையிலுயகனவேண்டியவேண்டியாயகுதவினனவிருப்பாலே. ()

திக்குப்பாலர்களபூசித்தமூர்த்தியுந்தீர்த்தமுமுறைசெய்தாந் [த்
தொக்கதீர்த்தத்திறனஞ்செய்தக்கடதலிங்கத்தைத்தொழுதேத்தி
நக்கதோததிரயபுரிந்தரும்பணிவிடைக்குரியராந்தவத்தோர்கட்
கக்கணத்தினில்விரும்பியசித்தியுமாயுவுமுளவாமால். (௪௯)

கோணமெட்டினுமட்டமாசித்தியுங்கொடுத்துறுமிடர்தீர்த்துக்
காணவன்பினிறயணிபவாக்கருளபுரிகணபதியிருநால்வ
ராணவத்தினினவலிதொலைத்தப்பருமுத்தியுமடைவிப்பார்
பூணுமாலிங்கசாத்தியேபூசித்தோர்புரந்தரற்கிறையாவார். (௫௦)

வேறு.

அமலசாந்திதிவவியந்தில்லையெனும்பெயரமைந்த
நிமலமன்றுபாலோனடயினியதமாயுறைவார்
தமலமற்றவர்புலிமுனிபதஞ்சலித்தவர்கள்
விமலராயஇன்மூழ்கினோர்விருப்பவீடடைவார். (௫௧)

தேவமாதாகளமலபாலோடையின்புரத்
தாவினோங்குகந்தாவொரிலிங்கமுமமைத்தே
கூவலந்தந்தவிடந்தொறுமமைத்தனர்குழகர்க்
காவதாமருச்சனைபுரிந்தருளின்வீடடைந்தார். (௩௨)

வேதமன்னியவிருக்கொடுசந்தசுவிமல
போதமோதியவாக்கியமந்திரம்புணர்ந்து
நாதன்மன்னியவிலிங்கம்பாலோடையினயந்து
வாதரத்துடனருச்சித்துமுதலிடெற்றனவால். (௩௩)

ஈசனெம்பிரானேனவலிசைந்தவத்திறைவி
பூசனைகுறித்தாகமநூல்புணர்ந்துபாலோடைத்
தேசுலாந்திருமஞ்சனஞ்சிங்க்கொழுந்தீசற்
காசையாலபிடேகித்தோரடைவர்வீடெளிதின். (௩௪)

தெக்கணத்தினுமுத்தரத்திசையினுந்திருந்த
பக்கமாலையினேகுமக்கெடிலத்தின்பாங்கர்
முக்கணெம்பிரான்பூசனையாற்றினர்முறையாற்
றக்கவாதித்தருருத்திரர்வசுக்களுஞ்சார்ந்தே. (௩௫)

அன்னார்பூசித்தவிலிங்கங்களனந்தமுமடைவிலா
முன்னிமேயதொழும்வித்தகர்புத்திரர்மடவா
ரின்னியத்தொடுமிகத்தினும்வாழ்குவரிமையோர்
பொன்னினாட்டினுங்கயிலையுமடைகுவர்புணர்ப்பால். (௩௬)

உத்தரத்திருக்கெடிலத்தின்மன்னியேயுவப்ப
னித்தலூழ்கியதவத்திசைநாரணத்தினீங்கிச்
சுத்தராகுவர்சுவர்க்கலோகத்தையுமடைவார்
பத்திசெய்தரனீபதாம்புயஞ்சேர்வர்பான்மையினால். (௩௭)

புலிசைநாயகன்பூருவதிசையினிற்பொலிந்து
மருவுசந்நிதிக்கெடிலமேதேவர்பேர்வயங்கும்
பொருவிறீர்ந்தமாமாங்கதிற்பொருந்திமூழ்கினர்க
ளிருமையின்பமுமெய்துவரிறைவனின்னருளால். (௪௯)

குடக்குவாழ்தருகெடிலத்தின்பிரிவினின்குணக்குத்
தடக்கையாற்புரியத்தர்கடவத்தினிற்றலைவ
ரடக்குமுச்சத்தாறுபதிற்றவர்களாமறையோர்
விடைக்குநாயகனருச்சனைபுரிந்துவீற்றிருப்பார். (௫௧)

வேதபாரகர்யாகங்களனைத்துஞ்செய்மேலோர
சோதிலிங்கத்தைச்சைகதவுருவினாற்றலக்கி
யாதரத்தினினருச்சனைபுரிந்தவவவிலிங்க
நாதனைத்தொழுவாரகடாநண்ணுவார்கயிலை. (௫0)

பத்திமன்னுபமன்னியவிலிங்கத்தின்கீழ்பால்
வித்தகந்தருபாடலமூலத்தின்விளங்குங்
கொத்துலாந்தொடையபாதிராசேந்திரன்குறித்து
நித்தலும்பணியிறைவனைத்தொழுபவர்நிமலர். (௫௧)

கெடிலமாநதியுத்தரதிசையினுக்கேக
வடிவுகொண்டருள்சித்தராம்பாடலவாச
ரடிகளேபிரிவித்தவப்பிரிவினிலணைந்து
கடிதுநானஞ்செய்தோர்சிவகதியினைக்கலப்பார். (௫௨)

கெடிலமாலைமங்கள௭ஞ்சிவப்பிரியமேகோளங்
குடிலமாதயன்சீலையினுற்பவங்கோதிற்
கடிகமழ்சிவத்தானமேசிவானந்தகரமே
படிவினின்மலஞ்சாளமேகருடமாநதியே (௫௩)

ஞானயவாகியபன்னிருநாமத்தையெவரு
நினையவாக்கினாற்றுதிசெயநித்தியநானம்
புனைதரும்பலனெய்துவர்புங்கவர்போகந்
தனையடைந்துபின்வெள்ளிமால்வரையினைச்சார்வார். (ருச)

பெண்ணைமாநதிகெடிலத்தினுத்தரம்பிறங்கு
மண்ணல்கார்த்திகையாணிபங்குனியினுமணைந்து
புண்ணியம்பொலிமஞ்சனலீலைசெய்போதி
லெண்ணிறேவருமுனிவருநானஞ்செய்திசைவார். (ருரு)

வதுகார்த்திகைவசுக்கண்மஞ்சனவிழாவகுப்பா
ரிந்துசேகரநகாதித்தர்பங்குனியெழில்சேர்
சுந்தரத்திருவிழாச்செய்பூரணியிற்றுலங்க
வைகுதொடாறெனுமுருத்திரரணிவிழாவமைப்பார். (ருசு)

ஆனதீர்த்தவாரித்தினம்பெண்ணையையடைந்து
ஞானநாயகன்மஞ்சனவிழாவினிறைன
மோனமுற்றுறும்விதியினறபுரிந்தவாமுடியாத
தானமாகியவெள்ளியங்கயிலைசார்ந்திருப்பார் (ருஎ)

வாவிகூபமற்றுள்ளதீர்த்ததடாகமாநதியுந்
தாவிலான்குளமடியினீசாகரநதிசேர்ந்
தோவிலாநசங்கமங்காதீர்த்தமாயுலவுந்
தேவதேவனததலத்தின்மான்மியமெவர்தெரிப்பார். (ருஅ)

வானுகததிரள்யாவுநல்விலிங்கமாய்வயக்கு
நாலுசிவத்வாகமவிதிவழியினனல்லோர்
கோலமாகவேபதிட்டைசெயயிலிங்கமோர்கோடி
பாலலோசனனுறைதிருப்பாதிரிப்புலியூர். (ருகூ)

முன்னுமோர்சசவுருவமாய்முனியுபமனியன்
பின்னுமும்முனியாகியவத்தலப்பெருமை
யன்னதாகவினியவணடைகுவாயென்று
நன்னயத்தினிற்செல்கெனமங்கணனயந்து. (சுO)

## வேறு.

விமலயோகியாந்தூமப்பருரைத்தனகேட்டன்பின்விடைகொண்டு
தமலநீங்குவான்பற்பலகானமுஞ்சார்ந்தவைகடந்திப்பாற்
கமலமுற்பலங்கயிரவமணங்கமழ்கெடிலத்தின்கரைசார்ந்தாங்
கமலமாகியகன்னிமாவனத்தினையடைந்தானால். (௬௧)

பெருங்குமாரணிப்பதினிற்பங்குகாற்சசருருமுனிநேர்ந்து
மருங்குமாதமுந்திரிதருகாலையில்விருச்சிகமாதத்திற்
கருங்கையானையையுரித்தவர்சோமவாரத்தினிற்கண்ணுற்று
றொருங்குதீபமாலிகையொளிபாடலநாயகனுமைமுன்பு. (௬௨)

கண்டவக்கணமுன்புதான்முனிவருங்கரணநினைவுற்றுக்
கொண்டசாபநீங்குபாயமுன்றாமப்பர்கூறியவையெல்லா
மெண்டகத்தெரிந்தவ்வண்ணம்புரிகுவான்கரசநதின்வந்தெய்தி
முண்டகத்தடமூழ்கினன்வலம்வந்துசந்நிதிமுன்புற்றனன். (௬௩)

இன்னவண்ணமேசிற்சிலநாள்களங்கிருந்தனனொருநாளிற்
றன்னையோர்சவராவந்தடுத்திடர்செய்வான்சார்தலுந்தணந்தோடிப்
பொன்னையொத்தொளிர்பாடலமூலத்திற்புதலினிற்புக்காங்கு
மன்னுபாடலம்பரிசித்தலிசேடத்தான்மங்கணமுனியாகி. (௬௪)

விதியினெம்பிரானருச்சனையாற்றியவவேதபாரகனயோகி
மதியினுடொறும்பற்பலதீர்த்தமுமுறைமையான்மகிழ்ந்தாடிப்
பதியின்மன்னியவிலிங்கபேதங்களையருச்சித்துப்பணிந்தேத்தித்
துதிசெய்தன்பொடுபாடலவனத்தினிற்சொலற்கருந்தவஞ்செய்தான்.

காலகாலனைச்சிவக்கொழுந்தீசனைக்கருணைநாயகிதேவி
நீலலோசனிபெரியநாயகியுமைபதங்களைநினைந்தேத்திச
சாலவன்பினிலொருப்படுமுளத்தினுற்றட்டுணையடைந்தானைக்
கோலமாதவனிகருபமன்னியன்காதையுங்குறிக்கிற்பாம். (௬௬)

பங்கணர் சாபந்தீர்த்த சருக்கமுற்றிற்று.

ஆகச் செய்யுள் ௯௱௪.

---

# மங்கணர் சாபந்தீர்த்த சருக்கம்.

பூக்களின் மலிவுற்ற தடாகங்களாற் சூழ்ந்த புஷ்கர க்ஷேத்திரத்தில் பூசுரகுலத்திற் பிறந்தவராய் வேதாகம புராணங்களில் வல்லுனராய் மங்கண ரென்கிற வபிதான முடையராய் ஒரு முனிவரிருந்தனர். அவர் அநித்தியமாகிய தனுகரண புவனபோகங்களிடத் தருவருப்படைந்து நித்தியமாகிய பரசிவ சரணாரவிந்தத்தில் வேணவா மிக்குடையராய் நித்திய விபூதியாகிய பேரின்பத்தைப் பெறும் பொருட்டு உட்பகையாகிய பஞ்சேந்திரியங்களைத் தன்வசப்படுத்திக் காமாதி ஷட்குணங்களைத் தொலைத்துக் கனியுங் கிழங்குஞ் சருகுமே யுணவாகக் கொண்டு ஸ்வாஸ பந்தனத்தால் வாழ்நாளைப் பெருக்கி யோராயிரம் வருடந் தவஞ்செய்து வந்தனர்.

இவ்வா றருந்தவஞ் செய்துவந்த வம்முனிவரர் ஒருநாள் சிவார்ச்சனைக்கு வேண்டும் பத்திர புஷ்பங்களைக் கொய்யும்பொருட்டு அவர் வசிக்கு மாச்சிரமத்திருந்து காட்டிற்குட் புக்குப் புழுவெட்டு முதலிய பழுதில்லாத மலர்களை யாராய்ந்து செல்லுழிக் காலிலுங் கையிலும் முட்கள் கிழித்தன. அதைக் கண்ணுற்ற முனிவர் முள்ளினால் கிழிக்கப்பட்ட விடத்திற் செந்நீ ரொழுகலின்றி நறுமணத்தோடு வெண்ணீர் கசிவதைப் பார்த்து "ஏது தவத்தாலெய்திய பேறாகும். இன்றேல் மனிதகாயத்திற் காயமுண்டாயின் தீநாற்றத்தோ டுதிரஞ் சோரலன்றி நறுமணத்தோடு நீரொழுக லெங்ஙனம்?" என்று கருதினவராய் மிகமகிழ்ந் துடல்குலுங்க வொருமாதம் வரையு மிடைவிடாது கூத்தாடிப் பின்னர்க் காடுமுற்றுந் தாவித்தாவிக் குதித்தோடினர். இங்ஙனம் முனிவர் கழிபெருங் களியாட்டினால் குதிக்கும் பொழுது ஆண்டு நீட்டித்த காலமாகத் தவஞ்செய்யுந் தூமப்பரென்னுந் தபோதனர் சிரத்தில் கால்பட்டது. அவர் மிகக் கோப

முடையராய் இவரை யின்னாரென்று கருதாமல் முயல்போற் பாய்ந்தமையால் நீ முடங்குகால் முயலாகுகவென்று சபித்தனர். அச் சாபம் வாய்ந்த மங்கணர் உடனே முயலாகித் தூமப்பர் திருவடியில் வீழ்ந்து "ஐயரே! யானறியாது செய்த விப் பிழையைப் பொறுத்துச் சாபத்திற்குத் தீர்வு உரைத்தருளுக." என்று குறையிரப்புழித் தூமப்பர் மங்கணரென்று தெரிந்து கனியிரங்கி "இந்தச் சாபம் நூறாண்டு வரையு முமமைத் தொடரும். அந்நூறுவதாண்டி னிறுதியி லுமக்கு நல்லூழுதிக்கும். அப்பொழுது தகராகாசத்திற் றிருநடம் புரியு மானந்த நடராஜ மூர்த்தியின் சிதம்பர க்ஷேத்திரத்திற்கு வடக்காய், பில்வவன க்ஷேத்திரத்திற்குத் தெற்காய், வீரட்டேசனெழுந்தருளி யுள்ள திருவதிகைக்குக் கிழக்காய், வாரிதிக்கு மேற்கா யுள்ள பாதிரி வனத்தில் சிவபெருமான் சிவக்கொழுந்தீசன் பாடலி நாதனென்கிற திருநாமத்தோடு அனந்த கலைகளுடனெழுந்தருளி யிருக்கின்றனர். அந்த உத்தமத் தலத்தில் நீ சென்று வசிப்பாய். அப்பொழுது கார்த்திகை மாதத்தில் சோமவார தினத்தில் பாதிரி மூலத்தில் சிவலிங்கத் திருவுருவங் கொண்டெழுந்தருளி யுள்ள சிவபிரானுக்குத் தோரண விளக்கேற்றித் தொண்டர் வழிபடு மற்புதத்தைக் காண்பாய். வேதப்பொருளாகிய பாடலேசரது தீபதரிசனத்தா லிச்சசவடிவந் தொலைந்து பூர்வஞானம் பெற்றுக் கரஜ தீர்த்தத்திலும் வாரிதி முதலிய மற்றைய தீர்த்தங்களிலும் ஸ்நானஞ்செய்து பாதிரி மூலத்தை யடைந்து தேவன் தேவியைத் தரிசித்து மற்றை யெண்டிக்கிலுந் தேவர் முனிவர்களாற் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ள சிவலிங்கப்பெருமானைத் தரிசித் தத்தலத்தே வசிப்பாய். அந்நாளில் தேவாதிதேவனாகிய சிவக்கொழுந்தீசர் திருவருளினா லிச்சாபந் தொலையப்பெற்று இருடிகளுக்குத் தலைவனாய்ப் பரகதியடைவாய்." என் றியம்பினர். அதைக்கேட்ட மங்கணமுனி மீட்டுந் தூமப்பரை வணங்கி யப்பாடலி வனத்துள்ள தீர்த்தங்களையுஞ் சிவ லிங்கங்களையுஞ் செவ்வையாக விரித்துரைத் தருள

வேண்டுமென்று பிரார்த்திக்கத் தூமப்பர் நவில்வாராயினர். பாயிர முகத்தால் வேத பிடையறுது நுவலாநிற்கும் பாடலி நாதனது திருவாலயத்திற்குக் கீழ்ப்புறத்தில்,பாடலேசன் தமது திருக்கரத்தா லுண்டுபண்ணியதும் ஆணவம் கன்மம் மாயை முதலிய மலங்களைப் போக்கி வீட்டின்பந் தருவதாகிய கரஜ தீர்த்தமென் றொன்றுள்ளது. பாதிரி விருக்ஷத்தின் வடமேற்கி லருந்தவ நிறைந்த உபமன்னியர் பிரதிஷ்டை செய்தருள்பெற்ற விலிங்கமும், வடகீழ்த்திசையில் செந்தமிழ்ப் பொதிகைச் சிறக்க வீற்றிருந்த பெருந்தவ வகத்திய ருண்டுபண்ணிய கூபமும், பிரதிஷ்டைசெய்த லிங்கமும், வடதிக்கில் அருந்தவநாயகி தன்பெயரா லுண்டுபண்ணின கவுரிதீர்த்தமும், அதன் கரையில் விசுக்களும் உருத்திரர்களும் இரவியும் பிரதிஷ்டை செய்த விலிங்கங்களு முள்ளன. ஆபத்பாந்தவராகிய பாடலேசரது திருவாலயத்திற்குக் கீழ்ப்புறத்தில் இந்திரன் தன்பெயரா லுண்டு பண்ணிய இந்திர தீர்த்தமும், அதன் கிழக்கே இந்திரன் பிரதிஷ்டைசெய்த இந்திரலிங்கமும், வடக்கே சித்தர் பூசித்த சிவலிங்கங்களும், மேற்கே குய்யகா பூசித்த விலிங்கமும், தெற்கே கின்னரர் பூசித்த விலிங்கமு முள்ளன.அக்கினித்திக்கில்அக்கினித்தேவன்தன் பெயராலொரு தீர்த்தமுண்டாக்கி யதன் கரையில் சிவலிங்கப்பிரதிஷ்டைசெய்து பூஜித்துத் திக்குப்பாலகனும் பேறுபெற்று வாழ்ந்திருந்தான். இவ விலிங்கத்திற் கருகே வித்யாதரர் இயக்கர் கந்தருவர் தத்தம்பேரால் பூஜித்த விலிங்கங்களும், முனிவர் பூசித்த கற்பூர விலிங்கமு முள்ளன. தென்திக்கில் இயம னுண்டுபண்ணிய யமதீர்த்தமும், இயமன் பிரதிஷ்டைசெய்து பூஜித்த யமலிங்கமும், பிரமன் குபேரன் தக்ஷன் திலீபன் யயாதி யாதவர் முதலியோர் தத்தம்பெயராற் பிரதிஷ்டைசெய்து பூஜித்த விலிங்கங்களு முள்ளன. நைருதிதிக்கில் நிருதி தன்பெயரால் பூஜிக்த விலிங்கமும் தன்பெயரா லுண்டுபண்ணிய தீர்த்தமும், நரகாசுரன் அந்தகாசுரன் நமுசி சம்பரன் சலந்தரன் வலன் முதலிய வசுரர்கள் தத்தம் பேரால் பிரதிஷ்டை

செய்து பூஜித்த விலிங்கங்களும், பிரமதேவன் பூசித்த விலிங்கமு முள்ளன. வருணதிக்கில் வருணதேவன் தன்பெயரா லுண்டுபண்ணிய தீர்த்தமும் பிரதிஷ்டைசெய்த விலிங்கமும், இரவி சந்திரன் செவ்வாய் புதன் வியாழ னிவர்கள் தத்தமபெயரால் பூஜித்த விலிங்கங்களு முள்ளன. பாதிரிமூலத் தெழுந்தருளியுள்ள மூலலிங்கத்திற்கு மேற்றிசை யொருபனை லிங்கத்திற்குக் கீழ்த்திசை முற்றும் பதஞ்சலி வியாக்கிரபாதர் முதலியோர் பூஜித்த பாவலோசன விலிங்கங்களு முள்ளன. வாயுத்திக்கில் வாயுத்தேவன் தன்பெயரா லுண்டு பண்ணிய தடாகமும் பிரதிஷ்டைசெய்த் சிவலிங்கமும், சுக்கிரன சனி இராகு கேது இவர்கள் தங்கள் தங்கள் பெயரால் பிரதிஷ்டை செய்த விலிங்கங்களு முள்ளன. வடதிக்கில் குபேரன் தனபெயரால் பிரதிஷ்டைசெய்த லிங்கமுந் தீர்த்தமும், இருடிகளனைவருந் தத்தம் பெயரால் பிரதிஷ்டைசெய்து பூஜித்த விலிங்கங்களு முள்ளன. ஈசானதிக்கில் ஈசானதேவன் பிரதிஷ்டைசெய்த ஈசானலிங்கமும், தீர்த்தமு முள்ளன; இலக்குமி கேள்வனுகிய நாராயணன் வருவித்த பாலோடையின வடகரையில் ஸப்த இருடியர் பிரதிஷ்டைசெய்த விலிங்கங்களும், தென்கரையில் அச்வினிதேவர் பிரதிஷ்டைசெய்த விலிங்கமு முள்ளன. இதுகாறுங் கூறிப்போந்த தீர்த்தங்களில் ஸ்நானஞ்செய்து ஆங்காங்குள்ள மூர்த்திகளைத் தரிசித்தோர் இம்மையிற் புத்திரப்பேறுந் தீர்க்காயுளும் நிறைந்த செல்வமும் பெறுவர். மறுமையி லிந்திராதிபோகமு நுகர்ந்து பின்னர் சிவஞானம்பெற்று முத்தராகுவர். பாலோடையின் மூழ்கினோர் எல்லாச் சித்திகளும் பெற்று ஆணவமுதலிய மலங்களொழியப் பெற்று ஆனந்தராகுவர். சித்தராய்வந்த பாடலேசர் பிரித்தருளிய கெடிலமுதலிய பன்னிரு திருப்பெயருள்ள திருநதியில் ஸ்நானஞ் செய்தோர் சிவமாந்தன்மைப் பெருவாழ்வடைவர். பெண்ணையை யடைந்து குடைந்தோர் தண் மதிபுனைந்த வண்ணல் பாதத்திற சூரியராவர். அந்த க்ஷேத்திரத்தி னுள்ள மணலுஞ் சிலையுமே சிவலிங்கமென்று வேதமுஞ் சிவாகம

மும் மந்திரங்களுஞ் சென்று பூஜித்துப் பேறுபெற்றன வென்றால் மற்றுங் கூறப்படுமோ? பண்டைக் காலத்தில் சசவுருவடைந்த நுபமன்னியர் இத் தன்மைத்தான பாடலவனத்திற்குவந்து தரிசித்துப் பரிசித்தே சாபத்தானேர்ந்த சசவுரு நீங்கி முன்னைய வுருவமடைந்து பரகதி யுற்றனர். ஆதலி னாண்டுசென்று சசவுரு நீங்கிச் சுத்தனாகுக என்றனர்.

அதைக்கேட்ட மங்கணர் விடைகொண்டு பற்பல கானமுஞ் சரித்த பின்னுற்றுவதாண்டு ஊற்றில் பாடலி வனத்தைய டைந்து திரிந்தகாலத்துக் கார்த்திகை மாதத்தில் சோமவாரத்தின் மாலைப் பொழுதில் பாடலேசனுக்குத் தோரண விளக்கேற்றி யாராதிப்பவைகளைக் கண்டதும் பூர்வ வுணர்ச்சி தோன்றியவுடனே கஜதீர்த்தத்தில ஸ்நாநஞ்செய்து திருவாலயத்தை வலம்வந்து சிவக்கொழுந்தீசனைத் தரிசித்து வாழுநாளில் ஒருநாள் ஓர் நாய்கண்டு துரத்த வதற்குப்பயந்து பாடலிமரத்தி னடித்தூறி னுழையவே அப் பாடலமரத்தின் ஸ்பரிசமுண்டாயிற்று. உடனே சசவுருநீங்கி முன்னையவுருவுடன் விளங்கவே கஜதீர்த்தம், பிரமதீர்த்தம், பாலோடை, பெண்ணை, கெடிலமுதலிய தீர்த்தங்களில் ஸ்நாநஞ் செய்து பாடலிநாதனை யருந்தவ நாயகியாரோடு பூஜித்துத் தரிசித்துத் திருவருள் பெற்று மங்கணர் முத்தி யடைந்தனர்.

## உபமன்னியர் சாபந்தீர்த்த சருக்கம்.



வேதமுற்றுணர்வியாதமாணாக்கனும்விரிதவவடிவான
சூதனுமப்பர்மங்கணர்க்குரைத்தவத்தொர்கதைதனின்முன்னா
மேதமுற்றுபமன்னியன்முயல்வடிவெய்தியத்தலர்தன்னிற்
கோதகற்றியதென்றதுமுரையெனக்கூறிடுமெம்மேலோன். (க)

அருளின்மேம்படுமுனிவிர்காள்கூறுதுமந்நகமான்மியதோதும்
பொருளைநீவிருமுணர்ந்தனிரப்பொருள்புலத்துற்மொழிகின்றுந்
தெருளுமேம்படுபத்தியால்வியாக்கிரபாதனுஞ்சிவயோகிக்
கொருவனுமுபமன்னியன்மைந்தனென்றுற்றிருந்தனனன்றே. (உ)

அன்னமாதவனம்பிகைக்கடிகளாலியற்றபராதத்தா
லென்னையாளுமைசசவடிவாய்வனதெய்வந்தனைச்சபித்தாளச்
சொன்னசாபத்தாலவ்வடிவாயவன்றீளங்கினனடிபோற்ற
வன்னையாங்கவற்குக்கடைஞாழலிலெய்துதியகல்வாயால். (ங)

என்றுரைத்தனளவவடிவெய்தியேயாங்கனுஞ்சரித்திப்பாற்
குன்றவில்லியார்பாடலவனத்தினிற்குறுகினனொருநாளங்
கன்றுவந்தனனதிராசேந்திரன்வேட்டையாலணைகாலை
மன்றநேருறுஞ்சசத்தினையப்பிணனூறியேவடுச்செய்தான். (ச)

பாடலத்தருமூலத்தினெய்தியவடுவொடும்பரிசித்து
நேடொணாத்தவமெய்தலுந்தீவினைநிகழ்முயலுருநீத்து
வீடுபெற்றவரென்னவம்முனிவரன்விளங்கவாங்கதுநோக்கிப்
பாடுபெற்றபோராதிராசேந்திரன்பதைத்தனனடுக்குற்றான். (ரு)

என்னவிச்சசமொருமுனிவடிவம்மங்கெய்தியதென்னோவார்ந்து
தன்னேரொருபதிஞர்முன்னூற்றுவர்தக்கவந்தணர்பாற்சென்
றுன்னிநீரிந்தவதிசயமுரை மின்களென்றலுமுவர்கூடிக்
கனனிபாகனையிரப்பவாங்குற்றனன்கலசமாமுனியம்மா. (௬)

கும்பமாதவன்பதாம்புயமருச்சித்துப்போற்றியுங்குரைக்கின்ற
ரெம்பிரானுரைத்தருளுதியிச்சமுனிவனுமியல்பென்னத்
தம்பிரானருள்புணர்தரும்யோகத்தாலனைத்துமம்முனிசாற்றக்
கம்பியாவுளநெகொண்டனனுதிராசேந்திரன்களிகூர்ந்தான். (எ)

அற்றைநாண்முதற்பரூட்டல்காயகனருட்டிருப்பணிபூசைக்
குற்றயாவையுமுதவியிங்குறைந்தனனெனடொடியுமைபாகம
பெற்றநாயகன்றிருவருட்குரியனும்பெறலருமபேறுற்றான்
சொற்றகும்பமாமுனிவனுஞ்சிவக்கொழுந்தீசனைத்துதித்துய்ந்தான்.

நிருமலத்தருவாகியபாடலத்துறவந்தநிகழ்வரலே
கருவகற்றுபமன்னியமுனிவனுங்கலர்தவன்புருவாகித்
தருணமாமதிவேணியனிலிங்கமுந்தாபித்துப்பூசித்துப்
பொருணயந்தருமானந்தவாரிதிபுணர்ந்துவீற்றிருந்தானல். (௯)

உணர்வின்மேம்படுசூதமாமுனிவரன்நைமிசத்திசையோங்கப
புணருமாதவரஞ்செவிநிறைதரப்புகட்டினனிக்காதை [ன்
துணர்செய்கொன்றையார்க்கமரராதியர்கள்செய்திறஞ்சொல்வாமெ
றிணையிலாதவம்முனிவனைவிஞயவர்க்கக்கதையிசைக்கின்றான். (௧0)

உபமன்னியர் சாபந்தீர்த்த சருக்க முற்றிற்று.

ஆகச்செய்யுள் ௬௬௪.

## உபமன்னியர் சாபந்தீர்த்த சருக்கம்.

பெறலருஞானத் திறனுறபத்தியை யடியேம் பெற்றிடப் பகர் தருசூதரே! பொருந்தரவணிந்த வங்கண னுறைதரு பாதிரிமூலத் தடைந்துபமன்னியன் சசவடிவாகுஞ் சாபமுதகலச் சார்ந்தனன நற்பரன் றிருவடியென்றனிர். அவவற்புதச் சரிதத்தீம்பா னுகர்தர வீண்டருள் செய்யெனப் பண்டைய நைமிச முனிவரர் வேண்டத் தொண்டருள்ளதநத் திந்திக்குமாறு வியாதமாணகன் நவில்வா னுயினன்.

தகராகாசத் திருவெளி யதனில் தாண்டவம் புரிதரு ஆனந்தவ னருட்கழல் பேணிநின்று பெருந்தவமுயலு மருந்தவராகுந் தபோத னர் வியாக்கிரபாதர் முற்றுறச்செய்த முடிவில் தவத்தாற்பெற்ற குமரர் உபமன்னியரெனபவர் பரசிவத்தி னருட்சத்தியாகிய பார்வ திதேவியைப் பூசிக்குந் தினங்களு ளொருநாள் முனிவரர்கால்அம்மை யெழுந்தருளிய பீடத்திற்பட வம்மையைதுகண்டு அறியாமற்செய்த வப்பிழை யகலுமாறு "நீ முயல்வடிவாகுக."எனச் சபித்தனள். உடனே முனிவரர் மிக நடுநடுங்கி யம்மை திருவடித் துணையில் நம ஸ்கரித்துச் சாபமகலுமாறு கனிவேண்டினர். உலக நாயகியாகிய தேவி "நீபாடலிவனத்தை யடைந்து வாழுநாள் நாமிருந் தருந்தவஞ் செய்ததும், எமதுநாத னெழுந்தருளப் பெற்றதுமாகிய பாதிரியடித் தின் கீழ் உன்மீதிற்பட முயலுருவொழிந்து முனியாகி முத்தியெய் துவை."என வருள்புரிந்தனள். அப்பொழுதே சசவடிவ மடைந்து உபமன்னிய முனிவர் பாடலவனத்தை யடைந்து வாழுநாளி லொரு நாள் அரசருட்சிறந்த ஆதிராசன் என்பவன் வேட்டையாடுவான் பரிவாரங்களோடு அவ்வனத்திற்புக்கு வேட்டை யாடுழி யிம்முயலை யாண்டுக்கண்டு அம்புவிடுத்தனன். அவ்வம்பு தாக்குண்டு காயமுற்ற

காயத்தோடு விரைந்தோடிப் பரமன் வீற்றிருக்கும் பாதிரி மூலத்தை யடைய அவ்விருக்ஷத்தின் கிளைதாங்க முயல்வடிவ மொழிந்து உபமன்னிய முனிவராகி நின்றனர். அதுகண்ட ஆதிராசன் அச்சமும் வியப்பு மொருங் குண்டாகச் சென்று அவ்வனத்தி லருந்தவ முயல குழுமிக்கொண்டிருந்த வந்தண ரடியிணையில் வீழ்ந்து தன் பாணம்பட்டு முயல் முனியாகிய அற்புதத்தைக் கூறி யிஃதென்னையோவென்ன வினவினன். அவ்வந்தணர்கள் ஆழ்ந்துணருமாறு சிவக்கொழுந்தீசன் திருவடிகளைச் சிந்திக்க வப்பொழுது குன்றமடக்கிக் குறைகடலுண்டு சந்தனத தென்றல் தமிழ் மணங்கவருந் தென பொதிகைத் தலத்துமைய வகத்திய முனிவ ரெழுந்தருளினர். அவரடிமலரை யந்தணர் பலரு முடிசூடி யிவ்வற்புதத்தை வினவ வம்முனிவர் சிவக்கொழுந்தீசனருளா லுபமன்னிய முனிவர் சிவார்ச்சனை செய்ததும், அப்பொழு தாசனத்தில் கால் பரிசித்ததும், அமமைகண்டு அறியாமலுந் தனக்குந் தன் பெருமானுக்கும் பிழைசெய்தல் கூடா தென்பதை மன்பதைக் குணர்த்து மாறு முயலாகெனச் சாபமளித்ததும், அடியாரெப்பிழை புரியினு மதனைத் தன் கருணையா லொழித தருள்புரிதல் தங்கட் கியற்கையென்பது தோன்ற பாடலிவனத்தி லகலுமென வருளபுரிந்ததும், அவ்வாறே வந்திருந்த முனிவரரசன் பாணத்தின் மொத்துண்டுமங்கி பாதிரிவிருக்ஷத்தை யடைய சாப மொழிந்தனரென்று மியம்பக் கேட்ட வந்தணர பெரு மகிழ்ச்சியுற்றனர். அன்றுதொட்டு ஆதிராசன் திருவாலயத்திறகு வேண்டிய நித்திய நைமித்திகங்களை நடாத்தி யின்புற்று முடிவில பாடலேசன திருவடி மலரில வாழ்ந்தனன். கும்பமுனிவர் பிரகந்நாயகியாரையும பாடலேசனையும பூசித்து வழிபட்டுத் தோத்திரித்துப் பொதிகைக கெழுந்தருளினர். உபமன்னிய முனிவர் சாபந்தீர்ந்த பின்னர் முன்னுணர்ச்சி வாய்ந்து அருந்தவம் புரிந்து பாடலேசன தரிசனபலத்தால் முத்தியடைந்தனர். முனிவீர்காள்! இனிப் பாடலிவனத்தைத் திருநகராக்கிச் சுரர்வழிபட்டகாண்டத்தையப் அகலுமென்று சூதா புகல்வாராயினர்.

# புரபாலனச் சருக்கம்.



சத்தியம்பிகையகளங்கைவடிவமாய்த்தழைத்ததோர்தனிச்சோதி
நித்தனுயகறத்துவம்யாவுந்தன்னிலையுறப்புரிகாலை
யித்தலத்தினைநிருமலவடிவமாம்பரைமனறமெனச்செய்து
முத்திநல்கியாயிரங்கலைமூலமாய்முளைத்திருந்தனன்மன்னே. (௧)

அன்னவண்ணமாயுகம்பலகடந்தபின்பாடலவனமாக
மன்னரியாண்டுகள்பற்பலசென்றபின்சித்தராயமகிழ்ந்தாடித்
தன்னையொப்பிலாவிஞ்சைசெய்காலையில்யோகியாய்ச்சிறந்தர்பான்
மன்னுமாணிக்கவாசகர்விரும்பவேபண்டுபோற்புரஞ்செய்தார். (௨)

ஆண்டுபெற்பலநீங்கலும்வனவடிவாகியதனைநீக்கித்
தாண்டவம்புரியெம்பிராற்காலயந்தனிநகர்முதல்யாவுந்
தூண்டுமுப்பதின்மூன்றுகோடியரெனுந்தொழுகுலப்பெருந்தேவர்
வேண்டும்வண்ணமேசெய்துபூசனைசெய்துவிரும்பியவரம்பெற்றார். ()

மற்றுமிந்நகர்ப்பாடலவனமெனமன்னினதோர்காலை
கற்றைவார்குழல்வாணிநாயகன்வந்துகவின்றருபுரஞ்செய்து
கொற்றவாயிலுங்கோபுரமுதலியவாலயங்குயிற்றாக்கி
முற்றுமாயொளிர்பாடலநாதனையருச்சித்தான்முறையாலே. (௪)

உருத்திரப்பெயர்க்கணங்களுமம்முறையுரைப்பருநகர்செய்து
திருத்தியாலயமுதலியபணிசெய்துசிவக்கொழுந்திறைதாளிற்
பொருத்துமன்பினிற்பூசித்தார்பரிதியும்வசுக்களும்புரஞ்செய்து
பருத்தவெள்விடைப்பாகனைப்பூசித்துப்பற்பலவரம்பெற்றார். (௫)

சங்கராதியநகுடனுந்திலீபனுஞ்சார்ந்தனர்புரஞ்செய்து
பகவனாகியசிவக்கொழுந்தீசனுக்காலயப்பணிசெய்தாங்
ககணிரம்பியவன்பினாலருச்சனைமுறையினாலணிந்தண்மி
யிகபரங்களைவேண்டியவேண்டியாங்கெய்திவாழ்ந்தனர்மேனாள். (௬)

புண்ணியம்புணராதிராசேந்திரன்பொருந்தியிர்கார்செய்தே
யண்ணலாலயமுதலியாவையுமடைவினிற்புரிவித்துத்
தண்ணறுமலர்க்கொன்றையாற்கருச்சனைசமைத்தனன்விழாமற்று
மெண்ணில்காலமுமல்கவேவைத்தவாறிலகுமிந்நகரின்றும். (௭)

பங்கயத்தடத்தீர்த்தமுந்தண்வனமுதற்பணியாவுந்
துங்கமானகர்சத்திரமடாலயங்கோபுரஞ்சுடர்கின்ற
திங்கள்வேணியராலயவருக்கமுஞ்செய்தவாவகுத்தாமற்
றெங்கணாயகன்றிருவிழாவெழுச்சியுமியம்புதுமுறையாலே. (௮)

புரபாலனச்சருக்க முற்றிற்று.

ஆகச்செய்யுள் ௧௭௨.



## புரபாலனச் சருக்கம்.



துரியாதீதனும் அமூர்த்தனுமாகிய சிவபெருமான ஜீவகோடிகளினிமித்தம் பஞ்சகிருத்திய நிகழ்த்தும்பொருட்டுச் சத்திகாரியத் திருவுருவங் கொண்டருளி யித்தலத்தைச் சத்திமனோமயமாக நிருமித்து அனந்த கலைகளோடு பாதிரிவிருக்ஷத்தின் மூலத்தி லெழுந்தருளியிருந்தனன். அங்ஙனம் பலயுகங்கள் கடந்தபினித்தலம் பாதிரிவனமாகி யனேகயுகங்க ளிருந்தது. பின் எல்லாம் வல்ல சித்தராய்ப் பாடலேசனெழுந்தருளி யற்புதத் திருவிளையாடல் பற்பலவற்றை யயர்வுழியாதிராயாக னருட்கழல் சூட்டிப் பேதவாதப் பிணக்கினை யொழிக்கும் போதஞானம் புந்தியிற் கொளுத்திச் சுத்தாத்வைதத் திருமறையாகு நித்தமாமொளிதரு திருவாசகமாஞ் சிவவொளி திகழ்தரு குணமணிமாலையைத் தம்மடிபுனைதரத் திருவுளமகிழ்ந்து பராபரஞான மாணிக்கவாசகனென்று தீக்ஷாநாமதானந் தந்திடப்பெற்ற வாதவூர்த்தேசிகரால் தமிழ்நாவலர் வேண்டத் திருநகரமாக்கினார். பின்பு பற்பல வாண்டுகள் சென்றபின் முன்போலவே வனமாயிற்று. பின்னர் முப்பத்துமுக்கோடித்தேவர்களும் பாடலிநாதனைத் தரிசிக்க வந்து வனத்தையழித்து மண்டபம் கோபுரம் திருமதில் முதலிய வுறுப்பமைந்த திருவாலயமும் மாடகூட முதலிய வனப்பமைந்த திருநகரமு முண்டுபண்ணித் தேவாதிதேவனைப் பூசித்துத் திருவிழா முதலிய சிறப்புப் புரிந்து வேண்டும் வரங்களைப்பெற் றகன்றனர். இங்ஙனம் பற்பல வாண்டுகள் கழிந்தபின் மீண்டும் வனமாயிற்று. அந்நாள் வாணிகேள்வன் திருவாலயமுந் திருநகருஞ் சமைத்துப் பூசித்துப படைக்குந் தொழிலும் உண்மை ஞானமும் சிறம்பா வரமும் பெற்றுச் சென்றனன். இவ்வண்ணம் பற்பலஆண்டு கழிந்தபின மீட்டும் வனமாயிற்று. அந்நாள் பதினொரு உருத்திரருந் திருநகராக

கினர். மறுவலும் வனமாகப் பன்னிரண்டாதித்தர்களும் அஷ்ட வசுக்களும் திருவாலயந் திருநகரங் கண்டனர். பின்னரும் வனமாகி விளங்க நகுஷன்சகரர் திலீபன்முதலிய அரசர்கள் திருநகரஞ்செய்து தரிசித்துப் பேறுபெற்றுச் சென்றனர். திரும்பவும் வனமாகவே யாக அன்புமருளும் சாந்தமும் பொறையும் வாய்மையும் சிவநேசமும் ஒரு வடிவங்கொண்டு வந்தாலன்ன ஆபிராசன் திருவாலயத்தையும் திருநகரத்தையும் விதிப்படி கட்டுவித்து நித்திய பூசையும் நைமித்தமாகிய திருவிழாவையுஞ் சிறப்பாக நடாத்தித் திருநந்தனவனமுந் திருமட முதலியவற்றையுங் கட்டுவித்துச் சிவக்கொழுந்தீசனருள்பெற்று முத்தியடைந்தனன்.

முனிவிர்காள்! அவ்வாலயமும் நகரமுந்தானின்றும் கைலையின் மிக்க சிறப்போடு விளங்குகின்றதெனப் புகன்றனர்.

---

## திருவிழாச் சருக்கம்



*
*
*
* (௧)

*
*
* (௨)
*

*
*
*
* (௩)

*
† தத்துமையுமெம்மானும்பலிப்பிரசாதஞ்செய்தெழுச்சி
நயந்தருபவனிபோந்தபினர்திகணபதிகந்தனுவரசு
பயந்தவன்ருளுந்தடிந்திறைபுகழைப்பரப்புதண்டீசனேமுதலோர்.()

தத்தமக்கடுத்தமுறையினிற்போதமாலயன்புட்களிற்சார
சித்தர்கந்திருவர்கின்னரரியக்கர்திசையினிற்றலைவர்களல்லா
வித்தகர்பதினெண்கணத்துளோரிருடிக்குழுக்களுமேனகையாதி
கொத்தலரளகத்தேவியர்பலருங்குழாங்குழாமாகவேபோந்த. (௫)

இயம்பலவியங்கத்துந் துபிமுழங்கவிருடிகளாசெடுத்திசைப்பச்
சயசயவெனவெண்சங்கமுமுரசுஞ்சின்னமுமார்ப்பெழச்சார்ந்து
வயந்தருபூதப்படைகளும்வீரவர்க்கமும்வாலகில்லியருஞ்
சயந்தனுமிபிரர்ந்தேவருஞ்சூழச்சாமரைதணித்தனியிரட்ட (சு)

அந்தரத்தெழுங்கல்லவடமுகிலணிசெயவலர்மணிவொளிகால, பந்தர்வின் ணிழற்றவிருசுடர்க் குழுக்கள் பரந்தெனமுத்த வெண் குடையுஞ், செந்தழல்கடுக்குமரத்தினக்குடையும்பதாகையுந்திசைதி சைபரவச்,சுந்தரத்தம்பத்தோரணத் துகிலின்வர்க்கமுமளவிலதுலங்க

மின்னிடைமடவார்பததொலியதனுலரம்பையராடலைவிரிபூம, பொன்னிணைவனப்பரால்விழியி ணுமகளைமுலையினிற்பொருப்பினைப் பூவைத், தன்னடிப்படுத்த ங்கிடையினந்தரமுந்தணித்தணிவென்ற னர்நடிப்ப, கன்னல்வேளனையகாளையர்மைந்தர்கணனியர்கவின்றுட ன்போத. (அ)

விரியுநான்மறையுந்தணித்தணிமுழங்கவிஞ்சையர்கீதமும்பண்ணிற்
புரியுமுத்தமிழிற்பழுத்ததேவாரமுழக்கமும்புணரியோதையினைப்
டரிபவப்படுத்தவூர்வனநடப்பப்பரிப்பனவாயவாகனங்க
ளெரிநவமணியிற்குயிற்றியாடசத்தார்ச்சித்திரித்தியற்றியபலவும். (கூ)

காலைமாலையினு மெழுந்தருள்புரிந்துகமலையுமுறைப்பரும்விடை யேற், கோலமல்லைகந்தாம் விழாவணிக்காட்சிக் கொடுத்துப்பின்னே ழெனப்பொலிநாண், மாலயன்போற்று நடேசுரருடல்வண்ணமுங்க ளித்தரவளித்துப், பாலலோசனனெம்மா னவதினத்திலிரதத்திற்பவ னிவந்தனனால். (க0)

பற்பலகுடையுமிடக்கயம்பொலியப்பவளத்திற்கால்பலபரப்பி, விற்பொலிகனகநவமணிகுயின்றவிட்டசட்டங்களாணிரைத்தாங்,கற் புதவிரிசூரியபடாம்போற்பவச்சுவமனேகங்களீர்ப்பப், பொற்புறுமிர தத்தெழில்கண்டுபோலும்பொன்மலைதலைகுனிந்ததுவே (கக)

கற்பகத்தருவிற்பவனிவந்தீரைந்தாகிய தினத்தினிற்கமழும்
பொற்பொடிச்சுண்ணம்வீசுமஞ்சன நீர்பொலிதரப்பருவத்திற்றீர்த்
தமும், பற்பலதேவர்மானிடருய்யும்படிகொடுத்தருளியாமத்திற்,றெப்
பமீதினில்வந்துலவியகாட்சிசேடனும்புகலுதற்கரிதால். (௧௨)

அந்தரத்துலவுந்தேவருமவனிமாக்களுமதிசயித்துறைஞ்ச, விட்டிரவி
மானப்பவனிகொண்டருளியாலயத்துள்புகுந்திடபச், சுந்தரக்கொடி
யின்விதிவழியவரோகணஞ்செய்துசுரர்நரர்போற்ற, வெந்தையும்
பெருமான்சிவக்கொழுந்தீசனிருந்தனன்புவியெலாந்தழைப்ப. (௧௩)

முன்னமே கயிலைத்திருமலையதனின்மொழிந்தருள்வாக்கினுண்
மையாங், கன்னிகையுளத்திற்களிதரமேன்மைக்கற்கடகப்பெயர்த்தி
ங்கண், மன்னுபூரத்திற்றிருமணவிதியால்வதுவைசெய்மணத்திருவி
ழாவுந் தன்னையொப்பரிதாயாண்டுகடோறுஞ்சாற்றரும்புகழினுல்
வயங்கும். (௧௪)

இப்பெருங்காதையியம்பியசூதமுனிவரரிணைக்கழல்வணங்கி
யொப்பறவொழுகுமுனிவருயர்ந்தவாசனத்தும்பரினிருத்தித்
திப்பியசாந்தநறுமலர்த்தூபதீபமேமுதற்பொருள்கொண்டு
செப்புதற்கரியபூசனைபுரிந்துசிவகதிசேர்ந்தனரன்றே. (௧௫)

திருவிழாச்சருக்கமுற்றிற்று.

ஆகச்செய்யுள் ௩௮௭.

---

திருப்பாதிரிப்புலியூர்ப்புராணம் முற்றுப்பெற்றது.

சிவசண்முகமெய்ஞ்ஞானதேசிகன்றிருவடிவாழ்க.

---

# திருவிழாச் சருக்கம்.

அன்பு பொறையும் பொறையும் வாய்மையுஞ் சிவநேசமுமே யோர் வடிவுகொண்டாலன்னமுனிவர்காள்! முத்திக்கு வித்தாகிய பாடலி நாதனுக்கு அடியார் பலருங் குழுமி மாசிமாதத்தில் சுக்கிலபட்சத் தில்ஷஷ்டி திதியன்று மகுடாகமத்திற் கூறியபடியே இடபக்கொடி யேற்றி யன்றிரவு சுரர் முனிவர் முதலிய வடியார்பலர் சூழ்ந்துவர, ஐவகைப் பிரிவினவாகிய ''வாத்தியமுழங்க, வேதியர்பலருங் கூடி வேதமோதச் சைவர்பலருங் குழாங் குழாமாகித் தமிழ்மறையோதி த்திருவலஞ்சூழ, அஸ்திரதேவர் முன்சென் றெண்திக்கிலு முள்ள தேவர்களுக்குப் பலிகொடுத்துச் செல்ல, விநாயகக்கடவுள் முருகக் கடவுள் சண்டேசநாயனார் முறையே யுடன்வர வற்புதமாகத் திரு விமானத்துத் தேவாதி தேவனாகிய பாடலி நாதனையும் பிருகந்நாயகி யம்மையையுந் திருவீதி வலமாகத் திருவெழுச்சிசெய்விப்பர். இர ண்டாந்திருநாள் காலையில் குண்டைகொடி சாமரைமுதலிய பொருள் ளெல்லாம் பொலியப் பற்பல வாத்தியங்களு முழங்க, அடியார் அரகர முழக்கம் பெருகச் சிவிகையின்மேல் ஏகதந்தர், சண்முகர், சண்டேசர் எழுந்தருள முத்துச் சிவிகையின்மேல் பாடலிநாதனும் பெரியநாயகித்தாயு மெழுந்தருளச் செய்வர். அன்றிரவில் தேவர் களுட் சிங்கம்போல்வார் சிவக்கொழுந்தீச ரென்பதை மன்பதை யறியுமாறு சிங்கவாகனத்தினும், அன்ன மந்திரத்தலைவி யென்பது தோன்ற பெரியநாயகி யம்மையை யன்ன வாகனத்தினுஞ் சூருரந் தடிந்த கூர்வடி வவேற் குகப்பெருமானை மயில்வாகனத்தினும், பிரணவுருப்பெருமானாகிய ஐங்கரக்கடவுளை மூஷிகவாகனத்தினுஞ் சண்டேசநாயனாரைத் திருவிமானத்தினுமாகச் சுரர்முனிவர்போற்ற, அடியார் நெஞ்ச நெக்குருக, மெய்ம்மயிர்சிலிர்ப்பக் கண்ணிலானந்த

வருவிபெருகப் பல்லியமுழக்கத்தோடு திருப்பவனி செய்விப்பர். மூன்றாந் திருநாள் காலையில் சிவிகையினும், அன்றிரவு பூதவாகனத்தினும் நான்காந் திருநாள் காலையில் சிவிகையினும், இரவில் நாக வாகனத்தினுந் திருவுலாப் போதுவிப்பர். ஐந்தாந்திருநாள் காலையில் அண்ணல் அதிகார நந்தியினும், அம்மை அன்னவாகனத்தினும், இரவில் ஐங்கரத்தோன்றல் அறுமுகக் கூரிசில் தண்டியடிகள் தத்தமக்குரிய வாகனத் தெழுந்தருளி முறையேவர, வண் கேள்வனுந் திருமறுமார்பனுந் தத்தமக்குரிய பட்சிவாகனத்தோடு போதர, இந்திரனுந் திக்குப்பாலர்களுந் தங்கள் தங்கள் மனைவியரோடு புடைசூழச் சித்தர் முனிவர் முதலியோ ரரகர முழக்கஞ்செய்து துதித்துவரக் கின்னரர் வித்தியாதரர் தேவகானம்பாட, அரம்பை மேனகை முதலிய பெண்கள் நடனம் புரியத், திருநந்திதேவர் வேத்திரப் படைகொண்டு நடுவணிருந்து சுரர் நரரென்கிற வேறுபாடில்லாத நெருக்கத்தை விலக்கப் பூதகணங்கள் திருக்குடை கவிக்கச் சிவகணங்கள் சாமரையிரட்ட, இடபவாகனத்தில் அப்பனும் அம்மையுமெழுந்தருளிக் காட்சி கொடுக்கப் பொலிதருவிப்பர். ஆறாந்திருநாள் காலையில் சிவிகையினும், இரவில் யானைவாகனத்தினும்; ஏழாந் திருநாள் காலையில் கைலாச வாகனத்தி லெம்பெருமானும் அன்னவாகனத்தி லெம்பெருமாட்டியும்; இரவில் இடபவாகனத்திலுந் தரிசனந்தந்தருளுவிப்பர். அன்றைக்கே நடேசருடலென்னு மற்புத வுற்சவமும் நிகழாநிற்கும். எட்டாந்திருநாள் காலையில் சிவிகையினும், இரவில்பரிமாவினும் பவனி வருவிப்பர். ஒன்பதாந்திருநாள் தேவனும் தேவியுங் கஜானனர் சரவணபவர் முதலியதேவர்களோடு திருத்தேரிலெழுந்தருளுவிப்பர். பத்தாந்திருநாள்காலையில் புட்பக விமானத்திலெழுந்தருளிச் சுரர் நரருய்யத் தீர்த்தோற்சவம் புரிவிப்பர். அன்றிரவு தெப்பத்தின்மீ தெழுந்தருளுவித்துச் சிவகரதீர்த்தத்தி னுலாப்போதுவித்துக் காட்சி கொடுத்தருளுவிப்பர். அதன்பின்னப்பொழுதே யிந்திரவிமானத் தெழுந்தருளச் செய்து திருவாலு

யத்துட் புக்குச் சுரர் பூசுரர் முதலிய வடியார் சூழ்ந்து போற்ற, இடபக்கொடியை யவரோகணம் புரிவித்துத் திருவீதிக்கெழுந்தருளுவித்துக் காட்சி கொடுத்தருளுவித்துத் திருவாலயத்திற் றிருவோலக்கத் திருமணி மண்டபத்து வீற்றிருந்தருளுவிப்பர்.

திரு நீ.யதாஜ்யருத்திராக்க வடம் பூண்டு துதித்த நாவினராய் அஞ்சலியத்தத்தொடு மெதிரேநின்று வேண்டு மடியார்களுக்கு வேண்டுவனவற்றை யருளிப் பாடலிநாதன் ஆடிமாசம் பூரத்தன்று பிருகந்நாயகியாரைத் திருமணஞ் செய்து கொண்டமுறைமையே ஒவ்வொரு ஆண்டுதோறு நிகழக் கயிலேயின் மிக்க சிறப்போடே வீற்றிருந்தருளுவரென்று பிரசங்கித்த சூதபுராணிகரைத் திவ்யாசனத் திருத்தி நறுமலர்மாலே வனைந்து பீதாம்பர முதலிய ஆடைபுனைந்து பொன்னணி பூட்டிச் சோடசோபசாரம் புரிந்து திருவடியில் வந்தித்து "அடியேங்க ளுய்யும்பொருட்டுத் திருப்புராணத்திலுள்ள வுண்மையை யுபதேசித்துச் சிவக்கொழுந்தீசன் றிருவடிக்காளாக்கிய சுவாமிகளுக் கடியேங்கள் செய்யும் கைம்மாறுளதோ" என்று தோத்திரித்து விடைபெற்று ருடியர்பலரும் வந்து பாடலிநாதனை பிருகந்நாயகியம்மையோடு தரிசித்துப் பூசித்துச் சிவகர தீர்த்தத்திலும் வாரிதியிலும் மூழ்கி முத்தி பெற்றனர்.

திருப்பாதிரிப்புலியூர்ப்புராணவசன
முற்றுப்பெற்றது.

# பரிசோதனபத்திரம்.

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௫ | [illegible] | [illegible] | பிரனடி | பிரானடி |
| ௩௩ | ௪௧ | ௨ | ..ன்னிலே | மங்நிலே |
| ௩௫ | ௫௫ | ௪ | மன்னுபரப்பு | மன்னும்பரப்பு |
| | ௫௬ | ௩௧ | வுயர்த்தும்பின்னு | வுயர்த்துப்பின்னு |
| ௩௬ | ௫௯ | ௪ | குீளதால் | குளவால் |
| ௩௮ | ௭௪ | ௨ | கரமுஞ் | கரசஞ் |
| ௪௯ | வசனம் | ௭ | முத்தியுமடையு | முத்தியுமடையும் |
| ௫௧ | ௨௩ | ௨ | கனங்கை | கணங்கை |
| ௫௨ | ௨௯ | ௩ | துரங்தெவ் | துறங்தெவ் |
| ௫௪ | ௩௮ | ௪ | துரைத்தார் | துரைத்தான் |
| ௫௭ | ௫௫ | ௩ | பூத்து | பூத்துச் |
| ௫௯ | ௬௬ | ௩ | சோதிக் | சோதி |
| ௬௪ | ௮௧ | ௫ | பேற்றேக | பெற்றேக |
| | ௮௨ | ௩ | கரங்தளின் | கரங்களின்ற |
| ௬௯ | வசனம் | ௧௩ | வெறறி | வெற்றி |
| ௮௭ | | | ஆகச் செய்யுள் ௬௩௭ | ஆகச் செய்யுள் ௬௧௭ |
| ௮௯ | வசனம் | ௨௩ | வாஸிஸ்ட | வாஸிஷ்ட |
| ௯௩ | ௧௧ | ௪ | வன்னிலே | வங்நிலே |
| ௯௪ | ௧௨ | ௪ | கடிலகதி | கெடிலகதி |
| ௯௫ | ௧௮ | ௨ | மன்னய | மன்றிய |
| | ௧௯ | ௧ | யதிசய்ம | யதிசயம் |
| ௯௬ | ௨௬ | ௪ | மகற்காய்க் | மகற்காக் |
| | ௨௯ | ௨ | கவுழுறப் | கவிழுறப் |
| [illegible] | | | ஆகச் செய்யுள் ௬௭௩ | ஆகச்செய்யுள் [illegible] |
| க0௨ | [illegible] | ௨ | கிரால்ம்பப் | கிராலம்பப் |
| க0௪ | ௨0 | ௪ | னெழிற்சி | னெழுச்சி |
| க0௫ | ௨௬ | ௪ | தென்னுளும் | தெங்காளும் |

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௧௦௬ | ௩௨ | ௩ | தன்ஞன்கு | தந்நான்கு |
| ௧௦௮ | ௪௪ | ௧ | மூன்னூறு | மூந்நூறு |
| ௧௧௦ | ௫௭ | ௪ | மாங்களெய | ம[illegible] |
| ௧௧௧ | ௬௩ | ௩ | தனஞ்சயபுரத்தோ | தனஞ்செயபுரத்தோ |
| ௧௧௨ | ௬௬ | ௪ | ரென்னே | தெனனே |
| ௧௧௫ | | | ஆகச் செய்யுள் ௫௫௮ | ஆகச் செய்யுள் ௫௩௮ |
| ௧௩௦ | | | ஆகச் செய்யுள் ௬௧௯ | ஆகச் செய்யுள் ௬௦௯ |
| ௧௩௫ | வசனம் | ௨௩ | உத்தரேச | உத்தாரேச |
| ௧௩௭ | ஷை | ௨ | கூறினர் | கூறினன |
| | ஷை | ௨௭ | வரவரைக் | வனவரைக் |
| ௧௪௪ | ௨௮ | ௨ | பொருவில் | பொருவின் |
| ௧௪௫ | ௩௧ | ௪ | போற்றினர் | போற்றினன் |
| | | | புனிதர் | புனிதன் |
| ௧௪௬ | ௪௧ | ௬ | ரயர்வருக்கு | ரயாவறுக்கு |
| ௧௫௦ | ௬௫ | ௧ | துந்துமி | துந்துபி |
| ௧௫௧ | | | ஆகச் செய்யுள் ௬௯௦ | ஆகச் செய்யுள் ௬௮௦ |
| ௧௬௪ | ௩௧ | ௪ | துலைவிலாப் | தொலைவிலாப் |
| ௧௬௬ | | | ஆகச் செய்யுள் ௭௨௮ | ஆகச் செய்யுள் ௭௧௮ |
| ௧௮௦ | | | ஆகச் செய்யுள் ௭௯௯ | ஆகச் செய்யுள் ௭௮௯ |
| ௧௯௧ | | | ஆகச் செய்யுள் ௮௪௮ | ஆகச்செய்யுள் ௮௩௮ |
| ௧௯௨ | வசனம் | ௨ | நாதன் | நாதர் |
| ௧௯௭ | ௨௩ | ௩ | நிரைத்து | நிறைத்து |
| ௧௯௮ | | | ஆகச் செய்யுள் ௮௭௩ | ஆகச் செய்யுள் ௮௬௩ |
| ௨௦௩ | | | ஆ-ச்செய்யுள் ௮௮௮ | ஆகச் செய்யுள் ௮௭௮ |
| ௨௧௬ | | | ஆகச் செய்யுள் ௯௫௪ | ஆகச் செய்யுள் ௯௪௪ |
| ௨௨௩ | | | ஆகச் செய்யுள் ௯௬௪ | ஆகச் செய்யுள் ௯௫௪ |
| ௨௨௭ | | | ஆகச் செய்யுள் ௯௭௨ | ஆகச் செய்யுள் ௯௬௨ |
| ௨௩௨ | | | ஆகச் செய்யுள் ௯௮௭ | ஆகச் செய்யு[illegible] ௯௭௭ |